உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும்
பளபளப்புடனும் விளங்கும்

# பிரில்க்ரீம்

தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!




பிரில்க்ரீம் மட்டுமே

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.
- உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.

**எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!**

**உலகமுழுவதிலும் லக்ஷகணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்**

*B/P/1/P/1/65 TM*




மூங்கிலின் மீது பருத்தி விளைவிக்க எங்களால் முடியுமென்று கூறிக்கொள்ளவில்லை நாங்கள். என்றாலும் அதற்கு அடுத்தபடியான ஒன்றை நிறைவேற்றுகிறோம். மூங்கிலையே பருத்தி போன்றதொரு பஞ்சாக மாற்றுகிறோம்.
கிராஸிம் ஸ்டேபிள் ஃபைபர் என்று நாங்கள் வழங்குகிறோமே அது இயற்கைப் பஞ்சு போலவே இருக்கும். பருத்தியோடு அதனைக் கலந்து நெசவு செய்வதனால் கிடைக்கும் துணி, மாறாத புதுமெருகோடு என்றும் பொலிவுடன் சோபிக்கும். கிராஸிம் செயற்கைப் பஞ்சுடன் பருத்தி இணைந்த துணிகள் உயரிய பண்புகள் கொண்டவை, மேனிக்கு இணக்கமானவை, அணியக் கச்சிதமானவை, நீடித்துழைப்பதோடு, சலவைக்கும் எளிதானவை. அதே சமயம் விலையும் மிகக் குறைவாக இருப்பது குறிப்பிடத்தக்கது. எனவே, துணி வாங்கும்போது குறிப்பிட்டுக் கேளுங்கள்:

## கிராஸிம் ஸ்டேபிள் ஃபைபர் இணைந்தது.

---

**க்வாலியர் ரேயான் ஸில்க் மானுபாக். (வீவிங்) கம்., லிட்., நாக்தா (ம.பி)**

தொழில்நுட்ப விவரங்களுக்கு தயவுசெய்து எழுதுக:
டெக்ஸ்டைல் ரிஸர்ச் டிபார்ட்மெண்ட், குவாலியர் ரேயான், இண்டஸ்டரி ஹவுஸ்,
159, சர்ச்கேட் ரிக்ளமேஷன், பம்பாய்-1.

# கல்கி

**அடுத்த இதழ் : சிறப்பு மலர்**

ஜெகசிற்பியன்
கு. அழகிரிசாமி
மறைநாயகன் (பரிசுக் கதை)

- ஆகியோரது சிறப்புச் சிறுகதைகள்
- அண்ணல் காந்தியின் அருளுரையினால் வாழ்வு மலரப் பெற்ற ஒருவரது உண்மை வரலாறு.
- நெடுங்கதை: நட்சத்திரப் பூ: வே. கோவிந்தராசன்
- பூதலூரில் விபத்து: விசேஷக் கட்டுரை: டி. எஸ். கே.
- திடீர்க் காதல் : ஹாஸ்யக் கட்டுரை: நாடோடி

மற்றும் பல சிறப்பு அம்சங்கள்

**அதிக பக்கங்கள் :: விலை 35 காசு**



## வெண்ணிலவுப் பெண்ணரசி

தமிழ் நாட்டின் நாகரிகமும் கலைவளமும் மிகவும் பழைமையானவை. உணர்வும் கலையழகும் நிரம்பியவை. கிரேக்கரும் ரோமானியரும் எழுதியுள்ள சரித்திரக் குறிப்புக்களிலிருந்தும் தமிழ் இலக்கியங்களிலிருந்தும் இந்த உண்மை நமக்கு நன்றாகத் தெரிகிறது. என்றாலும் கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கு முந்திய சரித்திரம் பற்றியும் அதற்கும் முந்திய சங்க காலச் சிறப்புப் பற்றியும் கூறுகிற தமிழ்க் கல்வெட்டுக்கள் இதுவரை நமக்குப் புலனாகாமலோ அல்லது முழுதும் புரியாமலோ தான் இருந்தன. பிராக்மி எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ள இந்தப் பழைமையான தமிழ்க் கல்வெட்டுக்கள் சமீபத்தில் நன்கு ஆராயப்பட்டுள்ளன. இத்தகைய கல்வெட்டுகளில் ஒன்று தான் மேலேயுள்ள படம்.

புதிதாகக் கிடைத்துள்ள இது போன்ற பல கல்வெட்டுச் செய்திகளையும், அருமையான பாடல்களையும், புலவர்கள் கூறும் சுவையான கதைகளையும் பின்னணியாகக் கொண்டு சோமு எழுதும் சரித்திரக் கற்பனை 'வெண்ணிலவுப் பெண்ணரசி'.

இந்தத் தொடர் கதையின் ஆரம்ப கட்டத்திலேயே வரும் கதாநாயகனையும் கதாநாயகியையும் இவ்விதழ் மேலட்டையில் சந்திக்கிறீர்கள். பின்னணியில் காட்சி தருவது கடம்பர்களின் வெள்ளைத்தீவு. ஓவியர்: வினு



# மக்களின் சிறு தொழில் பிரசினைகளைத் தீர்த்துதவுகிறது ஸ்டேட் பாங்க்

துவக்க விழாக் கொண்டாடி இதோ எழும்புகிறது இன்னுமொரு சிறு தொழில். எல்லாம் ஸ்டேட் பாங்கின் பெருமைமிகு திருப்பணி. நாடெங்கும் தங்களுக்குள்ள 2000 கிளைகள் மூலம் ஸ்டேட் பாங்கும் அதன் துணைபாங்குகளும் சிறு தொழில்களுக்குக் கீழ்க்காணும் வசதிகளை வழங்குகின்றன :

கச்சாப் பொருள்களையும் பூர்த்திபெற்ற சரக்குகளையும் பிணையமாகக் கொண்ட முன் பணக் கடன்கள்.

பாங்கிலே பூட்டிவைத்துக்கொள்ள முடியாத பிணையங்களாக இருக்குமிடத்திலே தொழிற்சாலை ரொக்க கடனுதவி.

பிணையங்களைப் பெறமுடியாத இடங்களிலே தூய கடன் வசதிகள்.

நவீன மயமாக்கல், விரிவுபடுத்தல் ஆகியவற்றுக்கான நடுத்தரக் காலக் கடன்கள்.

இயந்திரக் கருவிகளை வாங்குவதற்கான தவணைக் கடன்.

## சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்

# கல்கி பொருளடக்கம்

பார்த்திப, புரட்டாசி 9 – செப் 25



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## நினைவுத் திரையில்...

கேணியில் உள்ள தண்ணீரை இறைத்து விட்டால், அடியில் உள்ள நீர் ஊற்றிலிருந்து குபுகுபு வென்று தண்ணீர் மேலே வருமல்லவா? அதே மாதிரியாக மாமல்லரின் இதயமாகிற ஊற்றிலிருந்து சிவகாமியின் உருவம் இடைவிடாமல் மேலே வந்துகொண்டிருந்தது. ஆயிரமாயிரம் சிவகாமிகள் நெஞ்சின் ஆழத்திலிருந்து கிளம்பி மேலே மேலே வந்து மறைந்து போய்க் கொண்டே இருப்பார்கள்.

முகத்தில் புன்னகை பூத்த சிவகாமி, கலீரென்று சிரிக்கும் சிவகாமி, புருவம் நெரிந்த சிவகாமி, சோகம் கொண்ட சிவகாமி, பயத்துடன் வெருண்டு பார்க்கும் சிவகாமி, கண்களைப் பாதி மூடி ஆனந்த பரவசத்தில் இருக்கும் சிவகாமி, வம்புச் சண்டைக்கு இழுக்கும் விளையாட்டுக் கோபம் கொண்ட சிவகாமி - இப்படியாக எத்தனை எத்தனையோ சிவகாமிகள் மாமல்லரின் உள்ளத்தில் உதயமாகிக் கொண்டே இருப்பார்கள்.

கல்கி, ஜூலை 15, 1945

இந்த வேஷ்டிக்கு என்ன குறைச்சல்? நன்றாகத்தானே இருக்கிறது?

காங்கிரஸ்

குஜராத்

கேரளா

ஒரிஸ்ஸா

வங்காளம்

உத்தரப் பிரதேசம்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்





மலர் 26 ■ இதழ் 8

# சுருக்குக் கயிறு இறுகுகிறது!

**ப**ழைய பல்லவியைப் புதிய சுருதியில் அமைத்திருக்கிறது காங்கிரஸ் கட்சியின் தேர்தல் அறிக்கை. முந்திய மூன்று தடவைகள் பாடிய அதே பல்லவி. ஆனால் அதற்கே அதிக அழுத்தம் தந்து இப்போது பாடியிருக்கின்றனர்.

'சோஷலிஸ்டு சமுதாயம்', 'சோஷலிஸ பாணி', 'க்ஷேம அபிவிருத்தி ராஜ்யம்' இவற்றுடன் 'ஜனநாயக சோஷலிஸம்' இப்போது சேர்ந்திருக்கிறது. ஆனால் இதனுடைய நிச்சயமான, தெளிவான, சாதாரண மக்களுக்குப் புரியும்படியான அர்த்தம் என்ன என்பது முந்திய அறிக்கைகளில் முந்திய வாசகங்களில் எவ்வாறு கூறப்படவில்லையோ, அவ்வாறே இப்போதும் கூறப்படவில்லை. எனவே, அவரவர்களுடைய மனோபாவத்துக்கு ஏற்றபடி இதற்கு வியாக்கியானம் செய்து கொள்ளலாம். ஆனால் இதை ஓர் ஏமாற்று மந்திரமாகச் சொல்லித்தான் காங்கிரஸ் வோட்டு கேட்கிறது.

ஜனநாயக சோஷலிஸம் என்பது முரணான இரண்டு கருத்துக்கள் கொண்டது. சோஷலிஸம் பூரணமாக அமைக்கப்பட வேண்டுமானால் (கம்யூனிஸ நாடுகளில் நிலவுவதும் சோஷலிஸம் தான்) பலாத்காரமின்றி முடியாது. ஜனநாயக முறை பலாத்காரத்துக்கு எதிர்மறை. எனினும் இவ்விரண்டையும் இணைத்துக் 'கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை' என்ற வகையில் தேர்தல் விண்ணப்பத்தின் அடிப்படையைக் காங்கிரஸ் அமைத்துள்ளது.

நான்காவது திட்டம்தான் தேர்தலின் ஜீவநாடி. இத்திட்டம் பற்றி அரசியல்வாதிகளும், அறிஞர்களும், தொழில் துறையினரும், பேராசிரியர்களும் அலசி அலசிக் கருத்துத் தெரிவித்துள்ளார்கள். எல்லோருமே ஒன்று பட்டாற் போல, "திட்ட இலக்குகள் அதிகம், வசதிகள் குறைவு, பிரத்தியட்ச நோக்குடன் திட்டத்தைக் குறைத்துக்கொள்ள வேண்டும்" என்று கூறியிருக்கின்றனர். ஆனால் இதை விட்டால் கதியில்லை என்று திட்டத்தைக் காட்டியே காங்கிரஸார் வோட்டுக் கேட்க வேண்டியிருக்கிறது! முந்தைய திட்டங்களின் படிப்பினைகளையாவது தெரிந்து கொண்டார்களா? இல்லை, மூன்று திட்டங்களின் பலன்களையும் நாம் கண்கூடாக அநுபவித்து வருகிறோம். தொழில் துறையில் உற்பத்திக் குறைவு, உணவுப் பற்றுக்குறை, ரேஷன்கள், தாங்க முடியாத வரிச் சுமை, பட்டினிக்கு உந்தித் தள்ளும் விலை உயர்வு, அத்தியாவசியமான பண்டங்களுக்குத் தட்டுப்பாடு, அந்நியக் கடன் சுமை, ஏற்றுமதி—இறக்குமதி ஏற்றத்தாழ்வு, எல்லாவற்றுக்கும் மகுடம் வைத்தது போல் ரூபாயின் வெளிநாட்டு மதிப்புக் குறைப்பு, நாடும் மக்களும் 'இன்ஸால்வெண்டு' ஆகிக் கொண்டிருக்கும் நிலை—இவை எல்லாம் காங்கிரஸ் ஆட்சியின் வரப்பிரசாதங்கள். இந்த நிலையை மேலும் நீடிக்கச் செய்வதோடு மட்டுமின்றி முன்னிலும் பன்மடங்கு கடுமையாக்கவே புதிய திட்டமிட்டிருக்கிறது காங்கிரஸ் கட்சி.

இன்று நாட்டு மக்களின் நிலைமையைக் கொண்டே காங்கிரஸ் கட்சியின் சாதனையை மக்கள் கணிக்க வேண்டும். உள்நாட்டில் வறுமை நிலை, வெளிநாட்டில் கடன் சுமையால் தன்மானம் குன்றிய நிலை, அண்டைநாடுகளுடன் எக்கணமும் போர் மூளக் கூடிய நிலை, மக்களின் மனத்தில் பீதி, பிற்காலத்தைப் பற்றிய குழப்பம் ஆகியனவே பாரதத்தின் இன்றைய நிலைமை. இவற்றின் வெளித் தோற்றமாக மாணவர் கிளர்ச்சிகளும், லஞ்சமும், ஊழலும், அராஜகமும் ஏற்பட்டுள்ளன. பக்ரா அணையையும், பிலாய் உருக்குச் சாலையையும், பெரம்பூர் ரயில் பெட்டிச்சாலையையும், காந்தியடிகள் பெயரையும் எவ்வளவுதான் நினைவு படுத்தி வோட்டுப்பெறப் பார்த்தாலும், தினசரி அநுபவித்துக் கொண்டிருக்கும் நிலைமையை மறக்க யாரால் முடியும்?

பழைய தவறுகளைத் திருத்திக் கொள்வது குறித்து ஆளும் கட்சியினரின் தேர்தல் விஞ்ஞாபனத்தில் எவ்விதப் பேச்சும் இல்லை. மாறாக 'மேலும் வரிச் சுமைகளை ஏற்கவேண்டும், நாட்டுப்புற மக்களின் வாழ்க்கை உயர வகை செய்யாவிட்டாலும் நகர்ப்புற மாந்தர்களின் வாழ்க்கையைத் தாழ்த்திவிட வேண்டும், விட்டுப் போன ஒன்றிரண்டு தொழில்களைச் சர்க்கார் உடைமையாக்க வேண்டும், கூட்டுறவுத் தொழில்களை விருத்தி செய்ய வேண்டும்' என்ற உளுத்துப் போன கருத்துக்களைக் கதம்பமாகக் குவித்து, மக்களை ஏமாற்றத் தயாரிக்கப்பட்டுள்ளது இத் தேர்தல் அறிக்கை.

விலைகள் குறைய வழி என்ன? உற்பத்தி பெருக வழி என்ன? இவற்றுக்கு விடை காண்பதே நாடு உயிர் வாழ்வதற்கு அத்தியாவசியமாகும். தனியார் தொழிலில் சுதந்திரம் வலுப்பட்டு, அரசாங்கக் கட்டுப்பாடுகள் நீங்கினாலொழிய உற்பத்தி பெருகாது, விலைகளும் குறையா. ஆனால் காங்கிரஸோ இந்தப் பாடத்தைப் பத்தொன்பதாண்டு அநுபவத்துக்குப் பிறகும் கற்க முன்வரவில்லை. 1962 தேர்தல் விண்ணப்பத்தில் தனியார் சர்க்கார் இரண்டும்பங்குபெறும் கலப்புப் பொருளாதாரம் பற்றிப் பேசியவர்கள், இப்போதோ தனியார் துறையை அழிப்பதில் அதிகத் தீவிரமாக இருக்கிறார்கள். இப்படிப்பட்ட குருட்டுத்தனத்தையும், முரட்டுத்தனத்தையும் எந்த விவேகமுள்ள மக்களும் ஒப்ப முடியாது. 'உற்பத்தியும் விலைவாசியும் எப்படிப் போனாலும் சரி; பணக்காரர்களை அழிக்கிறோம் என்ற பொய் வாதத்தைச் சொல்வதாலேயே மக்கள் ஆதரவைப் பெற்று விடலாம்' என்று காங்கிரஸ் எண்ணுகிறது. மக்கள் தங்கள் நிலை உயர்வதைவிட, வசதியுள்ளவர்களை ஏழையாக்குவதில் அதிகத் திருப்தி கொள்வார்கள் என்று எண்ணுகிறது. அசூயை மீது அமைந்த இந்தச் சித்தாந்தத்தைப் பாரதம் ஒரு போதும் ஏற்காது என்று நிரூபிக்க வேண்டியது மக்கள் பொறுப்பு. வரிச்சுமையும் விலை உயர்வும் இறுதியில் பொதுமக்கள் மீதே விழுகின்றன என்பதையும், காங்கிரஸ் கட்சி எவ்வளவுதான் சோஷலிஸ வாதம் செய்தாலும் பண பலத்திலேயே அக்கட்சி உயிர் வாழ்கிறது என்பதையும் மக்கள் கவனிக்க வேண்டும். இந்தத் தேர்தல் அறிக்கையைப் பார்த்த பிறகேனும் மக்கள் தங்கள் கழுத்தைச் சுற்றியுள்ள கயிறு இறுகுவதை உணர வேண்டும். அடுத்த தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்கு ஓய்வு கொடுக்க வேண்டும்.

# பாங்குகளுக்குத் தலைவலி

'பாங்குகளும் கடன் வசதியளிக்கும் இதர ஸ்தாபனங்களும் இப்போதைவிட அதிகமாக அரசாங்க ஆதிக்கத்துக்குள் கொண்டு வரப்பட வேண்டும் என்கிறது காங்கிரஸ் கட்சியின் தேர்தல் விண்ணப்பம். சர்க்காரின் உடைமையாக்கப்பட வேண்டும்' என்று பச்சையாகச் சொல்வதற்குப் பதில் 'சமூக ஆதிக்கம்' என்று கூறியிருக்கிறார்கள். புரியாத கோஷங்களைச் சொல்லி மக்களை மயக்குவதில் அநுபவ முன்னவர்களாதலால் 'சமூக ஆதிக்கம்' என்ற ஒன்றைச் சொல்கிறார்கள்!

பாங்குத் துறையில் ஏறக்குறைய மூன்றில் ஒருபகுதி அரசாங்கத்தின் நேரடி ஆதிக்கத்தின் கீழ்தான் இப்போதே இருக்கிறது. ஸ்டேட் பாங்கு அரசாங்கத்தினுடையதே. மீதமுள்ள தனியார் துறையினர் நடத்தும் பாங்குகளெல்லாம்கூட அரசாங்கத்துடைய ரிசர்வ் பாங்கியின் மேற்பார்வைக்கும், கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டே செயல்படுகின்றன. இக்கட்டுப்பாடுகளும், கண்காணிப்புகளும் மிகக் கடுமையானவை. தொழில் ஸ்தாபனங்களுக்குக் கடன் வழங்குவதில், ஏறக் குறைய முழு அளவுக்குச் சர்க்காரின் இஷ்டத்துக்குட்பட்டே பாங்குகள் நடக்கின்றன. தவிரவும் பாங்குகளின் ''டிபாஸிட்டு''த் தொகைகளில் பெரும் பகுதி அரசாங்கக் கடன் பத்திரங்களில் விடுமுதல் செய்யப்பட வேண்டும் என்ற நிர்ப்பந்தமும் இருக்கிறது. ஆகவே பாங்குகளை அரசாங்க உடைமையாக்குவதன் மூலம் என்னென்ன சாதிக்க வேண்டும் என்று சர்க்கார் எண்ணுகிறார்களோ, அவை அனைத்தையும் இப்போதே சாதித்துக் கொண்டுதான் இருக்கின்றனர்.

'சமூக ஆதிக்கம்' கொண்டுவந்து புதிதாக என்ன சாதிக்கப் போகிறார்கள்? கூட்டுறவு முறைகளில் ஆட்சியாளர்களுக்கு அபரிமிதமான நம்பிக்கை இருப்பதால், இம்முறையில் இயங்கும் பல்வேறு தொழில்களுக்கு அதிகமாகக் கடன் வசதிகள் கொடுக்க பாங்குகளை ஒருகால் நிர்ப்பந்திக்கக் கூடும். அவ்விதம் நேருமேயாயின் நாட்டுக்கு அனர்த்தம்தான் விளையும். கூட்டுறவுத் தொழில்களுக்குக் கொடுக்கப்படும் கடன்கள் எவ்வாறு உபயோகிக்கப்படுகின்றன என்பது மக்களுக்கு நன்றாகத் தெரியும். இத்துறையில் கண்மூடித்தனமாகச் செயல்பட்டால் பாங்குத் தொழில் நசிக்கும்.

நம்பிக்கையின் அடிப்படையில்தான் தங்கள் உபரிப் பணத்தையோ சேமிப்பையோ மக்கள் பாங்குகளில் இருப்பு வைத்துக் கொள்ளுகின்றனர். பாங்குக் கணக்குகளில் ஓர் இரகசிய அம்சமுண்டு. பாங்குகள் சர்க்கார் உடைமையாக்கப்பட்டால், டெபாஸிட்டுதாரர்களின் நம்பிக்கை அழிந்து போகும். பாங்குத் தொழிலே க்ஷீணமடையும். பாங்குகள் மீது ஆதிக்கம் செலுத்துவதன் மூலமாக பாங்கு டெபாஸிட்டுதாரர்களின் மீதும்கூட ஆதிக்கம் செலுத்த அரசாங்கத்துக்கு அதிகாரம் கிடைக்கும். அவர்களைத் தகாத முறையில் நிர்ப்பந்தங்களுக்கு உள்ளாக்கவும் சாத்தியமாகலாம். இவையெல்லாம் கம்யூனிஸ்ட் நாடுகளில் சகஜமான நடவடிக்கைகள்.

அரசாங்கத் துறைத் தொழில்கள் மேலும் விரிவடைய வேண்டும் என்று தேர்தல் அறிக்கையில் வற்புறுத்தப் பட்டிருப்பதோடு, பாங்கு விஷயத்தையும் இணைத்துப் பார்த்தால், பாங்குகளை அரசாங்க ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவந்து கடன் வசதிகள் பூராவையும் சர்க்கார் தொழில்களுக்கே பயன்படுத்திக் கொள்வதுதான் இலட்சியமோ என்றெண்ணத் தோன்றுகிறது. நாட்டின் எதிர்காலத்துக்கு இந்தப் போக்கு தீமையே விளைவிக்கும்.

ஐ. நா. சபைப் பிரதம காரியதரிசி ஊ தாண்ட் அவர்களின் அழைப்பைப் பெற்று அக்டோபர் 23-ந் தேதியன்று ஐ. நா. சபையில் இசைக் கச்சேரி வழங்கவிருக்கும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் இம்மாதம் 18-ந் தேதி சென்னையிலிருந்து புறப்பட்டார். அவருடன் ஸ்ரீ சதாசிவம் அவர்கள், ஸ்ரீமதி ராதா விசுவநாதன், ஸ்ரீமதி விஜயா ராஜேந்திரன் ஆகியோரும் பக்கவாத்திய வித்வான்களாக ஸ்ரீ வி. வி. சுப்பிரமணியம் (வயலின்) ஸ்ரீ டி. கே. மூர்த்தி (மிருதங்கம்) ஸ்ரீ டி. எச். விநாயகராம் (கடம்) ஆகியோரும் சென்றனர். சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் கலைஞர்களும் பிரமுகர்களும் பொதுமக்களும் பெருந்திரளாகக் குழுமியிருந்து அவர்களை வாழ்த்தி வழியனுப்பிய காட்சிகளில் சிலவற்றை இங்கு காண்கிறோம்.

# என்ன சேதி?

**ஒரிஸ்ஸாவின் எச்சரிக்கை**

**ஜகஜ்ஜீவன்ராமுக்கு நன்றி!**

**சபாஷ், தென் [வியத்நாம்!**

ஒரிஸ்ஸா மந்திரி சபைக் குழப்பம் ஒருவாறு முடிந்து விட்டாலும் அதில் தொக்கி நிற்கும் பாடத்தைப் பொதுமக்கள் நன்றாக உணர வேண்டும். அதாவது, காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கட்சியாகவே மாறிவிட்டது என்பது தெளிவாகி விட்டது. வருகிற தேர்தலில் காங்கிரஸுக்கு வோட்டு அளிப்பது கம்யூனிஸத்துக்கு வோட்டளிப்பதாகும்!

ஒரிஸ்ஸா ராஜ்யத்தில் காங்கிரஸ் கட்சி மிக பலவீனமாக உள்ளது. வருகிற தேர்தலில் காங்கிரஸ் வெற்றிபெற வேண்டுமானால் ஸ்ரீ பட்நாயக் கட்சிக்குத் தலைமை வகித்து நடத்தினால்தான் முடியும் என்று காங்கிரஸ் அக்ராசனர் திரு காமராஜ் கருதுகிறார். ஆனால் கட்சிக்கு மட்டும் ஒருவர் தலைவராக இருந்து, ராஜ்யத்தின் ஆட்சியை மனச்சாட்சிப்படி நடக்கும் வேறு ஒருவர் வகித்தால் தேர்தல் காரியங்களைச் சரிவர நடத்த முடியாது என்பது ஸ்ரீ பட்நாயக்கின் உள் நோக்கம். இதற்காகத்தான் பல குளறுபடிகளைத் திரு பட்நாயக் விளைவித்தார். அது எப்படி முடிந்தது என்பது இப்பொழுது யாவரும் அறிந்த விஷயமாகிவிட்டது.

கட்சித் தலைமையும், ஆட்சித் தலைமையும் ஒன்றாக இருக்க வேண்டும்; ஒருவரே இரண்டுக்கும் தலைவராக இல்லாவிடினும், கட்சித் தலைவர் சொற்படி கையெழுத்துப் போடும் ஒருவரிடம் ஆட்சிப் பொறுப்பு இருக்க வேண்டும் என்று கருதும் நிலைமைக்குக் காங்கிரஸ் வந்து விட்டது.

இத்தகைய நிலைமையைக் கம்யூனிஸ்ட் நாடுகளில்தான் காணலாம். காங்கிரஸ் தனது கொள்கைகளையும், திட்டங்களையும் கம்யூனிஸ சித்தாந்தப்படி வகுத்துக் கொள்கிறது என்றால், தனது நிர்வாக அமைப்பையும் கம்யூனிஸ முறைப்படியே வகுத்துக் கொள்ளத் தீர்மானித்துவிட்டது.

இச்சந்தர்ப்பத்தில் ஜனநாயக ஆட்சி முறையில் கட்சிகளும் ஆட்சியும் எப்படிச் செயல்படும் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஜனநாயக நாடுகளின் ஆட்சித் தலைவர் தம் கட்சிக்கு வோட்டளித்தவர்களுக்காக மட்டும் தாம் ஆட்சி நடத்தவில்லை; எதிராக வோட்டளித்தவர்களுக்காகவும் ஆட்சி நடத்துகிறோம் என்று நினைத்து மனச்சாட்சிப்படி நேர்மையாக நடக்கப் பார்ப்பார். கட்சித் தலைவர் சொற்படியல்ல!

மந்திரி ஜகஜ்ஜீவன்ராம் அவர்கள் எத்தகைய ஹிந்தி வெறியர் என்பதைக் காண்பித்துக்கொண்டுவிட்டார்! ஆனால் அவர் கொக்கின் தலையில் வெண்ணெய் வைக்கும் கதையாக, மற்ற மொழிகள் பேசுபவர்களின் அநுதாபத்தைச் சம்பாதிக்க முயன்றிருக்கிறார். "இந்த ஆங்கிலம் இருப்பதால்தான் மற்ற மொழிகள் முன்னேறவில்லை. இடையூறாக இருக்கிறது. ஆங்கிலத்தை அப்புறப்படுத்திவிட வேண்டும்!" என்று கூறுகிறார். அதே மூச்சில் ஹிந்தியை நிர்வாகத்தில் மேலிடத்திலிருந்து அடிமட்டம் வரையில் புகுத்திவிட வேண்டும் என்று சொன்னால், அந்த ஹிந்தி மற்ற மொழிகளின் வளர்ச்சிக்கு இடையூறு செய்யாதா என்று கேட்பார்களே என்று சற்றும் சிந்தித்துப் பார்க்கவில்லை. பரிதாபம்!

ஆங்கில அறிவினால், விஞ்ஞானம், தொழில் நுட்பம், வைத்தியம், வான சாஸ்திரம், பூகர்ப்ப சாஸ்திரம் முதலிய மேனாட்டு அறிவியற் கலைகள் எல்லாம் கற்று முன்னேற வாய்ப்பிருக்கையில், ஹிந்தியினால் என்ன பயன்?

'வட நாட்டில் ஹிந்தியைத் திணிக்கும் வெறி அடங்கிவிட்டதோ என்று சமீப கால அமைதியைப் பார்த்து ஏமாந்து விடாதீர்கள்' என்று தென்னக வாக்காளர்களுக்கு எச்சரிக்கையாக மந்திரி ஜகஜ்ஜீவன்ராம் அவர்களின் பேச்சு அமைந்துள்ளது. இப்படி நம்மை விழிப்படையச் செய்ததற்கு அவருக்கு நன்றி.

நீண்ட காலமாக நடந்து கொண்டு வரும் கடுமையான போரின் மத்தியிலும் பொதுத் தேர்தலை வெற்றிகரமாகத் தென் வியத்நாம் நடத்தி முடித்ததைக் கண்டு ஜனநாயகத்தில் பற்றுள்ள எல்லா நாடுகளும் மகிழ்கின்றன. இந்தியாவிலும் இச் செய்தி மகிழ்ச்சியைத் தரும். தேர்தல் நடைபெறாமல் செய்ய வியத்நாம் கம்யூனிஸ்டுகள் தங்கள் முழு சக்தியையும் பிரயோகித்தனர். வோட்டுச் சாவடிகளை வெடி வைத்துத் தகர்த்துப் பலரைக் கொன்றும், பயமுறுத்தியும் தேர்தலைத் தடுக்க முயன்றனர். வாக்குப் பெட்டிகளை ராணுவப் பாதுகாப்புடன் அனுப்பித் திட்டமிட்டபடி தேர்தல் நடத்திய வீரம் தென் வியத்நாம் பிரதமரைச் சேரும். அதைவிட ஆச்சரியப்படக்கூடிய விஷயம் 55 லட்சம் வாக்காளர்களில் 40 லட்சம் வாக்காளர்கள் வோட்டுச் சாவடிக்குச் சென்று வாக்குகளைப் பதிவு செய்திருக்கின்றனர். தேர்தல்களின் முடிவைப்பற்றி நமக்கு அக்கறை இல்லை. ஜனநாயக முறையில் பற்றுள்ள நாடு தென் வியத்நாம் என்பது நிரூபணமாகிவிட்டது. கம்யூனிஸ்ட் சார்புள்ள வியட்காங் படையினர் தங்களுக்கு மிகுந்த செல்வாக்கு இருக்கிறதென்றும், அமெரிக்க ராணுவ பலம் மட்டும் சைகோன் அரசாங்கத்தைத் தாங்கி நிற்காவிட்டால், தென் வியத்நாம் வியத்காங் வசமாகிவிடும் என்றும் செய்த பிரசாரங்களுக்கு எல்லாம் மறுப்புக் கூறும் வகையில் இத்தேர்தல் அமைந்தது. அரசியல் துறையில் தென் வியத்நாம் கம்யூனிஸ்டுகளுக்கு எதிராக விடை தந்த வெற்றி இது.

BENSONS2/NGB-101C TAM

# அவள் கல்யாணத்தில் எங்களுக்கு அளவில்லாத மகிழ்ச்சி

ஆம், மிகவும் மகிழ்ச்சியடைந்தோம். எங்களது சொற்பமான வருமானத்தில் சீதாவுக்கு இவ்வளவு நன்றாக கல்யாணம் நடக்குமென்று யார்தான் எதிர்பார்த்தார்கள்?

பல வருஷங்களுக்கு முன் நண்பர் ஒருவர் மாதா மாதம் ஒரு சிறு தொகையை நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸில் சேமித்து வரும்படி எங்களை தூண்டினார்.

நாங்கள் போடும் தொகை சிறிதாக இருந்தால் அதை அவர்கள் வாங்கிக் கொள்வார்களோ என்றுகூட சந்தேகமடைந்தோம். ஆனால் அதுதான் இல்லை.



நீங்கள் ஐந்து ரூபாய்களைக் கொண்டு ஒரு சேவிங்ஸ் பாங்கு கணக்கை ஆரம்பித்து விடலாம். ஆம், ஐந்தே ரூபாய் இருந்தால் போதும்.

அதோடு மட்டுமில்லை, ஆண்டுதோறும் 4% வட்டியும் சேர்ந்து உங்கள் சேமிப்பு வளரும்.

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸில் எப்பொழுதும் மரியாதையும் திறமையான சேவையும் உங்களுக்கு கிடைக்கும். அது மிகவும் நல்ல பாங்க் என்பதை நீங்களே உணர்வீர்கள்.

இன்றே நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கின் கிளைக்கு சென்று பாருங்கள்.

*நீங்களும் நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கும் உற்ற நண்பர்களாகி விடுவீர்கள்!*

## நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

பிரிட்டனில் இணைக்கப் பெற்றது . அங்கத்தினர்களின் பொறுப்பு அளவிடப்பட்டது.

அசோஸியேடட் பாங்குகள்: லாயிட்ஸ் பாங்கு லிமிடெட். நேஷனல் புரோவின்ஷியல் பாங்கு லிமிடெட்

**கிளைகள்:** சென்னை: 3. நார்த் பீச் ரோடு; 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு. (லாயிட்ஸ் கிளை); 6. அரமனைக்காரத் தெரு; 158, மவுண்ட் ரோடு; தூத்துக்குடி: 44. பீச் ரோடு; ஹைதராபாத்: அபித் ரோட்

# காற்றினிலே வரும் கீதம்

ரா. கணபதி



அத்தியாயம் 4

## திரை விழுந்தது!

**வி**ழித்தெழுந்த மீராவின் விழிகள் கிரிதர விக்கிரகத்தின் மீது நிலைத்தன. அன்னையின் மடியிலிருந்து எழுந்திருந்து கண்ணன் அடிகளைச் சென்றடைந்தாள் பாலகி. கிரிதரமூர்த்தியின் கழலிணைக் கட்டி அணைத்து, அவனது பாதத்திலேயே தனது முகத்தைப் பதித்துக் கொண்டு விசும்பினாள்.

ரத்தன் சிங்கும், சந்திரமுகியும் குழுமியிருந்த மற்ற பக்தர்களும் இனந் தெரியாத துயரத்துடன், அச்சத்துடன் மீராவைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ரூபகோஸ்வாமி ஆனந்தக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார். தமது அதரமும் தாடியும் துடிக்க அவர் நிர்மலமான நயனங்களிலிருந்து நீரைப் பெருக்கியது மாமலை ஒன்றிலிருந்து புனித நதி இழிவது போல் இருந்தது.

அவையோரை நோக்கினார் ரூபர். "நீங்கள் யாவரும் என்னையும் இந்தப் பெண்ணையும் தனியே விட்டு வெளியே செல்லுங்கள்" என்று பணித்தார்.

மன்றம் காலியாயிற்று.

குழந்தை மீராவின் விம்மல் ஒலியும் அடங்கி வந்தது.

பயபக்தியுடன் அவளிடம் நெருங்கி அமர்ந்தார் ரூபர்.

"குழந்தாய் மீரா, நீ கண்டு கேட்டு அநுபவித்த அற்புதங்களை இந்தக் கிழவனுக்குச் சொல்லலாமா? நீ சொல்லித்தான் நான் தெரிந்து கொள்ள வேண்டுமேயன்றி, எத்தனை தவம் செய்தாலும் எனக்கு அந்தக்

காட்சி கிடைக்காது. என்னைப் பாக்கியசாலியாக்குவாயா?'' என்றார் நெஞ்சடைக்க.

கண்ணனின் கழலிணைகளிலிருந்து கமல முகத்தை எடுத்தாள் மீரா. அடித் தாமரையோடு ஒட்டிய இவளது முடித் தாமரைக்கும் ஓர் அற்புதமான தூய்மை வாய்த்திருந்தது. அழுகையில் கரைந்த அஞ்சனம் பரவியிருந்த முகம், வண்டுக் குழாமோடு சேர்ந்த கமல மலர்போல், புகையோடு சேர்ந்த தீக் கொழுந்துபோல் தனியானதொரு சோபையோடு திகழ்ந்தது. அழுது தெளிந்திருந்த அமுதக் கண்களால் மீரா ரூபியோ ஸ்வாமியை ஏற இறங்கப் பார்த்தாள். தாயார் குழந்தையைப் பார்ப்பதுபோல் பார்த்தாள்.

அவளது செப்பு வாயிலிருந்து திவ்வியமான கானம் எழுந்தது.

குழந்தை மீரா எப்படிப் பாடல் இயற்றினாள் என்று திகைக்க வேண்டியதில்லை. செடிக்கு அரும்பு கட்ட யாரேனும் கற்றுத்தர வேண்டுமா என்ன?

அழகு வழியில் சென்று ஆண்டவனை அடைவதற்கென்றே சிலர் பிறக்கிறார்கள்; அவர்கள் உருவமற்ற பரமனை உருவத்தில் கட்டி நிறுத்துகிறார்கள்;



மௌனத்தில் மட்டுமே துய்க்கக்கூடிய மொழியற்ற பொருளை மொழியில் கட்டிப் போடுகிறார்கள், அப்படிச் செய்ய வந்தவளேயன்றோ மீரா?

மீராவின் வாக்கை என்னென்பது? அது என்றுமே குழந்தையின் வாக்கு. பிறந்த மேனியான குழந்தையிடம் காண்கிற தூய்மை அதில் நிலவும். மீராவின் வாக்கில் ஒளிவு மறைவு என்பது இல்லாவிடினும் அதில் ரசக் குறைவு ஏற்படாததற்குக் காரணம் அதன் குழந்தைத் தன்மைதான். ஆடை அலங்காரங்களை உதறிவிட்டும் குழந்தை ரஸ கனமாக நிற்பது போல் கவிதையணிகளையும், உணர்ச்சி மறைப்புக்களையும் தூக்கி எறிந்துவிட்டும் தூய்மையாக நிற்பவை மீராவின் பாடல்களாகிய பதாவளிகள்.

சம்பங்கிக் கொடி தனக்கென்றே ஒரு தனியான சுகந்தத்தைப் பரப்ப ஆசைப்படுகிறது. அந்த சுகந்தத்தை மொழியும் திருவாயாகச் சம்பங்கி மலர் என்ற ஒரு கோப்பையையும் சிருஷ்டி செய்கிறது. மீரா அன்பு மணத்தைப் பரப்ப ஆசைப்பட்டாள். அந்த சுகந்தத்தை மொழியும் மலராக ஒரு மொழி வாய்த்தது. அந்த மணமாகிய உயிருக்கு அந்த ஒரு மொழிதான் உருவமாக இருக்க முடியும். அதை குஜராத்தி என்றும், ராஜஸ்தானி என்றும், விரஜ பாஷை என்றும் பாஷை நிபுணர்கள் சொல்வார்கள். உண்மையில் அது கண்ணீரின் மொழி. மீராவைப் போல் கண்ணீரில் உருக முடியாத எவருக்கும் அதன் பொருள் பூரணமாகப் புரியாது. அதை பாஷா சாஸ்திரத்தின்படி பிற மொழிகளில் ஆக்கித் தரவும் முடியாது. ஏதோ ஓரளவு கோடி காட்டலாம், அவ்வளவே!

மீரா பாடினாள். மீராவின் குரலில் கண்ணனின் குரலையே கேட்டார் கோஸ்வாமி.

முரளியை மீளக் கொடு,
மோகன ராதா ராணி
முரளியை மீளக் கொடு

முரளியின் மேனியில்என் மூச்சுமே மேவிநிற்கும்
முரளியில்லாவிடில் மூர்ச்சித்துப்
போய்விடுவேன் (முரளியை)

குழலில் லாவிடில் கானம் எப்படிச் செய்வேன்?
உழலவிடாதே, எந்தன் உயிரினைக்
கருவினைத் தா (முரளியை)

மாடுகன்றை மேய்ச்சலில் மயக்கிக் கவர்ந்துவரப்
பாடும் குழலினை நீ
பறிக்கலாமோ கள்ளி? (முரளியை)

மீரா பாடிக் கொண்டே இருந்தாள். அதில் ராதிகா தேவியின் புனித சரீரத்தை நுகர்ந்தார் ரூபர்.

மழலை வழியும் உந்தன் வாய்மொழி இருக்கக்
குழலை ஏன் தேடுவாய் என் கேசவா? (மழலை)

ஆவினத்தை அழைக்க வாயிசை இல்லையோ?
கரமுண்டே தாளமிட, பிறகருவியும் ஏனோ?
தார்க்குச்சியும் தருவேன், மேய்ச்சலுக்குதவி செய்ய
வேய்ங்குழலை மறப்பாய், ஆய்க்குலச் செல்வா
(மழலை)

ரூபகோஸ்வாமி ராதா—கிருஷ்ண லோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தார். அப்போது மீராவின் குழந்தைக் குரல் அவர் உள்ளத்தைக் குளிர்வித்தது.

காரியம் சாதிக்கக் கார்மேகக் கண்ணன்
''நாரீமணி தேவி, நமஸ்காரம்'' என விழுந்தான்
மீராவின் பிரபு கிரிதர நாகரனை
ஆறாத அன்பு செய்த ஸ்ரீராதை தோல்வியுற்றாள்

மீரா தனது அதிசய அநுபவத்தை முற்றிலும் பாடி விடவில்லை என்பது ரூபருக்குத் தெரிந்தது. 'ராதை தோற்றாள் — குழலைக் கண்ணனிடம் கொடுத்து விட்டாள். ஆனால், மீரா தோற்றாளா? மீரா தோற்பாளா?' என்று ரூபகோஸ்வாமி தம்மைத் தாமே கேட்டுக் கொண்டார்.

''மீரா தேவி, உன் திருவுள்ளத்துக்கு எவ்வளவு விருப்பமோ, அவ்வளவுக்கே இந்தக் கிழவனிடம் கூறினாய். அதுவே என் அதிருஷ்டம். உன் மலர் வாயில் நீ முதன் முதலில் தொடுத்த சொல் மாலையை மோந்து பார்க்கும் பேறு எனக்குக் கிட்டியதே, அதுவே போதும்'' என்றார் கோஸ்வாமி.

மீரா அவரையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய உடம்பு மெல்ல ஆடிற்று; உதடுகள் நடுங்கின; கண்ணிமைகள் படபடத்தன. சர்வ சாதாரணக் குழந்தை போலவே கம்மிய குரலில் ''அம்மா எங்கே?'' என்றாள்.

கண்ணன் தனது மாய வலையை வீசி, அவளுடைய அற்புத நினைவுகளை அகற்றிச் சாதாரண மக்களில் ஒருத்தியாக அவளைச் செய்கிறான் என்பதைக் கண்டார் ரூபர்.

''வா, குழந்தே! நானே உன்னை அம்மாவிடம் அழைத்துச் செல்கிறேன்'' என்று மீராவைத் தூக்கிக் கொண்டார்.

அப்போது அவர் உதயசந்திரனைத் தாங்கும் பனிவரையாக இருந்தார்.

சந்திரமுகியும், ரத்தன்சிங்கும் ரூபகோஸ்வாமியை இலேசில் விட்டுவிடவில்லை. அவருடன் ஏகாந்தமாக நீண்டபொழுது பேசிக் கொண்டிருந்தார்கள். குழந்தை மீராவைப் பற்றித்தான் பேச்சு. அவளுடைய போக்கு அவர்களுக்குப் புரியவே இல்லை.

''புரியாது, புரியாது. எப்படிப் புரியும்? நாமும் மீராவாகி விட்டால்தான் புரியும்'' என்றார் ரூபகோஸ்வாமி. ''எல்லாவற்றுக்கும் ஒரு காலம் வரவேண்டியிருக்கிறது. அதே போல் ஒரு காலம் வரும்போது, அதன் தேவையைப் பூர்த்தி செய்கிற வஸ்துவும் தானே தோன்றி விடுகிறது. தானே தோன்றிவிடுகிறது என்று சொல்வானேன்? பிரபு கிரிதரன் அதைத் தோற்றுவிக்கிறான். சைதன்ய மகாப் பிரபுவின் மரபில் வந்துள்ள நாம் அநுகத உபாஸனை என்று செய்கிறோம். 'நேருக்கு நேராகக் கண்ணனில் கரைந்து கலந்து அநுபவிக்க அடியார்களால் இயலாது; கண்ணனின் அன்புக் கடல் ராதையின் மூலமாகவே ஒரு வடிகாலாக இழியும். அந்த வடிகாலையும் அவளது தோழிகள் ஒவ்வொருவராகப் பிரித்துச் சிற்றோடைகளாக அனுப்புவார்கள். இறுதியில் இச் சிறிய வாய்க்காலும் குருவின் மூலம் நீர்த் துளிகளாகத்தான் நமக்குக் கிட்ட முடியும்' என்று நம்புகிறோம். ஆனால் நாமும் கூட நேரடியாகக் கண்ணனை அடைய முடியும், அவனுடைய பிரேம வாரிதி முழுவதையும் அப்படியே பருகிவிட முடியும் என்று நிரூபிக்க வேண்டிய தேவை ஏற்பட்டு

பரவசமூட்டும்
பரிமளமுள்ள பவுடர்

# பாண்ட்ஸ்
# ட்ரீம்ஃப்ளவர்
# டால்க்




**இந்த ஒப்பற்ற பவுடர்
உங்களை நாள் முழுவதும்
நறுமணத்துடனும்
இன்ப உணர்ச்சி
யுடனும் வைக்கும்**

வறுத்தெடுக்கும் வேனலிலும்கூட வசந்த காலையின் இனிய புதுமையையும் மாலைத் தென்றலின் கிளுகிளுக்கும் குளுமையையும், உடலைத் தழுவி நிற்கும் நறுமணத்தையும் தரக்கூடிய அலாதி பவுடர் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்! வியர்வையின் அருவருப்பிலிருந்து அது உங்களுக்கு விடுதலையளிக்கும். அதை உடல் மீது தாராளமாகத் தூவிக் கொண்டால் பொங்கும் ஆனந்த லாகிரியில் பூரித்துப் போவீர்கள். நீங்கள் மட்டுமல்ல, உங்கள் வீட்டில் உள்ள எல்லோரும் தான்!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏயில் இணைக்கப்பட்டது)
JWT P 4596(R)

விட்டதோ என்னவோ? இதை யார் நிரூபிக்க முடியும்? ராதா தேவி ஒருத்தியால்தான் முடியும். ராதா தேவி அப்படி நிரூபிக்க வருவாளா? கண்ணனைப் பிரிந்து வருவாளா? வருவாள், வருவாள்....ஏனெனில் பிரிவிலும் ஓர் இன்பமுண்டு. சேர்ந்திருக்கும்போது கண்ணன் என்ற ஒன்றைத் தவிர வேறு நினைவில்லை. ஒரே ஒரு கண்ணனை ருசிப்பதுதான் சேர்க்கை. பிரிந்திருக்கும்போதோ உலகமும் அதிலுள்ள கோடாது கோடிப் பொருள்களும் தெரிகின்றன. ஆயின், நேசம் மறக்காத நெஞ்சம் கண்ணனையும் மறப்பதில்லை. கோடாது கோடி பொருட்களைப் பார்க்கும்போதே அவற்றில் கண்ணனையும் காண்கிறது. சேர்க்கையில் ஒரு கண்ணன் என்றால், பிரிவின்போதோ எண்ணற்ற கண்ணன்கள். **ஏக: ஸ ஏவ ஸங்கே, த்ரிபுவனமபி தன்மயம் விரஹே...**"

ரூபகோஸ்வாமி தமது 'லகு பகவதாம்ருதம்' என்ற கிரந்தத்தைத் தாமே ரசித்து விளக்கினார்.

அவரது உள்மனம் கொண்ட உணர்வுகளை அவராலேயே பூரணமாக வெளிப்படுத்த முடியவில்லை. அவ்வாறிருக்க சந்திரமுகியும், ரத்தன் சிங்கும் அதை எப்படிப் புரிந்து கொள்ள முடியும்?

"ஸ்வாமி! தாங்கள் சொல்வதெல்லாம் மீராவுக்கு எப்படிப் பொருந்துகின்றன என்று எங்களுக்குப் புரியவில்லை. ஆயினும் அவள் உள்ளார்ந்த பெருமை வாய்ந்த ஓர் அற்புதப் பெண் என்று தெரிகிறது. அவளை நாங்கள் எப்படி வளர்ப்பது என்றே புரியவில்லையே?" என்று கலங்கிக் கேட்டனர் பெற்றோர்.

"அதைப் பற்றி ஏன் கவலை? மீராவை சாமானியப் பெண்ணாகவே நினைத்து வளர்த்து வாருங்கள். அப்படி நினைக்க இயலுமா, இயலாதா என்ற கவலை உங்களுக்கு வேண்டாம். கிரிதரன் அதைப் பார்த்துக் கொள்வான். அவன் குழந்தையாயிருந்த போது மண்ணுண்ட வாயை யசோதையிடம் காட்டினான்; அதில் ஈரேழுலகமும் கண்டாள் அவள். இப்படிப் பார்த்தபின்னும் அவள் கண்ணனைச் சாமானியப் பிள்ளையாக எண்ணி வளர்க்கவில்லையா? கண்ணனுக்கே எங்கெங்கு எப்படி எப்படி மாயத் திரையைப் போட வேண்டுமென்பது தெரியும்."

சுத்த ஆன்மாவாகிய ரூபகோஸ்வாமி எந்த வேளையில் இப்படிக் கூறினாரோ ? மீராவின் மாண்பு பூரணமாக எவருக்கும் தெரியாதபடி அக்கணமே மாயத் திரை விழுந்தது. சந்திரமுகி, ரத்தன்சிங்குக்காக மட்டும் அந்த மாயத் திரை விழவில்லை. இனி வரப் போகும் காலத்தில் மீராவின் வாழ்வில் மிக முக்கியமான அங்கம் வகிக்கப் போகிறவர்களும் அவளைப் புரிந்து கொள்ள முடியாதபடி அந்தத் திரை கனமாக விழுந்து விட்டது.

## அத்தியாயம் 5

# கள்ளக் கலியாணம்

ஜன்மாஷ்டமியின் நள்ளிரவு.

தட்சிணாயனம் என்பது இரவு. கிருஷ்ண பட்ச அஷ்டமியும் இரவு. அதிலும் நடு நிசியில் நிகழ்வது நந்தநாயகனின் ஜயந்தி.

மேகங்களில் கருமை ஏற ஏற மின்னல் அதிக ஒளியுடன் பிரகாசிக்கும்.

மேகங்களில் கருமை ஏற ஏற மழை அதிக வலிவாகப் பொழியும்.

காரிருளில் ஒரு பேரொளியாக, கருந்த காரத்தின் கன மழையாகக் கண்ணன் பிறந்த தட்சிணாயன — கிருஷ்ணபக்ஷ அஷ்டமி-நள்ளிரவு.

ரூபகோஸ்வாமி கிரிதர கோபாலனுக்கு ஆராதனை செய்து கொண்டிருந்தார். மேர்தா மக்கள் யாவரும் அந்த அற்புத பூசனையைக் கண்டு மெய்ம்மறந்திருக்கிறார்கள்.

மீரா மட்டும் அங்கில்லை.

அரண்மனையில் தந்தக் கட்டிலில், காசிப் பட்டுப் பஞ்சணையில், காச்மீரச் சால்வையைப் போர்த்திக் கொண்டு இலட்சணமாக உறங்கிக் கொண்டிருக்கிறாள்.

பகலெல்லாம் ஆடியதிலும் பாடியதிலும் பிச்சாங்குழல் அடித்து விளையாடியதிலும் குழந்தை தூங்கி விட்டாள் என்றுதான் சந்திரமுகி நினைத்தாள்.

ஆனால் இது உடல் அலுத்துப் பிறந்த உறக்கம் அல்ல. மனம் முகிழ்த்துப் பிறந்த உறக்கம். கண்ணைத் திறந்து கொண்டு காணும் காட்சிகளை விடத் தெளிவாக, அடர்த்தியாகக் கண்ணனைக் காணும் கனவுலகுக்காகவே மீரா துயின்று கொண்டிருந்தாள்.

கிளிக் குஞ்சைத் தூக்கிச் செல்லும் காற்று போல் கண்ணன் எழுப்பிய கொம்பின் ஒலி, மீராவை அவனுடைய உலகுக்குத் தூக்கிச் சென்றது.

கண்ணன் முன் களித்து நிற்கவில்லை மீரா. குற்றவாளி போலவே முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு நின்றாள். 'அவனது முரளியின் கானத்தைத் தான் அபகரித்ததால் அல்லவோ அவன் கொம்பை ஊத வேண்டியிருந்தது? அப்படியாயின் கானத்தை அவனிடமே திருப்பித் தந்துவிடலாமா?' அதற்கும் மீராவுக்கு மனம் வரவில்லை. கானத்தைத் தந்துவிட்டால் பிறகு மீரா கிடையாது. அவள் அனுபவிக்க விரும்பிய பிரிவும் இதர துன்பங்களும் கிடையாது.

வேணுவினால் அவளது வதனத்தைத் தூக்கினான் கோவிந்தன்.

மீராவுக்குச் சொல்லி முடியாத கோபம் வந்து விட்டது.

"உன் விரலாலேயே என் முகத்தைத் தூக்கியிருந்தால்கூடப் பொறுத்துக் கொண்டிருப்பேன். இந்தப் பாழாய்ப் போன குழலால் எப்படித் தூக்குவாய் ?" என்றாள் சினத்துடன். யமுனை தீரத்தில் வளர்ந்திருந்த ஓர் அசோக மரத்தின் அடியில் சோகக் கொடியாய் உட்கார்ந்து கொண்டாள்.

"கோபிகே! கோபிக்காதே ! இந்தா வேணு. உன் கையாலேயே இதை முறித்துப்

போட்டு விடு'' என்று கண்ணன் அவள் எதிரே வந்து நின்று குழலை நீட்டினான்.

மீரா அதை வாங்கிக் கொண்டாள்.

ஆனால் முறிக்கவில்லை.

தன் அதரங்களில் வைத்துக் கொண்டாள்.

கண்ணனின் திருமுகம் பட்டுத் தித்தித்தது அந்த வேய்ங்குழல்.

அதிலிருந்து தித்திக்கும் கானத்தை எழுப்பினாள் மீரா.

கண்ணன் நடனமாடினான்.

நடனமாடிக் கொண்டே இசையில் அவன் கரைந்து தனக்குள்ளேயே வந்து விடுவான் என்று அவள் புரிந்து கொண்டாள்.

இருவரும் ஒன்றாகி விடக் கூடாது; தனித் தனியே நின்று அழகு பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டு அல்லவா அவள் பிறவி எடுத்திருந்தாள்? கண்ணனைக் கரைய விடாமல் கட்டிவிட ஆசைப் பட்டாள். தன் கழுத்தில் உறுத்திய ஒரு ஹாரத்தை எடுத்து வீசி அவனைச் சுற்றிப் பிடித்தாள்.

என்ன ஆச்சரியம்!

அவள் வேணுவில் அடைத்து வைத்திருந்த துளசிதாமமேதான் அந்த ஹாரம்!

அது எப்படித் தன் கழுத்துக்கு வந்தது?

மீராவுக்கு விஷயம் புரிந்து விட்டது. அவளது சிரசுக்குள் வெண்ணிலவு உதித்தது. அதிலிருந்து அமிர்தம் வழிந்து உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால்வரையில் உள்ள நாடிகளிலெல்லாம் குளுகுளுவென்று பிரவகித்தது. ஆம், அவளுக்குக் கலியாணமாகி விட்டது! அவளறியாமலே அவளைக் கண்ணன் மணந்திருக்கிறான்! அந்த மணத்தின் பரிசுதான் மணக்கின்ற இந்தத் துழாய் மாலை.

''இப்படித்தான் திருட்டுத் தாலி கட்டுவதா?'' என்று கண்ணனிடம் பொய்ச் சண்டை பிடித்தாள் மீரா.

கண்ணன் சிரித்தான்.

''இது ஒரு பெரிய அதிசயம் மீரா, மிகப் பெரிய அதிசயம். நான் உன்னை மணந்து கொண்டது உனக்கு மட்டும்தான் தெரியாது என்று நினைக்கிறாயா? அது எனக்குமே தெரியாது. நாம் நம்மை அறிந்தா ஒவ்வொரு சுவாசத்தையும் இழுத்து விடுகிறோம்? நம்மை அறிந்தா ஒவ்வொரு இதயத் துடிப்பையும் உண்டாக்கிக் கொள்கிறோம்? நம்முடைய கலியாணமும் அதைப் போன்றதே. ஆனால் கலியாணமானபின் நம்மில் ஒருவர்தான் இருக்க முடியும்'' என்றான்.

மீராவுக்குச் சுரீலென்றிருந்தது. உடலில் பரவிய அமிருதம் முழுதும் ஆலகாலமாகி விட்டாற் போலிருந்தது.

''ஹா, கான்ஹா, என்ன அமங்கல வாக்குச் சொன்னாய்! நம் இருவரில் ஒருவர் தான் இருக்க முடியுமென்றால் நான் உயிரை விட்டு விடுகிறேன். நீ....நீ.... அதெப்படி சாத்தியம்! நீ பொய் சொல்கிறாய், மாயா! நீ அழிவற்ற அனந்தன் அல்லவா ?'' என்றாள்.

''வாஸ்தவம்தான். ஆற்றின் மேல் ஓர் இலை விழுகிறது: நீரின் மென்மையை அநுபவித்துக் கொண்டு அதன் மீது மிதக்கிறது. ஆற்றின்மேல் ஒரு மலர் விழுகிறது: நீரின் தண்மையை அநுபவித்துக் கொண்டு அதன் மீது மிதக்கிறது. இதையெல்லாம் பார்த்துக் கொண்டே யிருக்கிறது முகில். தானும்



''என்னங்க! காலேஜ் புத்தகத்தை பஸ்ஸிலேயே விட்டுட்டு இறங்கிட்டீங்களே! இந்தாங்க!''

''சத்தியமாகச் சொல்லுங்கள், அதற்குள் காதல் கடிதமாக ஒன்றும் எழுதி வைக்கவில்லையே?''

ஆற்றின் மென்மையை, குளிர்ச்சியை நுகர வேண்டும் என்று ஆசைப்படுகிறது. மழையாகப் பொழிகிறது. அந்த மழை ஆற்றின் மென்மையை, குளிர்ச்சியைத் தனித்து நின்று அநுபவிக்க முடியுமா? இன்னொன்று சொல் மீரா, இந்த மென்மையும் குளிர்ச்சியும் அந்த மேகத்திடமே உள்ளவைதாமே? மேகமும் ஆறும் மணந்தால் ஒன்றுதான் இருக்க முடியும்; தம்பதி என்று இருவர் எப்படி இருக்க இயலும்....? அன்பின் பாட்டை மிக மிகக் குறுகல் கண்மணி! அதில் ஒருவர்தான் நிற்க முடியும். நீ மட்டும் நின்றால் நானும் நீ ஆக வேண்டும். நான் மட்டும் நிற்பதென்றால் நீ நானாக வேண்டும். மீரா... இல்லை... ராதா! நீ இயற்கைக்கே முரணான ஒன்றுக்கு ஆசைப் பட்டாய். என்னோடு அன்பில் ஒன்றி விடாமல், பிரிந்திருந்து என்னை ரசிக்க விரும்பினாய். ஆனால் ரசிக்க ரசிக்கப் பிரிவு அழிந்து கொண்டேதான் இருக்கும். இறுதியில் ஒன்றி விட வேண்டியதுதான். ராமானுஜரும், மத்வரும், நிம்பார்க்கரும், வல்லபரும் பிரிந்திருந்து ரசிப்பதைச் சொல்லி மக்களை அழகு வழியில், அன்பு வழியில், கண்ணீரின் வழியில், விநயத்தின் வழியில் திருப்பி விட்டார்கள். ஆனால் அதன் முடிவு அவர்கள் கையிலும் இல்லை, என் கையிலும்கூட இல்லை'' என்று சொல்லித் தாராகணங்கள் உதித்தாற்போல் சிரித்தான் ஸ்ரீதரன்.

மீரா சிந்திக்கலானாள்.

''வேண்டாம் மீரா, நீ சிந்திக்க வேண்டாம். சிந்திக்கப் பிறந்த தத்துவ ஞானிகள் அதைச் செய்யட்டும். நீ அதற்கும் மேலாக என்னை வந்திக்கப் பிறந்தவள்; நாதபாசத்தால் என்னை பந்தம் செய்யப் பிறந்தவள். நீ பாடு, குழலெடுத்துப் பாடு'' என்றான் கண்ணன்.

மீரா வேணுவை எடுத்து வேளாவளி ராகத்தை ஊதினாள். சங்கீத சாஸ்திரத்தைக்



"உன் பாடு ஜாலி தான்! ரெண்டு லேடி டைப்பிஸ்ட் இருக்கு மத்தியிலே உனக்கு ஸீட் ஒதுக்கி இருக்காங்களாமே!"

"ஆமா! ஒருத்தி பேர் பர்வதம் ராமசாமி, மற்றவள் பேர் கோமளம் ஆறுமுகானந்தம்!"

---

கற்காமலே அவளிடம் ராகமும் தாளமும் தாமாகக் கூடின — சத்தியத்தைப் பற்றிய நூல்களைப் படிக்காத எளியவர்களிடமே சத்தியம் நிலைப்பது போல்.

அவள் குழலூதியதும், அவள் ஆடியதும் தான் மீரா — கண்ணனின் திருக் கலியாணம். கலியாணமானபின் ஒருவர்தான் இருக்க முடியும் என்று அவன் கூறினனல்லவா? வேளாவளியில் கரைந்து வேணுவின் வழியாக மீராவின் இதயத்தில் மறைந்து விட்டான் மாதவன்.

அதை மீராவே உணராதபடி செய்து விட்டான்! கண்ணனில் நாம் கரைவதற்கும், நம்மில் கண்ணன் கரைவதற்குமுள்ள வித்தியாசம் இதுதான்: அவனில் கரைகிறவர்களுக்கு அனந்தமான ஆனந்தம் கிடைக்கும். தான் கரையும்போதோ அவன் எந்த உணர்ச்சியும் அனுபவிப்பதில்லை. அவன் நம்மில் கரைந்திருப்பதை நாம் உணராமலே நம் வழி செல்கிறோம். மாயை என்பது இதுதான்!

கண்ணனைக் காணுது கண்ணீருடன் மீரா எழுந்த சமயத்தில் கோஸ்வாமியின் பூஜை முடிந்து விட்டது. அடியார்கள் யாவரும் உறங்கச் சென்று விட்டனர்.

மேர்தா முழுவதும் உறங்கும் யாமத்தில் மேன்மாடத்திலிருந்து தனியாகப் பரக்கப் பரக்க இறங்கி ஓடி வந்து கொண்டிருந்தாள் பாலகி மீரா. நீண்ட நீண்ட தாழ்வாரங்களையும், அங்கணங்களையும், படி வரிசைகளையும் துருத கதியில் கடந்து கொண்டிருந்தன அவளது பஞ்சுப் பாதங்கள்.

ரூபகோஸ்வாமியார் பூஜை புரிந்து வந்த மண்டபத்துக்குள் நுழைந்தாள் மீரா.

ஓரிரு குத்துவிளக்குகள் முத்துச் சுடர் பரப்ப, ஒளியின் ஆட்டத்தில் கிரிதரமூர்த்தியின் முகம் சிரிப்பு அலைகளைச் சிந்த விட்டுக் கொண்டிருந்தது.

அப்படியே குண்டுக் கட்டாக கிரிதர விக்கிரகத்தைத் தூக்கிக் கொண்டாள் மீரா. எங்கிருந்துதான் அவளுக்கு அவ்வளவு சக்தி வந்ததோ, அந்த விக்கிரகத்தை எடுத்துக் கொண்டு, வந்த வேகத்திலேயே தன் மாடத்துக்குத் திரும்பினாள்.

தந்தக் கட்டிலில், காசிப் பட்டுப் பஞ்சணையில் கிரிதரனைச் சயனிக்கச் செய்து காச்மீரச் சால்வையால் போர்த்தினாள். அவனது பாதத்தின் அடியிலேயே தானும் படுத்துக் கொண்டாள். அவனது கால் விரல் பத்தையும் இவளது கைவிரல்கள் பத்தும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டன.

மீரா நிம்மதியாகத் தூங்கினாள்.

"கிரிதர மூர்த்தியைக் காணவில்லை. மேர்தா வந்ததற்கு மகத்தான அபசாரம் ஏற்பட்டு விட்டது" என்று விடியும் வேளையில் ரூபரோடு வந்திருந்த ஹரிதாஸர்கள் அமர்க்களம் செய்தனர். ரூபகோஸ்வாமி கையை அசைத்து அவர்களை அடக்கினார். மௌனமாகத் தம்மைப் பின்தொடருமாறு ஜாடை காட்டி விட்டு நடந்தார்.

மாளிகை வாசலில் ரத்தன்சிங் அவசர அவசரமாக எழுந்திருந்து அவரை வரவேற்றான். ரூபர் ஏதும் பேசாமலே குழந்தை மீரா துயின்ற மாடத்துக்குச் சென்றார்.

கிரிதரமூர்த்தத்தை மஞ்சத்தில் வைத்து, அதன் காலடியில் தூங்கும் குழந்தையைக் கண்டவுடன் அனைவருக்கும் உள்ளம் கசிந்தது.

விக்கிரகத்தை எடுக்கப் போனான் ரத்தன்.

அவனது கையை இறுகப் பிடித்தார் ரூபர்.

'சேர வேண்டிய இடத்தில் கிரிதரன் சேர்ந்து விட்டான்' என்று கூறுவதுபோல் திருப்தியுடன் பார்த்தார்.

தம் இடையில் கட்டியிருந்த தம்புராவை மீராவின் மறுபுறத்தில் வைத்தார். இறைவனுக்கும் இசைக்கும் நடுவே ஒரு பாலமாகப் படுத்திருந்தாள் பாலகி.

அனைவரும் வந்த சுவடு தெரியாமலே அங்கிருந்து அகன்றனர்.

அரண்மனையிலிருந்து வெளிப் போந்த கோஸ்வாமி தமது க்ஷேத்திராடனத்தைத் தொடர்ந்தார்.

முதல் நாளான ஜன்மாஷ்டமி இரவு பொழிந்த மழை இப்போதுதான் நின்றிருந்தது. வறண்ட ராஜஸ்தானத்திலும் குளிர்ந்த காற்று வீசியது. மங்கள ஸ்நானம் செய்தது போல் மேர்தாவின் புகழ் பெற்ற கம்புப் பயிரும், எள்ளுப் பயிரும் பளிச்சென நின்றன. அவற்றின் அடியிலிருந்து மண்டூகங்கள் கோஷ்டி கானம் எழுப்பின.

தம்புராவை மீராவுக்குத் தந்துவிட்ட ரூபருக்கு இயற்கையின் குழலே சுருதி போட்டது.

"மழலை வழியும் உந்தன் வாய்மொழி இருக்கக்
குழலை ஏன் தேடுவாய், என் கேசவா?"

என்று பாடியவாறு அவர் உற்சாகமாகச் சென்றார்.

"இதென்ன புதிய பாடலாக இருக்கிறதே!" என்று அவருடைய சீடர்கள் வியந்தனர்.

அவருமே அப்போது ஒரு பச்சிளம் பாலகியிடம் சீடராகத்தான் இருந்தார்! (தொடரும்)

[நமது திருக்கோயில்களில் தெய்வ சாந்நித்யத்தை அதிகரித்து, நமது புராதன கிராமக் கலைகளுக்கும், ஆகம, சிற்பங்களுக்கும் புத்துயிர் அளித்து மக்களை உய்விக்க வேண்டும் என்ற கருணை உள்ளத்துடன் ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள் ஆகம சிற்ப சதஸ் நடத்தி வருகிறார்கள். இந்தத் தொடரில் காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் நடந்த 6-வது சதஸ்ஸைப் பற்றிய விவரங்களை இக்கட்டுரை மூலம் நேயர்களுக்கு மகிழ்ச்சியுடன் வழங்குகிறோம். — ஆசிரியர்]





# வியாசர் மகிழ்ந்தார்

சுபஸ்ரீ

ஆந்திரத் தலைநகரில் அரசியல் சூழ்நிலையில் எத்தனையோ போட்டிகள் இருந்தபோதிலும் அதனது சித்தூர் மாவட்டத்தைச் சார்ந்த காளஹஸ்தியில் இம்மாத முதல் வாரத்தில் ஆகம சாஸ்திரங்களும், சிற்பக்கலையும், கிராமக் கலைகளும் போட்டி போட்டுக் கொண்டு தங்கள் புராதனச் சிறப்பை வெளியிட்டுக் கொண்டிருந்தன. சிலந்தியும், பாம்பும், யானையும் போட்டியிட்ட வண்ணம் விடையேறும் விண்ணவனைப் பூஜித்த தலமல்லவா? 'வாய் கலசமாக வழிபாடு செய்த' கண்ணப்ப நாயனாரது பக்திக்குப் பிறை சூடிய பெருமான் தலை வணங்கிய மகத்தான ஸ்தலத்தில் பக்திச் சுவை வளர்க்கும் கலைகள் பங்கு கொள்ளும் ஸதஸ் செப்டம்பர் 2ந் தேதி முதல் ஒரு வாரம் நடைபெற்றது.

மனிதருள் மகானான ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் இவ்வருட சாதுர்மாஸ்ய விரத காலத்தை நால்



வரும், சேக்கிழாரும், நக்கீரரும் புகழ்ந்து பாடிய ஸ்ரீ காளஹஸ்தி தலத்திலே நிகழ்த்த அருள் உள்ளம் கொண்டார்கள். தொடர்ந்து, ஆகம, சிற்ப, வியாச பாரத, கிராமக் கலை விழா ஸதஸையும் அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தில் கொண்டாட அனுக்கிரகித்தார்கள்.

ரயில் வண்டித் தொடர் போல் இவ்வளவு நீளமான பெயர் படைத்த ஸதஸின் நோக்கம் பற்றி 31–8–66 அன்று ஸ்வாமிகள் பத்திரிகை நிருபர்களுக்கு எடுத்துரைத்தார்கள்.

உலகத்திலேயே மிகப் பழமையான இந்தியப் பண்பாட்டின் ஒப்பற்ற அடையாளமாக விளங்குகிறது கோயில். ஆலயங்கள் சிற்ப சாஸ்திரத்தின்படி அமைந்தவை. அவற்றில் வழிபாடு ஆகம சாஸ்திரங்கள் பிரகாரம் நடைபெறுகிறது. கோயில்களில் எண்ணற்ற கலைகள் வளர்ந்தன. அவை பக்தியை மக்களிடையே உண்டாக்கின.

சமீப காலத்தில் இவை யாவும் க்ஷீணித்து விட்டன. இவற்றில் ஈடுபட்டுள்ள ஆகம பண்டிதர்களும், சிற்ப நூல் விற்பன்னர்களும், கிராமக் கலைஞர்களும் தகுந்த ஆதரவின்றி, எண்ணிக்கையில் குறைந்து வருகிறார்கள். பக்தியை வளர்க்க வேண்டிய வில்லுப் பாட்டு, புர்ர கதா போன்ற கலைகள் அரசியல் கட்சிப் பிரசாரங்களுக்குப் பயன்பட்டு வருகின்றன. இத்தகைய கலைஞர்களைக் கௌரவித்து உற்சாக மூட்ட ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் 1963ம் ஆண்டு முதல் சாதுர்மாஸ்ய விரத காலத்தில் ஸதஸ் நடத்த அனுக்கிரகித்து, அது சிறப்புற நடைபெற அருள்பாலித்து வருகிறார்கள். சென்ற ஆண்டு 'கணித'மும் இணைக்கப்பட்டதன் மூலம் கணித சாஸ்திரிகளுக்கும் 'பஞ்சாங்கக்காரன்' என்ற இழிநிலை போய்த் தனிக் கௌரவம் வந்துள்ளது.* அரசாங்கமும், இந்துமத பரிபாலன சமய

* இவ்வருட விழாவில் மற்றொரு புது அம்சம் சேர்க்கப்பட்டிருக்கிறது. தர்க்கம், வியாகரணம், மீமாம்ஸை, வேதாந்தம் ஆகிய நான்கு சாஸ்திரங்களிலும் கற்றுத் தேர்ந்த பண்டிதர்களை வரவழைத்துப் பரீட்சையில் தேறியவர்களுக்கு ரூ. 500 வீதம் சம்பாவனையும் சால்வைகளும் கொடுத்துக் கௌரவிக்கத் திட்டமிட்டுள்ளார்கள். முன்பு சமஸ்தானங்கள் செய்து வந்த சேவையை இந்த ஜனநாயக யுகத்தில் ஸதஸ் செய்ய முன் வந்துள்ளது.



1. காளஹஸ்தி நடராஜ ரங்க 'ஸ்தலத்தில் பஞ்சமுக லிங்கேச்வரர். 2. பெரியவாள் சதஸிற்கு எழுந்தருளும் காட்சி. 3. மந்திரிகளும், ஊர்ப் பிரமுகர்களும் ஆரம்ப விழாவுக்கு வருகை புரிதல். 4. கல்வெட்டுக்களைக் கூர்ந்து ஆராய்கிறார் ஆசார்ய ஸ்வாமிகள். 5. தஞ்சை ஜில்லா குருவிலே கால அர்ச்சகர் பயிற்சி பெற்றவர்களுக்கு சதஸில் பரிசு வழங்கப்பட்டது.



நிர்வாகத்தினரும், தொல்பொருள் ஆராய்ச்சி இலாகாவும், பொதுமக்களும் கலந்துகொண்டு விழாவைக் கோலாகலமாய் நடத்தினார்கள்.

நான்கு ஆண்டுகளாகத் தமிழ் நாட்டில் நடைபெற்று வந்த ஸதஸ் இவ்வருடம் ஆந்திர எல்லையில் நிகழ்வதன் மூலம் ஆந்திரர்களும் தமிழர்களும் ஒற்றுமை உணர்ச்சியுடன் பழகுவதற்குப் பெரும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. இந்த ஐந்தாவது விழாவை ஐந்து முகங்கள் படைத்த அபூர்வ லிங்கமான 'பஞ்சமுக லிங்கேசுவரர்' சந்நிதியில் காளஹஸ்தி நடராஜ ரங்கஸ்தலத்தில் நிகழ்த்த சுவாமிகள் அருள்கூர்ந்தது அதன் சிறப்பு அம்சமாகும். ஸதஸை ஒட்டி, காளஹஸ்தி நகரமே புது உருக் கொண்டு ஜ்வலித்தது. செப்டம்பர் 2ந் தேதி ஸ்ரீ காளஹஸ்தீசுவரர் சந்நிதியிலிருந்து ஊர்வலம் ஆரம்பமாகியது.

நாதஸ்வரம் இழைந்தது; நகராக்கள் முழங்கின; வாத்யங்கள் இசைத்தன; ஊது சங்கம் ஒலித்தது; பட்டி தொட்டிகளிலிருந்து வந்திருந்த பஜனைக் கோஷ்டிகள் பண் இசைத்தன; வேத கோஷங்கள் காற்றை நிறைத்தன; விரிந்த கோயிற் குடைகள் விமரிசை புரிந்தன. சிவாகம, வைகானஸ, பாஞ்சராத்ர—ஆகமச் சுவடிகள், சிற்ப சாஸ்திர ஏடுகள் யானைகள் மீது வலம் வந்தன; குஜராத்திலிருந்து வந்திருந்த 'ராஸ பஜனை'க் குழுவினரும், காஞ்சி சிலம்பக்காரர்களும் தங்கள் திறத்தை வெளியிட்டனர். சிவாச்சாரியார்களும், பட்டாச்சாரியார்களும், ஜ்யோதிஷ பண்டிதர்களும் ஸ்தபதிகளும் பொன்னுடை பூண்டு, தங்களைக் கௌரவிக்கும் மகத்தான ஒரு விழாவில் கலந்துகொள்கிறோம் என்ற பூரிப்புடன் நிமிர்ந்து நடந்தனர்; இத்தகைய சிறப்பு வாய்ந்த ஊர்வலத்தினிடையே தேஜ மிகுந்த திருவதனத்துடன் காட்சி யளித்த ஸ்ரீ காமகோடி புதுப் பெரியவாளைப் பல்லாயிரக் கணக்கான மக்கள் தரிசித்து மகிழ்ந்தனர். ஊர்வலம் ஸ்வர்ணமுகி நதிக் கரை வழியாக ஊர்ந்து, கோயிலின் தென் கிழக்குப் பகுதியில் உள்ள நடராஜரங்க ஸ்தலத்தை அடைந்தது.

எத்தகைய மழையையும் தாங்கும்படி அமைந்த பிரும்மாண்டமான கீற்றுப் பந்தலைக் கண்டு ஆந்திரர்கள் அதிசயித்தனர். நகரமே திரண்டு வந்து சபை நிரம்பி வழிந்தது. இங்கு இந்த மாதிரி ஒரு விழா நடைபெறும் என்பதை ஊகித்த பல்லவச் சிற்பிகள் முகப்புடன் கூடிய மண்டபம் ஒன்றை அந்தக் காலத்திலேயே கட்டி வைத்தார்கள் போலும். மண்டபத்தின் பின்னணியில் கற்பாறைகளில் செதுக்கப்பட்ட தெய்வீகச் சிற்பங்கள் வர்ணங்கள் தீட்டப்பெற்றுப் புது மெருகுடன் பிரகாசித்தன.

வானோர்கள் பின்புறம் சிலையாக வந்து நிற்க, வையத்தார் முன்னகத்தை ஆவலுடன் காத்து இருக்க, மேடையிலே புலித் தோல் ஆசனத்தின் மீது 'இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிய' தட்சிணாமூர்த்தியை நினைவுபடுத்தும் வகையில் ஞானக் கலை பொலியும் முகத்துடன் பெரியவாள் வீற்றிருந்தார்கள். பக்கத்தே இரு ஆந்திர அமைச்சர்கள்; அண்மையில் புதுப் பெரியவாளின் அருள் நிரம்பிய திருவதனம்!

திருவாரூர் ஸ்ரீ மகாலிங்க குருக்கள் சங்க வாத்தியம் முழங்க, தியான ஸ்லோகங்களுடன் விழா ஆரம்பமாயிற்று.

ஸதஸ் நிர்வாகக் குழுவின் தலைவர், ஆந்திர அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் ஸ்ரீ நரஸிம்ஹராவ் சமஸ்கிருதத்தில் வரவேற்புரை நிகழ்த்தினார். இவ்வருட ஸதஸை ஆந்திர தேசத்தில் கூட்டியதற்கு ஸ்ரீ சுவாமிகளுக்கு நன்றி கூறியதுடன், சுவாமிகள் ஆந்திரப் பிரதேசம் முழுவதும் விஜயம் செய்து மக்களை ஆசீர்வதிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார் அமைச்சர்.

அடுத்துப் பேசிய ஆந்திர ராஜ்யக் கல்வி அமைச்சர் ஸ்ரீ பலராம் ரெட்டி அவர்கள், ''மகாபுருஷர் விஜயம் செய்திருக்கிறார்கள். காளஹஸ்தி மக்களுக்கு இது பாக்கியம் மிகுந்த நேரம்'' எனக் கூறி, விழாவின் பக்தி வளர்க்கும் நோக்கத்தை எடுத்துரைத்தார்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி சுவாமிகள் சுந்தரத் தெலுங்கில் உரை அருளி, விழாவை ஆரம்பித்து வைத்தார்கள்.

''இவ்வூருக்கு வந்த புதிதில் பக்தர் ஒருவரது குழந்தை என்னை அணுகியபோது வாயில் அடக்கி வைத்திருந்த கற்கண்டை நீட்டியது. அந்தச் செயல் இந்தத் தலத்திற்கே விசேஷமானது. நிக்ருஷ்டமான பொருள்களும் உத்கருஷ்டம் அடையும் க்ஷேத்திரம் இது. பாவற்காய் கசக்கிறது. ஆனால் வெல்லம் இணைந்தால் கசப்பு நீங்குகிறது. அதுபோல் அசுத்தமான செயலும் பக்தியுடன் அணையும்போது சுத்தமாகிவிடுகிறது. கண்ணப்பரது கை மாமிசமும், கால் செருப்பும், வாய் நீரும் பக்தியின் அடிப்படையில் வழங்கப்பட்டதால், இறைவன் அன்புடன் ஏற்றுக் கொண்டான்.

''இவ்வூர் மணிகண்டேசுவரர் ஆலயத்தில் சில கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவற்றில் இந்த சுலோகம் காணப்படுகிறது. 'பிறையும், கொன்றைப் பூவும், கங்கையும் அமைந்த உனது திருமுடியைக் கண்ணப்பரது தோல் செருப்பும் அலங்கரிக்கிறது' என்று உயர்வாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சிவானந்த லஹரியில் 'மார்க்கா வர்த்தித பாதுகா பசுபதேரே அங்கஸ்ய கூர்ச்சாயதே' என்று பெருமையுடன் பேசப்படுகிறது. ஆகவே பக்தியின் பெருமையை விளக்கும் இந்த ஸ்தலத்தில் இவ்வருட ஸதஸ் கூடினது பொருத்தமாகும்.

''பக்தி உண்டானால் பேதம் நீங்கிவிடும். அதுவே நமது தர்மம். திருப்பாணாழ்வார், நந்தனார் போன்ற பக்தர்களை இறைவன் வலியத் தனது திருக் கோயிலுக்கு அழைத்துக் கொண்டான்.

''இப் பக்தியை வளர்ப்பவை கோயில்கள். அதனைச் சார்ந்தவை கலைகள். மகாபலிபுரம் கோயில்கள் கலைச் சிறப்புக்காக மட்டுமல்ல; பக்தியைப் பரப்பவும் எழுந்தவை. இதனைச் சிருஷ்டித்த கலைஞர்கள் தியாகிகள். கிராமக் கலைகள் பக்தியை மக்களிடையே வளர்த்து அவர்களைப் பண்புள்ளவர்களாக ஆக்குகின்றன. ஒவ்வொருவரும் பொய் சொல்லாமல், திருடாமல் நல்லவர்களாக வாழ்ந்தால் நாம் இன்னொரு தேசத்திற்குப் புத்தி

சொல்லலாம். அவர்களும் நம்மை நாடி வருவார்கள். இந்த நெறி ஏற்பட பக்தி அவசியம்.

''பக்தியைப் பரவச் செய்யும் இத்தகைய கிராமக் கலைகள் தாய்லாந்து, கம்போடியா, லாவோஸ் போன்ற நாடுகளிலும் காணக் கிடைக்கின்றன. இந்த ஒருமைப்பாட்டைக் கொண்டு இந்நாடுகளைச் சேர்த்து விரிந்த பாரதம் (Greater India) என அழைக்கலாம்.

''கிரேக்கர்கள் இந்தியா வந்தபோது தெருவில் தங்கம் விழுந்தால் எடுப்பாரில்லை. இப்போது எங்கும் கலப்படம். மக்களால் இயங்குவது அரசாங்கம். தனி மனிதன் தனது நற்பண்பை இழந்தால் சர்க்காருக்கு மதிப்பு இல்லை. ஆகவே நமது நாட்டில் புதிய வாழ்வும், அறநெறியும் துலங்க வேண்டு மானால் பக்தியை வளர்க்கும் இக்கலைகள் க்ஷீணிக்காமல் காப்பாற்ற வேண்டும். அக் கலைஞர்களைப் போற்ற வேண்டும்; ஆதரிக்க வேண்டும். அதுவே இந்த ஸதஸின் நோக்கம். ஆந்திர சர்க்கார் ஆலயப் பணத்தை பக்தியை வளர்க்கவே பயன்படுத்த வேண்டும் என்று சட்டம் போட்டிருக்கிறார்கள். அதனை வர வேற்கிறேன்.''

சுவாமிகளது அருள்வாக்கிற்குச் செவி சாய்த்த மக்கள் கூட்டத்துக்குப் 'பெரிய வாள்' இன்னும் பேச மாட்டார்களா என்றே தோன்றியது.

ஸதஸ் ஏழு நாட்கள் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. திருவிழாக் கூட்டம் போல 'ஜே ஜே' என்று ஜனங்கள் வந்த வண்ணம் இருந்தனர். கலை நிகழ்ச்சிகளின்போது வேர்க்கடலை விழுந்தால் வனஸ்பதி ஆகிவிடுமளவு கூட்டம்!

முதல் இரண்டுநாட்கள் சிவாகமமும் அடுத்த இரண்டு நாட்கள் வைஷ்ணவக் கிளையில் பாஞ்சராத்திர, வைகானஸ ஆகமங்களும், ஒரு நாள் சிற்ப சாஸ்திரமும், இறுதி இரு தினங்கள் ஜோதிஷமும் விழாவில் பங்கு கொண்டன. காலையில் வித்வான்கள் விவாதம், பிற்பகல் பிரசங்கங்கள், மாலை கலை நிகழ்ச்சிகள் என்று நாள் முழுவதும் 'விருந்து'க்கு ஏற்பாடு செய்திருந்தனர், ஸதஸ் நிர்வாகிகள்.

## விவாதங்கள்

ஆகம பண்டிதர்கள் கூட்டத்தில் விவாதிக்கப்பட்ட விஷயங்களுக்குச் செவி சாய்க்கையில் ஆகமக் கலையின் நுட்பமான கருத்துக்கள் நம்மைப் பிரமிக்கச் செய்கின்றன. சைவ, வைஷ்ணவ ஆராதனை முறைகளை ஒப்பிடுவதுடன், ஆந்திர வழிபாட்டு முறையை ஒப்பிட்டு நோக்கும் வாய்ப்பு இம்முறை ஸதஸுக்குக் கிடைத்தது. இந்த விசாரணைக் கூட்டங்களுக்குப் புதுப் பெரியவாள் தலைமை வகித்து, தமிழ் வித்வான்கள் கருத்துக்களைத் தெலுங்குப் பண்டிதர்களுக்கும், ஆந்திரர் பேச்சைத் தமிழ் அறிஞர்களுக்கும் அவரவர் பாஷையில் மொழிபெயர்த்து, சாஸ்திர ரீதியாக விவேகமான முடிவுகள் எடுக்கத் துணை புரிந்த விதரணை அழகாக இருந்தது. இளம் வயதிலேயே ஞானச் செல்வராக அவர் விளங்குவது நமது பாக்கியமே!



மலர்ந்த நகையுடன் அருள்பாலிக்கிறார் பெரியவர்கள்

கோயில் புதுப்பிக்கும் வேலை நடைபெறும் போது மூல விக்கிரகத்தின் சக்தி மற்றொரு பிம்பத்துக்கு ஆகர்ஷணம் செய்து வைப்பதற்குப் 'பாலாலயம்' என்று பெயர். இந்தப் பிம்பத்தை எத்தனை காலம் வைத்துக் கொள்ளலாம், கும்பாபிஷேகம் ஆன பிறகு பாலாலய மூர்த்தியை என்ன செய்வது போன்ற பிரச்னைகள் ஆலோசிக்கப்பட்டன.

## பிரசங்கங்கள்

இரண்டாம் நாள் விழாவின்போது திருச்சி அல்லூரர் வேத சிவாகம பாடசாலை மாணவர்கள் கட்டுக் குடுமியுடனும், கணீரென்ற குரலுடனும் சிவநெறித் தத்துவம் பற்றிச் சம்பாஷித்தனர். சிவாகமம் பற்றியும் வைகானஸ, பாஞ்சராத்திர ஆகமங்கள் பற்றியும் பலர் சொற்பொழிவு ஆற்றி ருசிகரமான தகவல்கள் எடுத்துரைத்தனர்.

புதுச்சேரி பிரெஞ்சு—இந்தியக் கலாசார ஆய்வுக் கழகத்தைச் சார்ந்த டாக்டர் என். ஆர். பட்டின் தமிழ் உச்சரிப்பு எப்படி இருந்த போதிலும், கோயிற் கட்டடக் கலை, பிராகார வளர்ச்சி, வாகனங்கள், தேர், ஸ்தல தீர்த்தம் இவற்றைப் பற்றி விளக்கியபோது அவரது மேதா விலாசம் புலனாகியது.

பிரஞ்சு அறிஞர் பிலியோஸா வேட்டி-ஜிப்பா தரித்துக் கொண்டு நீலகண்ட தீக்ஷிதர் பற்றிப்

பேசியபோது ஏற்பட்ட ஆச்சரியத்தை விட, அமெரிக்கப் பேராசிரியர் டாக்டர் டானியல் ஸ்மித் சட்டையின்றி மேடையில் தோன்றி, ''வைகானஸ ஆகமங்களில் பிராயச்சித்த தத்துவம்'' என்பது பற்றி உபன்யசித்த போது சபையினருக்கு உண்டாகிய வியப்பு அதிகம். அவர்கள் பேசிய விஷயங்களோ ஆராய்ச்சி மிக்கவை. நமது சாஸ்திரங்களிலும், சம்ஸ்கிருதத்திலும் அயல் நாட்டினராகிய அவர்களுக்குள்ள ஆர்வம் பாரதத்தின் புதிய சந்ததிகளுக்குப் படிப்பினையாக அமையும்.

'மானஸ யோகம்' பற்றி பூனா அட்வகேட் ஸ்ரீ பிரபாகர் ஆப்டேயும், 'ஆதிபல்லவர்கள்' பற்றிச் சென்னை தொல்பொருள் ஆராய்ச்சியாளர் ஸ்ரீ ரா. நாகசாமியும் சாங்கோபாங்கமாக எடுத்துரைத்தனர். டாக்டர் வே. ராகவன் சபையினரைத் தம் பேச்சிடையே பல ஸ்தலங்களுக்கு அழைத்துச் சென்று தீக்ஷிதர் கிருதிகளில் ஸ்தல விசேஷத்தைச் சுட்டிக் காண்பித்தார். ஆந்திரப் பிரதேச சிற்பக் கலையைச் சொற்களில் செதுக்கினார், திருப்பதி வேங்கடேசுவரா கலாசாலையைச் சார்ந்த ஸ்ரீ ராமராவ்.

விழாப் பிரசங்கங்களிலே சிகரம் போன்று அமைந்தது, தில்லி, டாக்டர் லோகேஷ் சந்திராவின் உபன்யாஸம். அன்னார் காலஞ்சென்ற பிரபல மேதை ஸ்ரீ ரகுவீராவின் புதல்வர் என்பதைப் புரிந்துகொள்ள ஆருடம் தேவையில்லை; ஆராய்ச்சிப் பிரசங்கமே கூறிற்று. திடீர் திடீரென்று அவர் தோல் பெட்டியிலிருந்து பொம்மைகளையும், துணிகளையும் எடுத்துக் காண்பித்தபோது சபையினர் அடைந்த மகிழ்ச்சியைவிட அவர் எடுத்துரைத்த சில உண்மைகள் பரவசமூட்டின.

சைபீரியா, மங்கோலியா, தாய்லாந்து, ஜப்பான் முதலிய நாடுகளில் எவ்வாறு நமது சாஸ்திரக் கருத்துக்களும், சமஸ்கிருத இலக்கியமும் அந்த மண்ணில் வேரூன்றி யிருக்கின்றன என நிரூபித்தார். மங்கோலியர் ஆறுயிரம் சம்ஸ்கிருத நூல்களைத் தங்கள் பாஷைகளில் மொழிபெயர்த்து வைத்திருக்கிறார்கள் என்றால் மூர்ச்சை அடைய வேண்டாம்! ஆனால் அதில் ஆயிரம் நூல்கள் கூட இந்தியாவில் அகப்படவில்லை என்றால் நாம் தலைகுனிய வேண்டியதுதான்!

இத்தகைய இன்னும் எத்தனையோ விஷயங்கள் கூறிய லோகேஷ் சந்திராவின் ஆய்வுத் திறம் ஸ்வாமிகளது ஆசிகளுக்குப் பாத்திரமாயிற்று. அன்றே காமாட்சி அம்மன் சந்நிதியில் மடத்துச் சார்பில் லோகேஷ் சந்திரா பொன்னாடை போர்த்திக் கௌரவிக்கப் பட்டார்.

மாமல்லபுரச் சிற்பங்களைப் பற்றி ஸ்ரீ டி. என். ராமச்சந்திரன் பேசுகையில் பகீரதன் தவத்தில் உள்ள சிற்பத்தில் இருப்பது அர்ஜுனனது முற்பிறப்பாகிய நர நாராயணனையே குறிக்கும் என்பதைத் தக்க காரணங்களுடன் விளக்கினார்.

## சிற்பம்

ஆலயங்களின் பிரும்மாண்டமான கோபுரங்களைக் காணும்போது நமக்குப் பெருமிதம் ஏற்படுகிறது. நெடிது உயர்ந்த இச் சமயச் சின்னங்கள் பாரதத்தின் மகோன்னதமான பழைமையையும், தியாக உணர்வுடன் பக்திப் பணி புரிந்த சிற்பிகளின் சிறந்த கலைத் திறத்தையும், சதா அஞ்சல் செய்யும் 'ஆகாச வாணிக் கோபுரங்களாக இருக்கின்றன.

ஆனால் அத்தகைய சிற்பிகளின் இன்றைய வாரிசுகளின் நிலைமை என்ன? கைகளில் கலை இருந்தும், போதுமளவு ஆதரவு இன்மையால் இத்தொழிலுக்கு 'கும்பிடு' போட்டு விட்டு வேறு துறையை நாடுகின்றனர். இந்த அவல நிலைமை நீடிக்காமல், இக்கலைகளுக்குத் தகுந்த ஆதரவு அளிக்க வேண்டுமென்று திருவுள்ளம் கொண்டு ஸ்வாமிகள் ஸதஸில் சிற்பிகளையும் அழைத்துக் கௌரவப்படுத்தி வருகிறார்கள். ஆன்மிகத் துறை மட்டுமின்றிச் சமூக நலத்திலும் பெரியவாள் கொண்டுள்ள கவலை என்னென்பது!

7ந் தேதியன்று விசுவகர்மா தினம்! கைவண்ணக் கலைஞர்கள் புதுப் பெரியவாளின் தலைமையின் கீழ் சிற்ப சாஸ்திர நுட்பங்களை ஆராய்ந்தனர்

மகாபலிபுரம் சிற்பப் பள்ளித் தலைவர் ஸ்ரீ கணபதி ஸ்தபதி மூலவருக்கு மேலுள்ள விமானங்கள் வகையை விவரித்தார். திருப்பதி ஸ்ரீ வேங்கடேசுவரா சிற்பப் பயிற்சிப் பள்ளி முதல்வர் ஸ்ரீ தேவ ஷண்முக ஸ்தபதி, கோயில் திருப்பணி 'கண்டிராக்டு'களுக்குச் சிற்பிகளிடமிருந்து 'டெபாஸிட்' கோருவது அச்சிற்பிகளால் கட்ட இயலாது என்றும், ஆலய நிர்மாணத்தை இலாகா வேலையாக எடுத்துக் கொண்டு ஸ்தபதிகளை ஆலோசகராக மேற்கொள்ள வேண்டும் எனக் கூறினார்.

திருச்சி மகாலிங்க ஸ்தபதி ஆலயப் புனருத்தாரணம் செய்யும்போது 'ஏதோ எப்படியோ' என்று செய்யாமல் அறிவு சார்ந்த ஸ்தபதிகளின் உதவி கொண்டு சாஸ்திரோக்தமாக அமைக்கவேண்டும் என்று தெரிவித்தார்.

## பஞ்சாங்கம்

கணித சாஸ்திரிகளைப் 'பஞ்சாங்கக்காரன்' என்று இளக்காரமாகக் கூப்பிடுவது தவறு என்று சொல்லி, அவர்களது பெருமையை உணர்த்த அவர்களையும், ஸதஸில் சென்ற வருடம் ஸ்வாமிகள் இணைத்ததிலிருந்து அவர்களுக்குச் 'சுக்ர தசை' பிறந்திருக்கிறது.

பஞ்சாங்கம் அமைப்பதில் எத்தனையோ மாறுபட்ட கருத்துக்கள்! ஆனால் ஸதஸைப் பொறுத்த வரையில் த்ரிக்கணித முறையே சென்ற வருடம் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. அதன்பிரகாரம் த்ரிக்கணித சாஸ்திரிகள் இந்தியாவின் பல பாகங்களிலிருந்து வந்திருந்தார்கள்.

கிரகங்கள் கூடினது போல் கணித சாஸ்திரிகள் விவாதித்தபோது மேடையில் கலகலப்பு ஏற்பட்டது. ராகுவும் கேதுவும்போல் சிலர் காணப்பட்டனர். ஐந்து நாட்களாகத் தொடர்ந்து பிரசங்கங்கள் கேட்டு அலுத்துப் போன சபையினருக்கு இந்த உணர்ச்சி அரங்கம் உற்சாகச் சுரங்கமாக இருந்தது.

பஞ்சாங்கம் கணிப்பதில் சைத்ர பக்ஷ அயனாம்சமா அல்லது ரேவதிபக்ஷ அயனாம்ச அடிப்

படையைக் கொல்வதா என்பதில் சாஸ்திரிகள் 'பார்வை' விழுந்தபோது விவாதத்துக்குச் 'சனி தசை' பிறந்தது!

ஒருவர் ஆங்கிலத்தில் அலறினர்; மற்றொருவர் மராத்தியில் மறுமொழி பகர்ந்தார்; தெள்ளு தமிழில் வார்த்தைகளைச் சிலர் அள்ளி வீசினர்; கனி தெலுங்கில் சிலர் விளித்தனர்; கன்னடத்தில் ஒருவர் விளாசினர்!

நல்லவேளை சமஸ்கிருதம் என்ற பொது பாஷை இருந்ததோ புதுப் பெரியவாள் சமாளிக்க முடிந்ததோ!

மாலைக் கூட்டத்தில் ஸ்ரீ ஆச்சாரிய சுவாமிகள் சோதிட சாஸ்திரத்தைப் பற்றி விளக்கம் செய்தார்கள்:

'நயனம் நம்மை நடத்திச் செல்வது. ஜோதிஸ் என்றாலே ஒளி என்று பொருள். வேத காரியங்களுக்கு இது வழிகாட்டி ஆதலால் இது ஜோதிஷ சாஸ்திரம்.

''திரிக்' என்றால் பார்ப்பது என்று அர்த்தம். நாம் நேரில் பார்த்து வருப்பது 'திரிக் கணிதம்' அது சுருதி அடிப்படையிலும் இருக்குமானால் அதனை நாம் சிறந்தது என மேற்கொள்ள வேண்டும்.

## கலை நிகழ்ச்சிகள்

'பொய்யே சொல்லாதே; சத்தியத்தைச் சொல்' என்று வேதத்தில் ஒரு வாக்கியம் இருக்கிறது. ஆனால் வேதங்களையும் உபநிஷத்தையும் எல்லோரும் படிக்க முடியுமா? அரிச்சந்திரன் கதையைக் கேட்கும்போது 'சத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்' என்ற உண்மை தெள்ளென விளங்குகிறது. மகாபாரதத்தை ஒவ்வொரு தலைமுறையிலும் ஒவ்வொரு கோயிலிலும் வைத்து வாசிக்க வேண்டும் என்று சாஸனங்கள் எழுதி வைத்திருக்கிறார்கள். அதைக் கேட்ட ஜனங்களிடையே உயர்ந்த நீதியும், தர்மமும் இருந்தன. வில்லுப் பாட்டு, பொம்மலாட்டம், நாடகம், பஜனை, புர்ர-கதா போன்ற கிராமக் கலைகளும் இந்தக் கைங்கரியத்தைத் தான் செய்து வந்தன. இன்று இக்கலைகள் மங்கி விட்டன; நம்முடைய ஆதர்ச வாழ்க்கைக்கும் பங்கம் வந்து விட்டது. ஆகவே நலிந்துவிட்ட இந்த நாட்டுப்புறக் கலைகளுக்குப் புத்துயிரளித்து, மக்களை நன்னெறியுடன் வாழச் செய்ய வேண்டுமென்ற தீர்க்க தரிசனத்துடன் சுவாமிகள் இவற்றையும் ஸதஸில் சேர்த்திருக்கிறார்கள். பண்டித விழாவுடன் பாமரக் கலையும் இணைந்தது.

பலப் பல கிராமக் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இவற்றில் மதுரை திரு பெரியசாமியின் கரகம், காவடி, பொய்க்கால்குதிரை ஆட்டத்தை ஆந்திரர்கள் விழித்த கண் இமைக்காமல் அனுபவித்தனர். மிகவும் 'பாப்புலரா'ன இந் நிகழ்ச்சிக்குச் சபையினர் 'ஒன்ஸ் மோர்' கோரியதால் மீண்டும் இறுதி நாளன்று நடைபெற்றது. டெல்லி ஸ்ரீ ஜமா காஷ்மீரத்துக் கிராமப் பாடல்களைப் பாடிக் காண்பித்தார். 'குச்சப்புடி' நடனத்தில் இன்னும் சிறந்த குழுவை வரவழைத்திருக்கலாம்.

கோகுலாஷ்டமி அன்று கண்டசாலா ஸ்ரீ வேங்கடேசுவர ராவ் குழுவினர் அற்புதமாகப் பல ராகங்களில் பாடிய 'யக்ஷ கானம்' சபையினர் காதுகளில் இன்பத் தேனைப் பாய்ந்தது. அன்று ஜகத்குரு ஆச்சாரிய சுவாமிகள் உரை நிகழ்த்தி அருளினார்கள்.

''பசு - பதி என்றாலும் கோ-பாலன் என்றாலும் அர்த்தம் ஒன்றுதான். லிங்கோத்பவ மூர்த்தியாகத் திருவண்ணாமலையில் இறைவன் மூன்றாம் ஜாமத்தில் ஆவிர்ப்பவித்தார். கண்ணன் அவதரித்தது பன்னிரண்டு மணிக்கு. இந்த ஒருமைப்பாட்டைக் கவனிக்க வேண்டும். பசுபதியை வணங்கினால் பாசத்திலிருந்து விடுபடலாம். ஆறு நாட்களாக நீங்களெல்லாம் கட்டணமின்றிக் கலைகளை ரஸித்து வருகிறீர்கள். உங்களுக்குக் கட்டணம் விதிக்கப் போகிறேன். என்ன தெரியுமா? கிருஷ்ண நாமத்தைத் தினம் உச்சரியுங்கள். பசுவைக் காப்பாற்றுங்கள். அகத்திக் கீரை வளருங்கள்.''

இரவு மணி பன்னிரண்டு ஆனதே கூட்டத்துக்குத் தெரியவில்லை!

இறுதி நாளன்று அஹோபிலம், திருப்பதி முதலிய ஆந்திர க்ஷேத்திரங்களின் சினிமாப் படம் காண்பிக்கப்பட்டது.

ஆந்திர தேசத்து அறநிலையப் பாதுகாப்பு அதிகாரிகள் ஸ்ரீ நாராயண செட்டியும், அவரது உதவி அதிகாரிகளும் ஸதஸில் கலந்து கொண்டு உதவியது குறிப்பிடத் தக்கது. ஆந்திர 'இந்து அறநிலையச் சட்டம்' அமுலுக்கு வருவதையொட்டி அதைச் செயல்படுத்தும் முறை பற்றிப் புதுப் பெரியவாள் தலைமையில் அதிகாரிகள் கலந்து ஆலோசித்தது ஸதஸ் இயக்கத்துக்குப் பெருமை தருவதாகும். ஸதஸ் சிறப்பாக நடைபெறுவதற்குக் காரியதரிசி ஸ்ரீ அண்ணாதுரை ஐயங்கார், முனிஸிபல் சேர்மன் ஸ்ரீ ஸ்ரீ பி. ஆர். மாதவ ராவ், காளஹஸ்தி தேவஸ்தான நிர்வாகி ஸ்ரீ பி. நாகி ரெட்டி, புலாவலியிலிருந்து வந்திருந்த ஸ்ரீ டி. எஸ். ஹரிஹரன், சென்னை ஸ்ரீ ஸ்ரீதர், மற்றும் பல காளஹஸ்தி தொண்டர்கள் இரவு பகலாக உழைத்ததைப் பாராட்டுவது அவசியம்.

விழாக் கோலம் பூண்ட காளஹஸ்தி நகரிலே ஏழு நாட்கள் ஆகம, சிற்ப, கணித சாஸ்திரங்களும், கலைகளும் கொடி கட்டிப் பறந்தன. வான வீதியில் உலவி வந்த வியாசர் இதனைக் கண்ணுற்று உள்ளம் பூரித்தார். இந்த ஐந்தாவது ஸதஸினால் கலைகளுக்கு மட்டுமின்றி காளஹஸ்திக்கும் யோகம் பிறந்திருக்கிறது. இங்குள்ள சிதலமடைந்த கோயில்களின் புனருத்தாரணப் பணி சுவாமிகளது ஆசிகளுடன் ஆரம்பமாக இருக்கிறது. இந்த ஸதஸ் இயக்கம் தமிழ் நாட்டிலிருந்து ஆந்திராவுக்கும் பரவத் தொடங்கி விட்டது. இதன் மூலம் ஆந்திரர் — தமிழர்களது ஐக்கியத்துக்கு ஆரம்ப விழா நடத்தியிருக்கிறது எனக் கொள்ளலாம். ஸ்வாமிகளது ஸ்ரீ காளஹஸ்தி விஜயம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியாரின் ஆந்திர தேசப் புனித யாத்திரையின் ஆதார வாயிலாக அமைய வேண்டும் என்று விசால ஆந்திர மக்கள் பிரார்த்திக்கிறார்கள்.



THE BAD OLD DAYS ARE GONE FOR EVER...



...NOW that our village has a Myers Pumping system.



Myers or Pumps for Every Purpose

You can have a pump to suit your own particular needs. For details, contact:

**WATER SUPPLY SPECIALISTS PVT. LTD.**

Kal-ma 330, THAMBU CHETTY STREET

MADRAS-1



## சரஸ்வதி சபதம்

கலைமகள், மலைமகள், திருமகள் ஆகிய மூவருக்கும் 'கல்வியா, வீரமா, செல்வமா— எது பெரிது?' என்ற விவாதம் ஏற்பட்டு முற்றுகிறது. முற்ற வைத்தவர் நாரதர். அவர் தான் மூன்று தேவிமார்களையும் பலப் பரீட்சை செய்யத் தூண்டுகிறார். மேற்படி பலப் பரீட்சையின் மூலம் ஒரு கதையே உருவாகிறது. ஓர் ஊமையைப் பேச வைத்து, கவிஞனாக்கிக் கல்விதான் பெரிது என்பதை நிரூபிக்கிறேன் என்று சபதமிடுகிறாள் சரசுவதி. ஒரு பிச்சைக் காரியை நாட்டின் இளவரசியாக்கி அந்தக் கவிஞனை அவள் காலில் விழும்படி செய்து செல்வம்தான் பெரிது என்பதை நிலைநாட்டுவதாக உறுதி கூறுகிறாள் லக்ஷ்மி. ஒரு கோழையை மகா பராக்கிரமசாலியாக்கி உலகிலேயே வீரம்தான் சிறந்தது என்பதை யாவரும் உணர வைக்கிறேன் என்று மலைமகள் சபதம் கூறுகிறாள். கடைசியில், கல்வி, செல்வம், வீரம் ஆகிய மூன்றுமே மனிதனுக்கு இன்றியமையாதவை என்பது திரைக் கதையின் முடிவு.

நாரதராக வந்து திரைக் கதைக்கே காரணமாக இருக்கும் சிவாஜி கணேசன் ஊமை வித்தியாபதியாக வந்து ஒரு சில நிமிஷங்களில் எல்லாரையும் உருக்கி விடுகிறார். மூன்று தேவிமார்களிடமும் பயந்து, நடுங்கி, அடங்கி, ஒடுங்கி நிற்கும் நாரதர் சிவாஜிக்கும், கவிஞன் வித்தியாபதிக்கும் எத்தனை வித்தியாசம்! அகம்பாவம் கொண்ட இளவரசியின் கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்து, செருக்குக் கொண்ட சேனாபதியை அவமதித்துச் சீறும் வித்தியாபதியின் பாகத்தைச் சிவாஜி மிகவும் சிறப்பாகச் செய்திருக்கிறார். நாரதரின் பேச்சும், பாவனையும் நகைச்சுவை ததும்ப இருப்பதால், படம் கலகலப்பாயிருக்கிறது.

சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகிய மூன்று தேவிமார்களின் பாகங்களையும் ஏற்றிருக்கும் சாவித்திரி, தேவிகா, பத்மினி மூவரும் நன்றாக நடித்திருக்கின்றனர்.

கோழையாயிருந்து மலைமகளின் கிருபையால் வீரனாக மாறிவிட்ட தளபதியாக ஜெமினி கணேசன் நடிக்கிறார். அடேயப்பா! இத்தனை வீரத்தையும், சூரத்தனத்தையும் இத்தனை நாட்களாக அவர் எங்கே மறைத்து வைத்திருந்தார் என்று அதிசயப்பட வைத்து விட்டார்.

''தாய் தந்த பிச்சையிலே பிறந்தேனம்மா'' என்று பாடிக் கொண்டு தெருத் தெருவாய்ப் பிச்சையெடுத்து, தத்ரூபமாக நடித்து எல்லாரையும் நெகிழ வைத்த கே. ஆர். விஜயா, திருமகளின் திருவருளினால் இளவரசியாகி விட்ட பிறகும் மிடுக்கிலும், துடுக்கிலும், தளுக்கிலும் சிறிதும் குறையவில்லை. ஆலயத்தில் கவிஞன் வித்தியாபதியின் பாட்டைக் கேட்டுப் பரவசமாகி அவனைப் பார்த்த பார்வையில் ரசிகர்களின் உள்ளத்தில் இடம் பிடித்து விட்டார் விஜயா.

பாடல்கள், திரை இசைத் திலகம் கே.வி. மகாதேவனின் இசையமைப்புக் காரணமாகக் கர்நாடக மெட்டுகளில் ஒலித்துச் செவியை நிரப்புகின்றன. ''அகரமுதல எழுத்தெல்லாம்'' என்ற பாட்டைக் கவிஞன் பாடும் விதத்தை அழகாகப் படமாக்கியிருக்கிறார்கள். ஆனால், முதலில் பாடப்படும் ''கலை வாழ்க, மலர் வாழ்க'' என்னும் 'கோரஸ்' பாட்டு அலுப்புத் தட்டுகிறது.

வசனத்தில் கமழும் தமிழ் மணம் படத்தின் தனிச் சிறப்பு. டைரக்ஷனில் திறமை சுடர் விடுகிறது. பாராட்டுக்குரியவர் ஏ. பி. நாகராஜன்.

ககன மார்க்கமாக நாரதர் வருதல், சத்தியலோகம், கைலாசம், வைகுண்டம் முதலியன வான வீதியில் காட்சி தருதல் ஆகிய காட்சி ஜோடனைகள் நன்றாயிருக்கின்றன. படத்தின் வண்ணம் கவர்ச்சியாயிருக்கிறது.

படத்தில் துளிக்கூடக் 'காதல்' இடம் பெறாதது தமிழ்ப் படங்களுக்கே ஒரு மாறுதல்தான் !

விஜயலக்ஷ்மி பிக்சர்ஸாரின் ''சரஸ்வதி சபதம்'' ஒரு வெற்றிப் படமே !

பாரதநாட்டுச் சுதந்திர வரலாற்றில் பங்கு பெற்றவர்களில் ஒருவர் மகாகனம் சீனிவாச சாஸ்திரியார். அவரது பிறந்த நாளான செப்டம்பர் 22ம் தேதியை யொட்டி அவர் நினைவுக்கு அஞ்சலி செய்யும் வகையில் இக்கட்டுரையை இங்கு வெளியிடுகிறோம்.—ஆசிரியர்

# மகாகனம் சாஸ்திரியார்

—டி. டி. விஜயராகவன்—

இந்திய அரசியல் தலைவர்களில் மகாகனம் சீனிவாஸ சாஸ்திரியார் அவர்களுக்கு ஒரு சிறப்பான இடம் உண்டு. அவர் ஒரு தீவிர மிதவாதி ! ஆனால் அவருடைய அரசியல் வாழ்க்கையின்போது பெரும் பகுதி நாட்களில் தீவிரவாதிகளின் கைதான் மிகவும் ஓங்கி யிருந்தது.

முக்கியமாக காந்திஜி 1919ல் ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்ததிலிருந்து மிதவாதிகளின் கொள்கைக்கு அதிகமாக ஆதரவு கிடைக்க வில்லை. மிதவாதிகளும் இந்திய சுதந்திரத்துக்காகத்தான் போராடினார்கள். ஆனால் அவர்கள் ஒத்துழையாமை, சத்தியாக்கிரகம் போன்ற நடவடிக்கைகளை ஆதரிக்கவில்லை. அவர்கள் அரசாங்கத்துடன் ஒத்துழைத்தே தேசத்தின் விடுதலைக்கு வழி தேட வேண்டுமென்று வாதித்தார்கள். இதைத் தான் ஆங்கிலத்தில் (Constitutionalism) என்று சொல்வது.

இப்படிப்பட்ட சந்தர்ப்பச் சூழ்நிலையிலேயும், சீனிவாஸ சாஸ்திரியார் அரசியல் வாழ்க்கையில் பெரிய செல்வாக்கு அடைந்தார். அவருடைய இளமைப் பிராயம் வெகு ஏழைமையில் கழிந்தது. அவர் உத்தியோகம் ஏற்றது ஒரு பள்ளி ஆசிரியராகத்தான். அப்படி இருந்தும் இந்திய அரசியலில் மட்டுமல்லாமல், 'காமன்வெல்த்'தைச் சேர்ந்த பிறநாட்டுப் பிரமுகர்களிலேயும் ஒரு முக்கிய இடம் பெற்றார்.

இப்பெரியாருடைய அரசியல் வாழ்க்கை வரலாற்றை மிக சிரத்தையுடனும், அழகாகவும் புத்தகமாக * அளித்திருக்கிற திரு பி. கோதண்டராவ் அவர்களுக்கு நாம் மிகவும் கடமைப்பட்டுள்ளோம்.

சாஸ்திரியாரின் வரலாற்றை எழுதுவதற்கு இவரைவிடத் திறம்படைத்தவர் இருக்க முடியாது. கோதண்ட ராவ் சாஸ்திரியாரிடம் நெருங்கிப் பழகினவர். அவருடன் 'சர்வண்ட்ஸ் ஆப் இந்தியா சொஸைட்டி'யில் சேவை செய்தது மட்டுமல்லாமல், அவருடைய அந்தரங்கக் காரியதரிசியாகப் பல வருஷங்கள் இருந்திருக்கிறார். சாஸ்திரியார் தமது சுய சரிதையை எழுத வேண்டுமென்று அவருடைய நண்பர்கள் அடிக்கடி வற்புறுத்துவது உண்டு. ஆனால் அவரோ, ஒரே பிடிவாதமாகத் தாம் எழுதப் போவதில்லை என்றதுடன் மற்றவர்களும் எழுதக் கூடாது என்று உத்தரவிட்டிருந்தார். முக்கியமாக இந்தத் தடை கோதண்டராவ் அவர்களுக்குத்தான் ! 1939 அக்டோபர் 29ந் தேதி அவர் கோதண்டராவுக்கு எழுதிய கடிதத்தில், "'சர்வண்ட்ஸ் ஆப் இந்தியா சொஸைட்டி'யில் இருக்கிற அங்கத்தினர்களில் உமக்கு ஒருவருக்குத்தான் இந்த எண்ணம் தோன்றும். ஆனால் நீர் அதைச் செய்யக்கூடாது என்று நான் கட்டளை இடுகிறேன்" என்று எழுதியிருந்தார். நல்ல வேளையாகக் கோதண்டராவ் இந்த ஆக்ஞைக்குத் தாற்காலிகமாகத்தான் உட்பட்டார்! இந்நூலை அவர் எழுதாமலே இருந்திருந்தால் இந்திய அரசியல் வரலாற்றுக்கே அது பெரிய நஷ்டமாக இருந்திருக்கும்.

சாஸ்திரியார் சிறு வயதில் அநுபவித்த வறுமை எப்படிப்பட்டது என்பதை அவரே இந்திய மேல் சட்டசபையில் ஒரு விவாதத்தின் பொழுது குறிப்பிட்டிருக்கிறார். இதையே புத்தகத்தின் ஆரம்பமாக ஆசிரியர் எடுத்துக் கொண்டிருக்கிறார். உப்பு வரியை எதிர்த்து 1923, மார்ச் 23ந் தேதி தாம் செய்த பிரசங்கத்தில் சாஸ்திரியார் தம் மனம் திறந்து பேசி ஒரு சம்பவத்தைக் குறிப்பிட்டார். அவருடைய தாயார் உப்பு வாங்குவதற்குக் கூடப் பண வசதி இல்லாததால் யாரோ ஒருவர் ஊறுகாய் போடுவதற்கு என்று தானமாகக் கொடுத்த மாங்காய்களை வேண்டாமென்று நிராகரித்து விட்டாளாம்! (ஆசார வழக்கத்தின்படி, உப்பை யாரும் தானம் செய்யக் கூடாது என்று நூலாசிரியர் விளக்கம் செய்திருக்கிறார்.)

மற்றொரு தடவை இந்திய சட்டசபையில் பேசும் பொழுது சாஸ்திரியார் வெகு ஹாஸ்யமாகத் தமது பொருளாதார நிதிநிலையை வர்ணித்தார். வருமான வரி பற்றின விவாதத்தின் பொழுது அவர் சொன்னார். "எனக்கு நிலம் கிடையாது. அதனால் நிலவரி கட்டுவதில்லை. என்னுடைய வருமானமும் நிதி அமைச்சரின் வரம்புக்கு உட்பட்டு இருப்பதால், வருமான வரியும் கட்டுவதில்லை. அரசாங்கத்துக்கு நான் அளிக்கும் காணிக்கை என்னுடைய எதிர்ப்புக் கிளர்ச்சி ஒன்றுதான். அதுபயனுள்ளதென்றேகருதுகிறேன்."

கோகலேயின் 'சர்வண்ட்ஸ் ஆப் இந்தியா சொஸைட்டி'யில் சேர்ந்த சாஸ்திரியார் கோகலேக்குப் பிறகு அதன் தலைவரானார். சென்னை சட்ட சபையிலேயும், இந்திய சட்ட சபையிலேயும் பணியாற்றினார். 1921ல் அவர் இங்கிலாந்துக்கு இம்பீரியல் மகாநாட்டில் இந்தியப் பிரதிநிதியாகக் கலந்து கொள்ளச் சென்றார். இந்த மகாநாட்டில் அவர் இங்கிலாந்தின்

* The Right Hon'ble V. S. Srinivasa Sastri A Political biography ; By P. Kodanda Rao. Asia Publishing House, Bombay. Price : Rs. 28/-

பிரதமர் லாயிட் ஜார்ஜ், தென் ஆப்பிரிக்கப் பிரதமர் ஸ்மட்ஸ், மற்றும் இதர 'டொமினியன்' பிரதமர்களுடன் சரி சமமான ஆசனம் பெற்றார். அதன் பிறகு ஆஸ்திரேலியா, கானடா, நியூஜிலாந்து போன்ற பிரிட்டிஷ் ஆதிக்கத்துட்பட்ட நாடுகளுக்கு விஜயம் செய்தார். 1930லும், 1931லும் வட்ட மேஜை மகாநாடுகளில் பங்கெடுத்துக்கொண்டார். தென் ஆப்பிரிக்காவில் இந்தியாவின் பிரதிநிதியாகப் பணியாற்றினார். கடைசியில் அண்ணாமலை சர்வ கலாசாலையில் உப அத்யக்ஷகராகச் சேவை செய்தார்.

சாஸ்திரியார் கோகலேயின் பிரதம சீடர். கோகலேக்கும் இவருக்கும் உள்ள ஒற்றுமையைப் பற்றிக் கோதண்ட ராவ் அழகாக எழுதியிருக்கிறார். இருவரும் ஏழைமையில் பிறந்தவர்கள்; இருவரும் உபாத்தியாயர்களாயிருந்து, பிறகு அரசியலில் தலைவரானார்கள். இருவரும் சட்ட சபைகளில் விசேஷப் பணியாற்றினார்கள். இருவரும் இங்கிலாந்துக்கு அரசியல் சம்பந்தமாக அடிக்கடி விஜயம் செய்தார்கள். இருவரும் அரசியல் சட்டத்துக்கு உட்பட்டு இந்தியா சுதந்திரம் பெறும் மார்க்கத்தை ஆதரித்தார்கள். இருவரும் தங்களது குரு ரானடேயின் வாழ்க்கைச் சரிதத்தை எழுத வேண்டுமென்று அவா தெரிவித்துவிட்டு, அதைச் சாதிக்க முடியாமல் இறந்து விட்டார்கள். இருவரும் காந்திஜியிடம் விசேஷ அபிமானம் கொண்டவர்கள். ஆனால் அவர் கடைப்பிடித்த அரசியல் வழிகளை ஒப்புக் கொள்ளவில்லை.

காந்திஜி தமது ஆத்மார்த்த சீடர்களைத் தவிர சாஸ்திரியாரைத்தான் தம்முடைய ஆப்த நண்பராகக் கருதினார். காந்திஜியும் சாஸ்திரியாரும் ஒரே வருஷத்தில் பிறந்தவர்கள் (1869). சாஸ்திரியார் காந்திஜியை விடப் பத்து நாட்கள் மூத்தவர். 1923ல் காந்திஜிக்கு 'அப்பென்டிஸைடிஸ் ஆப்பரேஷன்' நடந்தது. ரண சிகிச்சைக்கு உட்படுமுன் காந்திஜி யாரையாவது பார்க்க விரும்புகிறாரா என்று கேட்டபோது அவர் சாஸ்திரியார் ஒருவரைத்தான் குறிப்பிட்டார். பின்னால், எரவாடா சிறையிலிருந்து காந்திஜி சாஸ்திரியாருக்கு எழுதிய கடிதத்தில், ''என்னுடைய கொள்கைகளின் குறைபாடுகளை நீங்கள் சுட்டிக் காண்பிப்பது எனக்கு ஆறுதலாக இருக்கிறது. உங்களிடமிருந்து கடிதம் வராமலிருந்தால் எனக்குப் பயமாக இருக்கிறது. நமக்குள் உள்ள வேறுபாடுகள் மேலெழுந்தவாரியானவை. காலம் செல்லச் செல்ல உங்களிடம் உள்ள அன்பு அதிகரிக்கிறது'' என்று உருக்கமாக மனம் விட்டுச் சொல்லியிருக்கிறார். சாஸ்திரியாரின் அந்திம காலத்தில் அவர் ஜெனரல் ஆஸ்பத்திரியில் இருந்தபோது காந்திஜி அவரை மூன்று தடவைகள் சந்தித்தார். அந்தரங்க சுத்தமானது அவர்களுடைய நட்பு.

சாஸ்திரியார் ஓர் இலக்கிய மேதை. அவருக்கு ஆங்கிலத்தில் ஏற்பட்ட நிபுணத்துவம் பிரசித்தமானது. அவர் மாணக்கனாக இருந்தபோது நெஸ்பீல்ட் எழுதிய ஆங்கில இலக்கணப் புத்தகத்தில் சில தவறுகளைச் சுட்டிக் காண்பித்து ஒரு பெரிய பரபரப்பை உண்டுபண்ணினார். இத்தனைக்கும் அவர் இங்கிலாந்திலோ அல்லது ஆங்கிலேய உபாத்தியாயர்களிடமோ ஆங்கிலம் கற்கவில்லை. ஓர் ஆங்கில அகராதிதான் அவருக்கு எப்பொழுதும் பிரியாத தோழனாக இருந்தது!

நாடு சுதந்திரம் அடைந்த பின் சாஸ்திரியாரைப் போன்ற மிதவாதிகளின் கருத்துக்களுக்கு ஒரு முக்கியத்துவம் ஏற்பட்டிருக்கிறது. இதில் விசேஷம் என்னவென்றால் சுதந்திரத்துக்கு முன்னால் மிதவாதக் கொள்கைகளை எதிர்த்து, மிதவாதக் கட்சியை இந்திய அரசியலிலிருந்து விரட்டின சில தலைவர்களே நாடு சுதந்திரம் பெற்றதும்



மிதவாதக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட அரசியல் நிர்ணயச் சட்டத்தை உருவாக்க வேண்டிய பிரமேயம் ஏற்பட்டது.

அரசியலிலும், பொது வாழ்விலும் பணி செய்ய விரும்பும் இன்றைய இளைஞர்கள் சாஸ்திரியார் போன்ற பெரியோர்களின் குணங்களை நன்கு உணர்ந்து அதன்படி நடக்க வேண்டும்.

கோதண்ட ராவ் இந்தப் புத்தகத்தை எழுதியதின் மூலம் செய்த அரும் பணிக்காக 1964ல் அவருக்கு வாட்டுமல் (Watumull) பரிசு கிடைத்ததில் வியப்பில்லை. அந்தப் பரிசைக் கொடுக்கும்போது, தருநிச் சான் றிதழில் கூறப்பட்டது இது: "இந்தச் சரிதை இந்தியாவின் அரசியல் சரித்திரத்தை ஒரு புதிய கோணத்திலிருந்து நம்மைக் காண வைக்கிறது. இது ஒரு பெரிய சாதனை. இது வரையில் பெரும்பாலும் இந்திய சரித்திரம் காந்திஜியையும், நேருஜியையும் மட்டுமே சுற்றி யிருந்தது. இந்திய சரித்திரத்தில் சாஸ் திரியாரின் மகத்துவத்தைச் சீர்தூக்கி எழுதி யிருப்பது போற்றத் தக்கது."

இந்தச் சரிதை, வி. விஜயராகவாச்சாரி யார், எஸ். சீனிவாச ஐயங்கார், தீரர் சத்திய மூர்த்தி போன்ற தலைவர்களின் ஆதாரபூர்வ மான வாழ்க்கை வரலாறுகளை எழுதுவதற்கு ஊக்கமளிக்குமானால், அது இளைய பாரதத் தினருக்கு ஒரு பெரிய வரப்பிரசாதமாகும்.

நாடகம்

# இறைவன் இறந்துவிட்டானா?

நாடக மேடையில் "சோ"வின் பிர வேசத்தைக் கண்டு நம்மைப் போல் மகிழ்ந்த வர்கள் கிடையாது. நமது ஆட்சி முறை யிலும், சமுதாயத்திலும் மலிந்துள்ள ஊழல் களை நகைச்சுவையோடு எடுத்துக் காட்டிச் சபையோரை மகிழ்விப்பதில் சோவுக்கு இணை கிடையாது. அவர் படிப்பு, அவர் மனோ பாவம் யாவுமே அதற்குத் துணை நிற்கின் றன. ஆனால் அவரிடம் ஒரு குறை குறிப் பிட்டு வந்தோம். அவர் நாடகத்தில் போய் உட்கார்ந்தால் ஆரம்பம் முதல் கடைசி வரைக் கும் எல்லாப் பாத்திரங்களும் ஹாஸ்யப் பாத்திரங்களாகவே போய்விடுவதையும், சற் றேனும் கம்பீரமான உணர்ச்சிகளுக்கு இட மில்லாமல் போவதையும் எடுத்துக் கூறி வந்தோம். இந்தக் குறையை நிவர்த்தி பண்ண வேண்டும் என்ற எண்ணத்தோடு திரு "சோ" போட்டு வரும் புது நாடகம் பிள்ளையார் பிடிக்கப் போகக் குரங்காக முடிந்த கதையாக இருக்கிறது.

"கடவுள் உண்டா? கடவுள் ஒருவன் இருக் கிறானா? அவனுக்கு மனிதனுக்கு இருப்பது போல் கருணை உணர்ச்சி உண்டா?" என்ற பிரச்னையைப் பிரதான மாகக் கொண்டு அதற்கு விடை காண முயன்று, "கடவுள் இல்லை" என்ற முடிவுக்கு ஜனங்கள்வரும் நிலைக்குக் கதையைக் கொண்டு போய் முடித் திருப்பது, பரிதாபம்!



நாடகம் பார்க்க வரு கிறவர்கள் நிரீசுவரவாதி களாக மாற வேண்டும் என்பது அவர் நோக்க மாக இராது. "சோ"வின் மனமோ, பண்பாடோ அதற்கு உடந்தையாக இருக்கும் என்று நாம் நம்பவில்லை. இருப்பினும் அத்தகைய ஆபத்தான விளைவை அது உண்டாக்கு கிறது.

தமிழகத்தில் நிரீசுவர வாதம் விபரீதமாகத் தலையெடுத்து வந்தபோது பெரியோர்கள் எப்படி எப்படியோ தங்கள் தவ வலிமையால் அதை உடைத்து, சமுதாயத்தில் ஓரளவு நல்ல சூழ்நிலை ஏற்படுத்தி வந்துள்ள இச் சமயத்தில் நாடகம் பார்க்க வரும் நடுத்தர வர்க்கத்தினரிடையே மீண்டும் தெய்வ விசுவாசம் குறையும்படியான ஒரு காரியத்தை யாரும் செய்யக் கூடாது.

நாடகம் போடுபவர்களுக்குச் சமுதாயத் தின்பால் ஆற்றவேண்டிய கடமையுண்டு என் பதை நினைவில் கொண்டு செயல் ஆற்ற வேண்டும்.

நாடகம் முதலிலிருந்து கடைசிக் காட்சிக்கு முந்தைய காட்சிவரை மிக நன்றாகச் செல் கிறது. மைக்கேலிடம் டாக்டராகவரும் 'சோ' "கடவுள்தான் என்னைக் காப்பாற்றினார்—வடபழநியாண்டவனுக்கு அர்ச்சனை செய்யப் போகிறேன்" என்று கூறும் இடத்தில் நாடகம் முடிந்திருந்தாலும் ஒன்றும் குற்றமாக இருந் திராது. கடைசிக் காட்சியில் மைக்கேல் பாதிரியார் இல்லத்துக்கு வந்து மடிந்து, அவருடைய நம்பிக்கையைத் தளரச்செய்து விட்டுப் போவது அவ்வளவு சரியல்ல.

"சோ" எடுத்துக் கொண்டுள்ள பிரச்னை நம் நாட்டுக்குப் புதிதல்ல. விடைகளும் தக்கபடி அளிக்கப்பட்டுள்ளன. கீதையை திரு "சோ" கொஞ்சமாவது படித்து ஹாஸ்யம் செய்து வந்ததால், அவர் இப்புது நாடகத்தில் எழுப்பியுள்ள பிரச்னைக்கு அந்தக் கீதை யிலேயே விடை இருப் பதை மறந்து விட்டார். அர்ஜுனன் கேட்காத கேள்வியையா மைக்கேல் கேட்டு விட்டான்!



**முதல் பரிசு நாவல்**

# முள்ளும் மலரும்

**உமாசந்திரன்**



## அத்தியாயம் 8

"**வ**ள்ளியக்கா, உன் கூடப் பேசினாரே, அவர் தான் அந்தப் புது ஐயாவா?" என்று வள்ளியின் தோளை உலுக்கிக் கேட்டாள் மங்கா, குளக்கரை மண்டபத்தை அடைந்ததும்.

"ஆமாம் மங்கா."

"அவரு கூட வந்தது?"

"யாருன்னு புரியலே. அந்த ஐயாவுக்குத் தெரிஞ்சவங்களா யிருக்கலாம்."

"அந்தப் பொண்ணு எப்படியிருந்தா பார்த்தேல்லே?... பணக்கார வீட்டுப் பொண்ணுன்னு நல்லாத் தெரியுது."

"அப்படித்தான் தோணுது."

"அதெப்படியோ பணத்தோட மினுமினுப்பு உடம்பிலே வந்துடுதே. ஆனால் ஒண்ணு, வள்ளியக்கா! என்னதான் மினு மினுப்பு இருக்கட்டும், வைரமா வாரி மேலே போட்டுக்கிட்டிருக்கட்டும், உன் எதிரே நிற்க முடியுமா அந்தப் பொண்ணாலே?"

"சீச்சீ, தப்பு மங்கா. அவுங்க யாரோ நாம யாரோ, எதுக்கு அந்த மாதிரியெல்லாம் பேசணும்?"

"எனக்குப் பிடிக்கல்லே. அவ்வளவு தான். மனசிலே தோணினதைப் பட்டுப் பட்டுன்னு பேசிடணும். அப்பத்தான் எனக்கு நிம்மதி" என்றாள் மங்கா.

"நல்ல நிம்மதி" என்று சிரித்தாள் வள்ளி.

"அது சரி, அந்த ஐயா உன்கூட அவ்வளவு நல்லாப் பேசினாரே முன்னாலேயே உன்னைத் தெரியுமா?"

"அண்ணனுக்குச் சோறு கொண்டு போனபோது ஒருதரம் பார்த்திருக்காரு. அப்புறம் ஒருதரம் அண்ணன் அவரைப் பார்க்க அழைக்கட்டு வீட்டுக்குப் போயிருந்தபோது...."

"அண்ணன், அண்ணன். எப்பப் பார்த்தாலும் உனக்கு உங்கண்ணன் நினைவுதான். எனக்கு உங்கண்ணனைக்



கொஞ்சம்கூடப் பிடிக்கல்லே. தெரிஞ்சுக்க'' என்று பொறுமையிழந்து குறுக்கிட்டாள் மங்கா.

''அதுக்காக நான் எங்கண்ணனை விட்டுக் குடுத்திட முடியுமா?'' என்று சிரித்தாள் வள்ளி.

''நம்ம காலை ஒடிக்கணும்னு தானே அந்த ஐயா மேலே பழி வைச்சது உங்கண்ணன். இப்ப அதே ஐயா நம்ம டிராலியிலே ஏத்திக்கிட்டு மேலே போகப் போறாரு. உங்கண்ணன் எங்கே கொண்டு போய் முகத்தை வைச்சுக்குதுன்னு நானும் பார்த்திடறேன்'' என்று மங்கா கூறிய போது வள்ளியின் மனத்தில் அச்சம் தோன்றியது.

'அந்த ஐயாவுடனும் மற்றவருடனும் உச்சிக்கடவுக்கு டிராலியில் சென்றால் அண்ணனுக்குக் கோபம் வந்து விடுமே. அண்ணன் கோபம் அகரக் கோபமாயிற்றே !'

''மங்கா, டிராலி எதுக்கு? வந்த வழியாகவே நாம திரும்பிப் போயிடுவோமே?'' என்றாள் வள்ளி.

''அதெல்லாம் முடியாது. டிராலியிலேதான் போகணும். இல்லாட்டி நான் இங்கிருந்து நகரவே மாட்டேன்'' என்று அடம் பிடித்தாள் மங்கா.

வள்ளி வற்புறுத்திக் கூறியிருந்தால் ஒரு வேளை மங்கா இணங்கியிருந்தாலும் இருப்பாள். ஆனால் அதற்குள் குமரனும் மற்றவர்களும் தரிசனத்தை முடித்துக் கொண்டு கோயிலிலிருந்து திரும்பி வந்து விட்டனர்.

''என்ன, நீங்கள் இரண்டு பேரும் புறப்படத் தயார்தானா?'' என்று கேட்டவாறே அருகில் வந்தான் குமரன்.

''நாங்க நடந்தே போயிடறோமே'' என்றாள் வள்ளி தயங்கியவாறே.

''டிராலி உங்களுக்காகவா மேலே போகப் போகுது? எங்ககூட நீங்களும் வரப் போறீங்க.''

''இருந்தாலும் டிராலி சின்னது தானே! எங்களாலே உங்களுக்கு ஏன் தொந்தரவு ?'' என்றாள் வள்ளி.

குமரனுடன் வந்திருந்த பெண் இப்போது குறுக்கிட்டாள்.

''குமரண்ணா! இந்தப் பெண் சொல்வது சரிதானே. நாம் மூன்று பேர்கள் மட்டுமென்றால் தாராளமாகப் போக முடியும். இவர்களுக்கும் சேர்த்து டிராலியிலே இடம் வேண்டாமா?'' என்றாள்.

அதைக் கேட்ட மங்காவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. ''ஏம்மா, டிராலியிலே மூணு பேருக்குத்தான் இடமிருக்கா? சமயத்திலே பத்துப் பதினைஞ்சு பேர்கூட அந்த டிராலியிலே ஏறிக்கிட்டுப் போறதை நான் பாத்திருக்கேன், தெரியுமில்லே?'' என்று கூறினாள் ஆத்திரத்துடன்.

வெடுக்கென்று பேசிய மங்காவை வியப்புடன் பார்த்தான் குமரன்.

நிலைமையைச் சமாளிக்க நினைத்த வள்ளி மங்காவைப் பார்த்துக் கூறினாள். ''மங்கா, வெட்டித் தகராறு எதுக்கு? நாமதான் நடந்து போகத் தயாராயிருக்கோமே... !''

''வேண்டாம். டிராலியிலே பத்துப் பதினைந்து பேர்கள் போவது சாத்தியமில்லாவிட்டாலும் ஐந்து பேர் தாராளமாகப் போக முடியும். நெருக்கடியே இருக்காது'' என்றான் குமரன்.

''ஆமாம் கனகா! இவர்கள் வருவதால் நமக்கு என்ன இடைஞ்சல் ?'' என்றான் குமரனுடன் வந்திருந்த நண்பன் வீரமணி.

''என்னவோ அண்ணா, எனக்குத் தோணினதைச் சொன்னேன். அப்புறம் உங்க இஷ்டம்'' என்று முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு கூறினாள் கனகா.

கௌரியம்மன் கோயிலி லிருந்து டிராலிப் பாதை அதிக தூரத்தில் இல்லை. ஏற்றமும் இறக்கமுமான வழி யென்றாலும் அரைக் கல்லுக்கு மேல் இருக்காது. அந்த வழியில் நடப்பதென்றாலே வள்ளிக்கு ஒரே உற்சாகம். வழியெல்லாம் குட்டை குட்டையான புன்னை மரங்களும் புங்க மரங்களும் பச்சப் பசேலென்று அடர்ந்திருக்கும். ஜன நடமாட்டமே இல்லாத குளிர்ச்சியான காட்டுப் பாதை. என்ன கிளிகள், என்ன கிளிகள்! ஆயிரமாயிரம் கிளிகள் அந்த மரங்களில் உட்கார்ந்து மழலை மொழி பேசிக் கொண்டிருக்கும். பச்சைக் கிளிகள் மட்டுமல்ல, பஞ்சவர்ணக் கிளிகளைக் கூட வள்ளி அந்தக் கிளிக் கூட்டத்தில் பார்த்திருக்கிறாள். அவ்வளவு கிளிகளுக்கும் அந்த மரங்களின் மீது என்னதான் பாசமோ ?

''என்ன வீரமணி, இவ்வளவு கிளிகளை நீ சேர்ந்தாற்போல் எங்கேயாவது பார்த்திருக்க முடியுமா ?'' என்றான் குமரன் தன் நண்பனைப் பார்த்து.

''அற்புதம், அற்புதம்!'' என்றான் வீரமணி.

''இதுங்க போடற கூச்சல்தான் சகிக்க முடியலே. வழியெல்லாம் இதுங்களோட எச்சம் வேறே. நடப்பதே கஷ்டமாயிருக்கு'' என்று தன் அருவருப்பை வெளியிட்டாள் கனகா.

''கனகா! இது காட்டுப் பிரதேசம் அம்மா. நாகூக்கும், நாகரிகமும் இங்கே கட்டி வராது'' என்றான் குமரன்.

''நல்ல சூடு குடுத்தாரு'' என்று வள்ளியைத் தோளில் இடித்து அவள் காதில் கூறினாள் மங்கா.

'' ஏதோ காட்டுக் கோயிலைப் பார்ப்பதற்காக இவ்வளவு தூரம் ஏன் தான் வந்தோம்னு இருக்குது. பங்களாவிலேயே உட்கார்ந்திருந்தால் நிம்மதியாப் பொழுது போயிருக்கும்'' என்றாள் கனகா.

''கனகா! வீட்டிலேயே உட்கார்ந்திருப்பதற்கா இவ்வளவு தூரம் புறப்பட்டு வந்திருக்கோம்? நாலு எடமும் சுற்றிப் பார்த்தாத்தானே நல்லாயிருக்கும்'' என்றான் வீரமணி.

''சுற்றிப் பார்ப்பதற்கு என்ன வச்சிருக்கு இங்கே? திரும்பின பக்கமெல்லாம் காடு, மலை, காடு, மலை! மூணு நாளா இதே கண்றாவியைப் பார்த்துப் பார்த்து அலுத்துப் போச்சு.''

குமரன் சிரித்தான். ''வீரமணி, பட்டணத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன்னமேயே உன் தங்கைக்கு இந்தப் பிரதேசத்தைப் பற்றியெல்லாம் நீ சரியாக விவரித்துச் சொல்லவில்லை போலிருக்கு'' என்றான்.

''எல்லாம் சொன்னேன், சொன்னேன். தானும் என்னுடன் வர வேண்டுமென்று ஒரே பிடிவாதமாயிருந்தவள் அவள்தானே. பச்சோந்தி மனசு.... வேறென்ன?''

''ஊட்டி மாதிரிக் கலகலப்பா தமாஷாயிருக்கும்னு நினைச்சேன். இங்கே ஒண்ணுமே இல்லையே. வெறும் காடு. சந்திக்கிற ஜனங்களும் வெறும் காட்டு ஜனங்கள்'' என்றாள் கனகா.

''கனகா! போதும் போதும். இதற்கு மேல் பேச்சை வளர்க்கவேண்டாம். உனக்குப் பிடிக்காவிட்டால் நீ வீட்டிலேயே இரு. வெளியே என்னுடன் சுற்றித்தான் ஆகவேண்டுமென்று யாரும் உன்னை வற்புறுத்தவில்லை'' என்றான் வீரமணி.

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இம் மாதிரி அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்:



★ கேசம் குறைதல்

★ மெழுக்கென்ற, துவண்ட ரோமம்



**இளமையில் வழுக்கை**
இந் நிலை ஏற்படுவதைப் பெரும்பாலும் தடுத்திருக்க முடியும்.

கேசம் குறைதல், ரோம உதிர்வு ஆகியவை உங்களைப் பாதித்தால் இன்றே ப்யூர் சில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்குங்கள். உங்கள் ரோமத்திற்கு ஆக்கம் தரும் பதினெட்டு அமினோ-அமிலங்கள் யாவும் அடர்வான நிலையிலே செறிந்துள்ளது ப்யூர் சில்விக்ரின். உச்சந் தலையிலே அழுத்தித் தேய்த்தால் ப்யூர் சில்விக்ரின் மயிர்க்கால்களை ஊடுருவி, நீடித்த நலனைக் கேசத்திற்கு மீட்டுக் கொடுக்கத் தேவைப்படும் இயற்கையான ஊட்டத்தை வழங்குகிறது.

ஆல் அபௌட் ஹேர் (ALL ABOUT HAIR) என்ற, படங்கள் கொண்ட இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினீர்களானால் இவ் விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1, சில்விக்ரின் அட்வைசரி சர்விஸ், தபால் பை 727, பம்பாய் 1.




**ப்யூர் சில்விக்ரின்**
கேசக் கோளாறுகளின் சிகிச்சைக்கான தோரு தீவிர குணம் செறிந்த தயாரிப்பு. ஒரு மாத சிகிச்சைக்குப் போதுமானது.

**சில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்**
நாள் முழுதும் உங்கள் கேசத்தைப் பாங்காகப் படிய வைத்திருக்கும். கேசக்கோளாறுகள் ஏற்படாமல் தடுக்கப் போதுமான ப்யூர் சில்விக்ரின் அடங்கியது



# Silvikrin

சில்விக்ரின் —கேச ஆரோக்கியத்திற்கான வழி

SP/1/P/2/66

''வீடு மட்டும் என்ன வாழுதாம்? திரும்பத் திரும்ப அந்த ஆற்றையும், மலையையும் தவிர வேறு ஒன்றும் பார்க்க முடியாது. இன்னும் எத்தனை நாளைக் குத்தான் இங்கேயே கட்டிப் போட்டாற்போல் உட்கார்ந்திருக்கணுமோ?'' என்று அலுத்துக் கொண்டாள் கனகா.

கோயிலுக்குப் போய் வர உத்தேசமாக இவ்வளவு நேரமாகும் என்ற குறிப்புடன் அதற்குத் தகுந்தாற்போல் டிராலியை இறக்கி வைக்கும்படி காளியண்ணனிடம் கூறியிருந்தான் குமரன். எல்லாரும் டிராலிப் பாதையை அடைந்த போது டிராலி அங்கே தயாராகக் காத்திருந்தது.

டிராலியில் உட்காருவதற்கு எதிரெதிராக இரண்டு பலகை பெஞ்சுகள் தான் அமைக்கப்பட்டிருந்தன. ஒரு பெஞ்சியில் வள்ளியையும் மங்காவையும் உட்காரச் சொல்லி எதிர்ப் பெஞ்சில் கனகா, வீரமணி இருவருடன் தானும் உட்கார்ந்து கொண்டான் குமரன். பின்பு விஞ்ச் ஷெட்டுக்கு அறிவிப்பதற்காகத் தண்டவாளத்தோடு நெடுகிலும் போடப்பட்டிருந்த தந்திக் கம்பியை இரும்பு நுனியுள்ள கழியால் தட்டினான்.

''இது எதற்காக?'' என்று கேட்டான் வீரமணி.

''கழியால் கம்பியைத் தொடும் போது இதில் ஓடிக் கொண்டிருக்கும் மின்சார இயக்கம் தடைப்படுகிறது. அதன் பலனாக ''விஞ்ச் ஷெட்''டில் மணி ஒலிக்கும். இந்த விதத்தில் நமக்கு டிராலி தேவைப்படுகிறது என்பதையோ, டிராலியில் புறப்படத் தயாராகி விட்டோம் என்பதையோ நாம் விஞ்ச் ஷெட்டில் உள்ள ஆளுக்கு உணர்த்த முடிகிறது'' என்று குமரன் விவரித்துக் கொண்டிருக்கும்போதே டிராலி மேல் நோக்கி நகர ஆரம்பித்தது.

வள்ளியின் நெஞ்சு 'திக் திக்' கென்று அடித்துக் கொண்டிருந்தது. டிராலியில் அவர்கள் மேலே போய்ச் சேர்ந்ததும் காளியண்ணன் என்ன சொல்லப் போகிறானோ.....? ''கோயிலுக்கு டிராலியிலேயே போய் வருவதற்கு இந்த ஐயாவிடமே அனுமதி கேட்க வேண்டும்'' என்று அவள் நினைத்தது போல், ''இந்த ஐயாவைக் கோயிலில் சந்திக்காமலிருந்திருந்தால் எவ்வளவோ நிம்மதியாயிருக்குமே'' என்று நினைக்க ஆரம்பித்திருந்தாள் இப்போது.

''யக்கோவ்! கீழே தள்ளிடும் போலே யிருக்கு'' என்று சிரித்துக் கொண்டே அவளைக் கட்டிக் கொண்டாள் மங்கா. மேல் பக்கத்துப் பெஞ்சில் அவர்கள் உட்கார்ந்திருந்ததால் டிராலி ஏற்றத்தில் ஏறும் போது அவர்கள் முன்னுக்கு விழுந்து விடுவார்களோ என்ற அச்சம் தோன்றியது. வள்ளி காலைக் கெட்டியாக ஊன்றிக் கொண்டு பக்கவாட்டுச் சட்டத்தைப் பலமாகப் பிடித்துக் கொண்டாள்.

டிராலி மேலே செல்லச் செல்ல மலைச் சரிவு கீழ்நோக்கிச் செல்வது போலிருந்தது. சரிவில் ஒரு பொட்டு மேகம்கூட இல்லை. கிடுகிடு பாதாளத்தை நோக்கிச் செங்குத்தாக இறங்குவது போன்றிருந்த அந்தச் சரிவு பயங்கரமான எழிலுடன் காட்சியளித்தது. மூன்றுபுறமும் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை நிமிர்ந்து நின்ற நீலமலைகள். நடுவே அந்தச் சரிவுப் பாதை மலையரசன் மார்பில் வீரத் தாவடம் அணிந்திருந்தது போல் துலங்கியது. சரிவில் அமைந்திருந்த பென்ஸ்டாக் குழாய்களும் டிராலித் தண்டவாளங்களும் மலைப் பாம்புகளும் சாரைப் பாம்புகளும் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு கீழிறங்கிச் செல்வதுபோல் வள்ளியின் கண்ணுக்குத் தோன்றின. தூரத்தில் எங்கோ வெகு தொலைவில் பவர் ஹவுஸ் ஒரு சிறிய நெருப்புப் பெட்டியைப் போல் காட்சியளித்தது. அதற்கப்பால் தனது இயல்பான படுகையில் அமைதியாக ஓடிக் கொண்டிருந்த சுருளியாறு அந்தப் பகலொளியில் மின்னல் கொடியைப் போல் பளிச்சிட்டுக் கொண்டிருந்தது.

''பள்ளத்தின் காட்சிகளையெல்லாம் நாம் பார்ப்பதற்கு எதிர்ப் பெஞ்சுதான் இன்னும் சௌகரியமாயிருக்கும் இல்லையா?'' என்று கேட்டான் வீரமணி.

''ஐயையோ! அதிலே உட்கார்ந்தால் நான் கீழே விழுந்துவிடுவேன்'' என்றாள் கனகா.

''கனகாவுக்காகத்தான் நான் இந்தப் பெஞ்சில் உட்கார்ந்து கொண்டேன். இறங்கும் போது எதிர்ப் பெஞ்சில் உட்காருவது கஷ்டமில்லை. ஏறும் போது கீழே தள்ளுவது போலத்தான் இருக்கும். பழகினவர்களுக்கே பயமாயிருக்கும்'' என்றான் குமரன்.

''இறங்கிப் போகும்போது பள்ளத்துக் காட்சியெல்லாம்தான் நன்றாய்ப் பார்த்தாயிற்றே. இன்னும் என்ன பார்க்க வேண்டியிருக்கிறது?'' என்றாள் கனகா.

டிராலி மெள்ள மெள்ள மேலேறிச் சென்று நிலைக்கு வந்து நின்றது. எல்லோரும் டிராலியை விட்டு இறங்கினர். அண்ணன் கண்களில் படாமல் எந்த வழியாகவாவது தப்பியோடிவிட முடி

யாதா என்று அலைபாய்ந்தன வள்ளியின் கண்கள்.

''அக்கா! இன்னும் இங்கேயே நின்னு என்ன பார்த்துக்கிட்டிருக்கே? அவங்கெல்லாம் மேலே போயிட்டாங்க பாரு'' என்றாள் மங்கா.

''அண்ணன் கட்டாயம் கோவிச்சுக்கத்தான் போகுது'' என்றாள் வள்ளி.

''கோவிச்சுக்கிறதுக்கு என்ன இருக்கு? மேலேயிருந்து கீழே வர்றதுக்குத்தான் உங்கண்ணன் தயவு வேணும். கீழேயிருந்து மேலே போறதுக்கு அது என்ன அண்ணுவி ?'' என்றாள் மங்கா.

'' நீ சொல்லுவே, என் மனசு கெடந்து அடிச்சுக்கிடறது எனக்கில்லே தெரியும்'' என்றாள் வள்ளி.

இருவரும் உடும்புக் கொட்டகையைச் சமீபித்தபோது கொட்டகையிலிருந்து காளியண்ணன் வெளியே வந்தான்.

''ஓகோ.... நீங்ககூடவா?'' என்றான் அவர்களை முறைத்துப் பார்த்துக் கொண்டே.

மற்ற மூவரும் அத்திமர மேட்டருகே நிழலில் நின்று கொண்டிருந்தார்கள்.

''காளி, கோயில்லே இவங்க ரெண்டு பேரையும் பார்த்தேன். எங்ககூட டிராலியிலேயே வரச் சொன்னேன்'' என்றான் குமரன் முன்வந்து.

''அதுதான் தெரியுதே !'' என்றான் காளியண்ணன்.

''நடந்து களைச்சுப் போயிட்டாங்க, பாவம். திரும்பி வரும்போது நடைமிச்சமாகட்டுமேன்னு.....''

''நீங்களே உத்தரவு போடுங்க.... நீங்களே அதை முறியுங்க.... உங்க இஷ்டத்துக்கு எது வேணும்னாலும் செய்யுங்க, எனக்கென்ன ?'' என்றான் காளியண்ணன் அலட்சியமாக.

''நான் உத்தரவு போட்டது இவங்களுக்காக இல்லே'' என்றான் குமரன் சுருக்கமாக.

வீரமணி பட்டணத்திலிருந்து தனது காரை எடுத்து வந்திருந்தான். அணைக்கரை வீட்டிலிருந்து உடும்புக் கொட்டகை வரை அவர்கள் அந்தக் காரில் தான் வந்திருந்தனர். காரில் அவர்கள் மூவரைத் தவிர வள்ளியும் மங்காவும் உட்காருவதற்குத் தாராளமாக இடம் இருந்தது.

வீரமணி கூறினான்: ''குமரன்! நாம் திரும்பிப் போகும் வழியில்தான் இவர்கள் வீடு இருக்கிறதென்றால் இவர்களை வீட்டிலேயே இறக்கி விட்டுப் போவதானாலும் போவோமே!''




''வெளியே ஸ்டூலில் உட்கார்ந்து இடுப்பெல்லாம் வலிக்கிறது சார்! ஒரு ஈஸிசேர் தரீங்களா ?''

''அதுக்கெல்லாம் அவசியமில்லீங்க. நீங்க உங்க வேலையைக் கவனியுங்க'' என்று காளியண்ணன் வெடுக்கென்று கூறி அந்த யோசனைக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டான்.

''சரி, புறப்படலாம் வீரமணி. இவர்கள் வீடு பக்கத்தில்தானே இருக்கிறது. நாம்தான் அதிக தூரம் போக வேண்டும்'' என்று கூறிக் குமரன், டிரைவர் ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டான்.

''அண்ணுவுக்கு இங்கிதமே தெரியாது. இந்தக் காட்டுப் பெண்களை எனக்குச் சரிசமமாக என் பக்கத்திலே உட்காரச் சொன்னால் என்ன அர்த்தம் ?'' என்று முணு முணுத்துக் கொண்டே கனகா காரில் அமர்ந்து கொண்டாள்.

வீரமணி குமரனின் பக்கத்தில் அமர்ந்ததும் கார் கிளம்பிச் சென்றது.

''உங்கண்ணுவாலேதான் நம்ம கார் சவாரி கெட்டுது'' என்றாள் மங்கா வள்ளியின் காதருகே சென்று.

காளியண்ணனின் காதில் அந்த வார்த்தைகள் விழுந்தன. ஆனால் அவன் கவனிக்காதவன் போல் அத்திமர மேட்டை நோக்கி நடந்து முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு உட்கார்ந்தான்.

''முரடு, முரடு!'' என்று முணு முணுத்தாள் மங்கா.

வள்ளிக்கு அழுகை வந்துவிடும் போலிருந்தது. அண்ணன் அட்டகாசமாகக் கூச்சல் போட்டுத் திட்டினாலும் அவள் பொறுத்துக் கொள்வாள். ஆனால் அவன் கோபத்தை வெளிக் காட்டாமல் முகத்தை ஒரு மாதிரி வைத்துக் கொண்டால் அவளால்

தாங்க முடியாது. அந்தக் கோபம் எப்போது எரிமலையாக வெடித்து விடுமோ என்ற நடுக்கம் அவளை ஆட்டி வைத்து விடும்.

அடிமேலடிவைத்து அண்ணன் அருகே சென்று நின்றாள் வள்ளி. ''அண்ணே, வீட்டுக்குப் போகட்டுமா?''

''என்னை ஏன் கேக்கறே ?''

'' உனக்கு ஏதாவது வேணுமா, வீட்டிலேருந்து?''

''என்னைப்பத்தி நீ கவலைப்பட வேண்டாம்.''

''நான் தப்பு செய்திருந்தால் மன்னிச்சிடு, அண்ணே!''

''மன்னிக்கக் கூடிய தப்பா இருந்தாத்தானே ?''

''உண்மையிலேயே உனக்கு எம்மேலே கோவம்தானே ?''

''இல்லே, ஒரேயடியா பாசம் பொங்குது.''

''கோவமில்லாம காது குடுத்துக் கேட்டா என் மேலே தப்பு இல்லேன்னு புரிஞ்சுக்குவே.''

''நான் ஒண்ணும் புரிஞ்சுக்க வேண்டியதில்லே. நீ எனக்கு எதுவும் சொல்ல வேண்டியதும் இல்லே. வாய் பேசாமே வீட்டைப் பார்க்க நட'' என்று உக்கிரமாகக் கூறிய காளியண்ணன் சடாரென்று எழுந்து கொட்டகையை நோக்கிச் சென்று விட்டான்.

''ஏன், கிடந்து இப்படிப் பயந்து சாகறே? வா, வீட்டுக்கு!'' என்றாள் மங்கா வள்ளியருகே வந்து.

''உனக்குத் தெரியாது, மங்கா. அண்ணனுக்கு இம்மாதிரி கோவம் வந்து நான் என்னிக்குமே பார்த்ததில்லே.''

''இன்னிக்குப் பார்த்திட்டேல்லே ? புறப்படு, சரித்தான்'' என்று அவள் கையைப் பிடித்திழுத்தாள் மங்கா.

வெள்ளிக்கிழமைதோறும் வள்ளியுடன் அவள் வீட்டுக்குச் சென்று அவளுடன் உட்கார்ந்து சாப்பிட்டு விட்டுத்தான் மங்கா வீடு திரும்புவது வழக்கம். அன்றும் அப்படியே சென்றாள். அஞ்சலையத்தை கவலையுடன் வாயிற்படியிலேயே உட்கார்ந்திருந்ததைக் கண்டதும் மங்காவுக்குச் சிரிப்பு வந்தது. ''குழந்தைங்க திரும்பி வரலேன்னு அத்தைக்கு என்ன கவலை பாரு'' என்றாள் சிரித்துக் கொண்டே.

''ஏன் நடந்தே போயிருந்தீங்களா? ரொம்ப நேரமாயிடுச்சே!'' என்றாள் அஞ்சலையத்தை.

''அதையேன் கேக்கறே அத்தே.... திரும்பி வரும்போதாவது டிராவி கிடைக்கதோ, காலு ரெண்டும் பொழைச்சதோ!'' என்று தரையில் தொப்பென்று உட்கார்ந்து இரு கால்களையும் பிடித்துக் கொண்டாள் மங்கா.

அன்று அஞ்சலையத்தை அவர்களுக்காகச் சுடுசோறும் சாம்பாரும் கீரை மசியலும் தயாராக வைத்திருந்தாள். மங்கா அவற்றை ஒரு கை பார்த்த போது வள்ளிக்கோ சாப்பாட்டிலேயே மனம் செல்லவில்லை.

சாப்பாட்டுக்கு மேல் மங்கா ஒரு தூக்கம் போட்டு விட்டுத்தான் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றாள். போகும் போது வள்ளியைக் கட்டிப் பிடித்துக் கொண்டு, ''அக்கா! இன்னமும் முகத்தை உர்ன்னு வைச்சுக்கிட்டிருந்தால் எப்படி! ம்!.... அண்ணன் அப்படியே கோவிச்சுக்கிட்டாலும் உன்னை என்ன செய்திட முடியும் ? இடக்கு, சரித்தான் சிரிச்சுக்கிட்டு இருப்பயா, என்னவோ.....'' என்று அன்புடன் அவள் தலையைக் கோதிக் கன்னங்களில் முத்தம் கொடுத்துவிட்டு அங்கிருந்து ஓடி விட்டாள்.

நிலைப்படியருகிலேயே பிரமை பிடித்தாற்போல் நின்றாள் வள்ளி.

அஞ்சலையத்தை பரிவுடன் அவள் அருகே வந்து நின்றாள். ''என்ன நடந்தது வள்ளி? வந்ததிலிருந்தே பாக்கறேன்.... நீ சரியாவே இல்லையே! சரியாச் சாப்பிடக்கூட இல்லே. எதுக்காவது காளித் தம்பி கோவப்பட்டுதா?''

''சாதாரணமாகக் கோவப்பட்டது வாய் வார்த்தையோட போயிடும். இந்தக் கோவம் அண்ணன் மனசுக்குள்ளேயே குமுறிக்கிட்டிருக்கு. எப்போ எப்படி வெடிக்குமோ, நினைக்கவே பயமாயிருக்கு'' என்று கூறிய வள்ளி கோயிலிலிருந்து திரும்பி வரும்போது நடந்தவற்றை விவரித்துக் கூறினாள்.

''பூ.... இதுக்குத்தானா இவ்வளவு தூரம் மனசை அலட்டிக்கறே? தம்பி கோபிக்கிறதுக்கு இதிலே என்ன இருக்கு? அப்படியே அது ஏதாவது சொன்னாலும் நான் சும்மா இருந்திடுவேனா? நீ நிம்மதியா உன் வேலையைப் பாரு'' என்று வள்ளியைத் தட்டிக் கொடுத்து அனுப்பினாள் அஞ்சலை.

அன்று மாலை காளியண்ணன் வீட்டுக்கு வரவில்லை. முனியாண்டி கடையிலிருந்து ஓர் ஆள் வந்து காளியண்ணன் டூட்டி முடிந்ததும் முள்ளிமலைக்குப் புறப்பட்டுப் போவதாகவும், மறுநாள் மாலையில் டூட்டி முடிந்த பிறகுதான் அவன் வீட்டுக்குத் திரும்புவானென்றும் தகவல் கூறிச் சென்றான்.

அப்போதைக்கு ஆபத்து நீங்கிய தென்ற நிம்மதி வள்ளியின் மனத்தில் நிறைந்தது. **(தொடரும்)**





# நாஸ்திகன்

• பொன்னித் துறைவன் •

அன்று இரவு சர்மா தூங்கவில்லை. மொட்டை மாடியின் ஓர் ஓரத்தில் நின்று கொண்டு வானத்தை வெறித்து நோக்கிக் கொண்டிருந்தார். ''சாமு பிழைக்க மாட்டான்'' என்று ஜோஸியர் சொன்ன வார்த்தைகள் அவர் காதில் நாராசமாக இன்னும் ஒலித்துக் கொண்டிருந்தன. அந்த அவ வாக்குக்கு முத்திரை வைத்து, 'ததாஸ்து' சொல்வது போல் பூஜையறையில் அகல் மாத்தாக அவர் கண்ணில் பட்டு நெஞ்சைக் குமைத்த பகவத்கீதையின் வரிகள் வேறு அவர் முன் நர்த்தனமாடின. வேதத்தையெல்லாம் கரைத்துக் குடித்து, சிருஷ்டியின் ரகசியத்தையே கண்டுகொண்டு விட்டாற் போல் இத்தனை நாட்கள் இறுமாந்திருந்த அவர், இன்று நெருங்கிவரும் மகனின் மரணம் என்ற விகவ ரூபத்துக்கு முன்னால் கூனிக் குறுகி, அற்பமான ஒரு துளியாக நின்று கொண்டிருந்தார். தெரு நாயின் ஓலம், நீல வானத்தைக் கிழித்தாற்போல் உதிரும் தீப்பொறி, உத்தரத்தில் தொங்கும் பல்லியின் யதார்த்த 'வாசகம்', இவை ஒவ்வொன்றும் அவர் உடலில் தனி உதறலை ஏற்படுத்தியது. கொஞ்சம் அழுகை, கொஞ்சம் பிரார்த்தனை, கொஞ்சம் விரக்தி என்று, விவேகத்தைத் தவிர மற்ற எல்லாம் சேர்ந்த கலப்படமாக அவர் உருகிக் கொண்டிருந்தார்.

திடீரென்று அவருக்கு என்ன தோன்றிற்றோ! மளமளவென்று முகம், கைகால் களைச் சுத்தம் செய்துகொண்டு, திருநீறு அணிந்து, கிழக்கே பார்த்துத் தரையில் உட்கார்ந்து கொண்டார். மனத்துக்குள்ளேயே ருத்ர ஜபம் ஆரம்பமாயிற்று. மூடியிருந்த கண்களுக்குள் படர்ந்த இருட்டின் அடர்த்தியில் ஒரோரு சமயம் ஞான ஒளிக் கீற்றுகள் பளிச்சிட்டுக் கிளை பிரிந்து ஓடுவது போன்ற தோற்றம் ஏற்படும். அப்பொழுதெல்லாம் அவர் உடல் சிலிர்த்துக் கொள்ளும். வெள்ளி முளைத்து, புள்ளினங்கள் கூவி, இரவென்னும் இறப்பில் உலகம் தன்னைப் புதுப்பித்துக்கொண்டு எழும்போதுகூட, சர்மாவின் நிஷ்டை கலையவில்லை. கட்டெரிக்கும் எட்டு மணி வெய்யிலும் அவரைச் சுடவில்லை. நாட்டுப் பெண் அகல்யா மாடிக்கு வந்து பார்த்துவிட்டு, அவர் தபஸைக் கலைக்க விரும்பாமல் பிள்ளை பாலுவை வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, சாதத்தை எடுத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போனதும் அவருக்குத் தெரியாது.

ஞானப் பிச்சைக்காக விடாப்பிடியாக, கண்களை மூடிய நிலையிலேயே கல்லுளி மங்கத்தனம் செய்துகொண்டிருந்தார் சர்மா.

ஃ ஃ ஃ

ஜோஸியர் அப்படி அப்பட்டமாகத் தமக்குத் தோன்றியதைச் சொன்னதற்குக் காரணமே சர்மாதான். சர்மாவின் பிள்ளைதான் சாமு என்று தெரிந்திருந்தால் அதைச் சொல்லியிருப்பாரோ மாட்டாரோ! ''தெரிந்தவர் ஜாதகம்'' என்று சர்மா பொய் சொன்னதன்பேரில் ஜோஸியர் உண்மையைக் கூறும்படி ஆகிவிட்டது. அதைக் கேட்ட சர்மா அதிர்ந்து, வெலவெலத்துப் போகையில், ஜோஸியர் திடுக்கிட்டுக் கவலையுடன் என்னவென்று வினவ, விசும்பலுக்கிடையில் சாமு தம் மகன்தான் என்று சர்மா ஒப்புக் கொள்ள, பிறகு ஜோஸியர் ஜாதகத்தை மீண்டும் மேலும் கீழும் பார்த்து, தலையைச் சொறிந்து கொண்டே, 'சனியின் வக்ர பார்வையை நான் கவனிக்கவேயில்லையே! உம் பிள்ளைக்கு ஒரு குறையும் வராது. கவலைப்படாதேயும்' என்று தேற்றியும், சர்மா உடல் குலுங்க அழுது கொண்டே வெளியேறினார். நாளை மறுதினம் ஆபரேஷனை வைத்துக் கொள்வதா வேண்டாமா என்ற பெரும் போராட்டம் அவர் நெஞ்சைக் குடைய, அவர் வீட்டை யடைந்தவுடன் நேராகப் பூஜையறைக்குச் சென்று நெடுஞ்



சாண்கிடையாக விழுந்து, விசித்து விசித்து அழுகையில் எதிரே தரையில் பிரிந்து கிடந்த கீதையின் வரிகள் பளிச் சென்று கண்ணில் பட்டன:

''காண்டீபா! நீ போரிட மறுத்து இங்கிருந்து ஓடி விட்டால்கூட, கௌரவ அழிவு என்றும் முன்னமேயே நிர்ண யிக்கப்பட்ட ஒன்று. நான் அவர்களை முன்பே கொன்று விட்டேன். இறந்துவிட்ட அவர்களைத்தான் நீ மீண்டும் கொல்லப் போகிறாய்!''

வாயில் உத்தரீயத்தைப் புதைத்துக் கொண்டு சத்தம் வராமல் குலுங்கித் தீர்த்தார் சர்மா. கண்ணீரின் மங்கலில் எதிரே யிருந்த கிருஷ்ண விக்கிரகம் ஊஞ்சலாடுவது போன்ற பிரமை ஏற்பட்டது.

''கிருஷ்ணா! ஒரேயடியா என் தலையிலே கல்லைத் தூக்கிப் போட்டுட்டியேடா! சாமு செத்துப் போயிடுவானா? என் புள்ளை பொழைக்க மாட்டானா? உன் வாக்குக்கு வேற என்னடா அர்த்தம்; கிருஷ்ணா? ஜோஸியன் சொல்லை விட உன் வாக்கு ரொம்பக் கொடூரமாய் இருக்கேடா! என்னாலே தாங்க முடியாதுடா, தாங்கவே முடியாதுடாப்பா!''

மானசீகமாகக் குலுங்கிக் கொண்டிருந்தார் சர்மா. உடல் குலுங்கலும், கண்ணீரும் தவிர, சத்தம் வெளிவரவே யில்லை. வாய்விட்டுக் கதறி ரகளை பண்ணக் கூடிய வயதா?

**வெள்ளி விழா சிறுகதைப் போட்டியில்**
**மூன்றாவது பரிசு பெற்ற கதை - 6**



# வளைவுகளிலே அதிக நிலையுறுதி

பயர்ஸ்டோன் டீலக்ஸ் சாம்பியன் கார் டயரிலுள்ள பிரபல "ராப்-அரவுண்ட்" டிரெட் அமைப்பின் அகலம் 18% அதிகம்...சாலைமீது அதிக ரப்பரைப் பதியச் செய்வதனுல், எவ்வகை சீதோஷ்ண நிலையிலும் எத்தகைய சாலையிலும் சரி, குறிப்பாக திடீர் வளைவுகளிலும் முனைத் திருப்பங்களிலும் அபாரமான நிலையுறுதியை நிரூபிக்கிறது; உல்லாசமாக ஓட்டும் சுகத்தை உங்களுக்கு அளிக்கிறது.

ஸிப்பர்–டஃப் ரப்பர்— அதிகச் செலவின்றி ஆயிரக் கணக்கான மைல்கள் அதிகமாக ஓடவும், அதிக ரீடிரெட் பெறவும் உதவுகிறது.

நான்–ஸ்கிட் ஆங்கிள் ஸேஃப்டி டிரெட்— வழுக்கும் ஆபத்தையே தவிர்க்கிறது.

ராப்–அரவுண்ட் டிரெட் அமைப்பு-- சாலைமீது உன்னதமான நிலையுறுதி தருகிறது.

**Firestone** பயர்ஸ்டோன் டீலக்ஸ் சாம்பியன் டயர்

**ராப்-அரவுண்ட்** டிரெட் பொருந்தியது



பிடிப்புத் திறனுக்குப் பின்பலமான வலிமையை அளிக்கிறது.

Manasche-Z 25 TM

உள்ளுக்குள்ளேயே மறுகி மறுகி வெம்ப வேண்டிய வயசு, ஸ்தானம், பொறுப்பு எல்லாம்.

பூஜையறை ஸ்தம்பித்து, சலனமற்ற சோக அவலத்தில் மூழ்கி யிருந்தது.

ஃ ஃ ஃ

**மி**கா நைவேத்தியத்தை எடுத்துக் கொண்டு அகல்யா வரும் அரவம் கேட்டதும், கண்களைத் துடைத்து மூடி, தியானம் செய்வது போல் பாவனை செய்தார் சர்மா. அவருடைய பொய்ம்மை நிலை அவரையே குத்திக் குடைந்தது.

'எவ்வளவு நாட்கள் இதை மூடி மறைக்க முடியும்? எனக்குத் தெரிந்தது அவளுக்குத் தெரிய வேண்டியது நியாயமில்லையா? என் பிள்ளையைப் பற்றி முன்னுடியே தெரிஞ்சுக்கறதுக்கு என் மனசு அடிச்சுண்ட மாதிரி, கணவனைப் பற்றித் தெரிந்து கொள்ள அவள் இதயம் துடிக்காதா? நாளை மறுதினம் சாமுவுக்கு ஆபரேஷன் ஆகி, பிறகு அவனுக்குப் பிரக்ஞை திரும்பியோ, அல்லது திரும்பாமலோ — யார் கண்டார்கள், எப்படியோ மூச்சுத் திணறி அவன் சாகும் போது, 'அம்மா குழந்தே! உன் புருஷன் செத்துப் போயிடுவான்னு எனக்கு அன்னிக்கே தெரியும்மா'ன்னு பீத்திக்கறதுதான் முறையா? அழுகையோ, கூக்குரலோ, யாராயிருந்தாலும் அனுபவிக்கிறதை அனுபவிச்சுத்தானே ஆகணும்? இன்னிக்கு இல்லேன்னு நாளைக்கு. எனக்குப் புத்திர சோகம். அவளுக்கு....? இருவருக்கும்!'

சர்மா ஒரு கணம் யோசித்தார். 'ஜோஸியம் ஏன் பிசகாக இருக்கக் கூடாது? திறந்து கிடந்து கண்களில் பட்ட பகவத்கீதையின் வரிகள் எனக்குத்தான் என்று நான் ஏன் கற்பனை செய்து கொள்ள வேண்டும்?

இந்த க்ஷணத்தில் உயிருடன் இருக்கும் என் பிள்ளை இறந்து விட்டாற்போல் நினைத்துக்கொண்டு எதற்காக அழ வேண்டும்? ஆபரேஷன் வெற்றிகரமாக முடிந்து, என் பிள்ளை பிழைத்து நீண்ட காலம் ஜீவித்திருக்கும் பாக்கியம் ஏற்பட்டால்...? நாளை மறுநாள் நடக்கப் போகிற விஷயம் எனக்கு இன்றே தெரிந்து விட்டதாக நினைத்துக் கொண்டு என்னை நானே வருத்திக்கொள்வானேன்? நாளையை ஊடுருவிப் பார்க்க முடியும் என்ற நம்பிக்கையே — வெறியே — ஓர் அசம்பாவம்தானே? இந்த ஊடுருவலில் நம்பிக்கை வைத்தால் ஆண்டவனிடத்திலிருக்கும் நம்பிக்கை தளர்ந்து விட்டது என்றுதானே அர்த்தம்? நம்மிடமிருந்து மூடி மறைத்து வைக்கப்பட்டிருக்கும் ரகசியத்தையெல்லாம் தெரிந்து கொண்டுவிட்டதாக நினைத்துக் கொண்டு, கொசுவுக்குப் பிளவை புறப்பட்டாற்போல் தாங்க முடியாமல் தவிப்பானேன்?'

இப்படிக் கேள்விக்கு மேல் கேள்வியாகப் போட்டுக் கொண்டு தம்மைத் தாமே உலுப்பிக்கொண்டிருந்தார் சர்மா. நைவேத்தியத்தை வைத்துவிட்டு நின்றுகொண்டிருக்கும் அகல்யாவின் ஞாபகம் வந்தது.

அவசரம் அவசரமாக இரண்டு அட்சதையையும், புஷ்பத்தையும் அள்ளிப் போட்டுவிட்டு ஒரு நமஸ்காரத்தையும், பண்ணிவிட்டு எழுந்தார். இலேசாக ஜுரம் அடிப்பது போன்ற ஒரு வேகமும் நடுக்கமும் உடலைக் கவ்வின. நடுங்கும் கால்களைப் பூமியில் பாவ வைப்பதே பெரும் பாடாயிருந்தது. முகமெல்லாம் முத்து முத்தாக வியர்த்து, கைகால்கள் துவண்டன. நாட்டுப்பெண்ணை நேருக்கு நேர் பார்க்கவே அச்சமாக இருந்தது.

சர்மா அறையிலிருந்து வெளியேற வழி விட்டு ஒதுங்கிக் கொண்டாள் மருமகள். அவளைக் கடக்கும்போது ஒரு விநாடி அப்படியே நின்றார் சர்மா. பிறகு கவரைப்

பார்த்தபடியே, ''ஆஸ்பத்திரிக்கு யாரும்மா போயிருந்தா?'' என்று கேட்டார்.

''நான்தான்...''

''ஏதாவது சொன்னாளா?''

''முடிஞ்சா உங்களை வரச் சொன்னார்.''

''இதோ கிளம்பிட்டேனம்மா'' என்று அவசரமாகக் கிளம்பிய சர்மா ஒரு கணம் நிதானித்து விட்டு மீண்டும் பூஜை அலமாரிக்குத் திரும்பினார். மேஜை இருந்த நிர்மால்ய புஷ்பங்களை எடுத்து நடுங்கும் கரங்களுடன் அகல்யாவிடம் கொடுத்தார். அதை அவள் வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டு, குனிந்த தலை நிமிராமல் தலையில் சூடிக்கொள்கையில், சர்மாவுக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டு சமாளிக்க முடியாமல் திணறினார். சத்தம் வராமல் உடல் குலுங்கிக் கொண்டிருந்ததைக் கண்ணுற்ற அகல்யா, கிழவர் படும் வேதனையைக் காணச் சகியாமல், ''பெரியவாளான நீங்களே இப்படி வருத்தப்பட்டா, சிறிசுகள் நாங்கள் என்ன செய்வோம்?'' என்றாள்.

சர்மா திரும்பினார். முகமெல்லாம் வீங்கி, கண்கள் குழம்பிச் சிவந்து, தாரை தாரையாகக் கண்ணீர் கொட்டிக் கொண்டிருந்தது.

''என்னாலே தாங்க முடியல்லேம்மா'' என்று கத்திவிட்டு, அப்படியே உட்கார்ந்து குழந்தை போல் கேவிக் கேவி அழ ஆரம்பித்துவிட்டார்.

''இப்போ என்ன நடந்துடுத்து? எதுக்காக இப்படி அலட்டிக் கொள்றேள்? பகவான் கிருபையினாலே எல்லாம் நல்லபடியாத்தான் நடக்கும்'' என்று அகல்யா சொல்லும் போதே அவள் குரல் தழுதழுத்து வார்த்தைகள் பிசிறிட்டு, கண்கள் குளம் கட்டின.

திடீரென்று என்ன நினைத்துக் கொண்டாளோ! ''நமஸ்காரம் பண்றேன். உங்க வாயாலே எனக்கு ஆசீர்வாதம் பண்ணுங்கோ'' என்று கணீரென்று கூறினாள்: சர்மா வாயடைத்துப் போய், தீர்க்கமாக அகல்யாவின் முகத்தைப் பார்த்தார்.

ஆடாமல், அசையாமல் அவளை ஒரு கணம் பார்த்தார். பிலுபிலுவெனக் கேசச் சுருள்கள் விளையாடும் அகலமான நெற்றியின் நடுவே வட்டத் தீப்பிழம்பாயிருந்த குங்குமப் பொட்டு அவரைச் சுட்டெரித்தது. அத் தீப்பிழம்பின் நடுவே தேரோட்டியின் கைச்சவுக்கின் சொடுக்கில் துள்ளிப் பாயும் குதிரைகளின் படபடப்பு, குளம்புகளின் உதைப்பில் எழுந்த புழுதிப் படலம், அப் படலத்தைக் கிழித்துக் கொண்டு சரம் சரமாய்ப் பாயும் அம்புகள், ''ஐயோ, ஐயோ'' என்ற மரண ஓலம், ''கண்ணா, நான் மாட்டேன், நான் இதற்கு ஒப்ப மாட்டேன்'' என்ற அர்ஜுனனின் கேவல், ''முட்டாளே, கொல்பவன் நான், கொல்லப் படுவதும் நான், நீ ஓய்ந்து விட்டால் உலகமே ஓய்ந்து விடும் என்று எண்ணுகிறாய்?'' என்ற கண்ணனின் ஞானோபதேசம் –

சர்மா சிலையாக நின்று கொண்டிருந்தார். அகல்யாவின் சிரம் தாழ்ந்தது. உடல் வளைந்து. தரையைத் தொட்டது.

''மஹாராஜியா, தீர்க்க சுமங்கலியா இரும்மா!''

உதடுகளின் அசைவில் வார்த்தைகள் பொருளற்ற காற்றாய் வெளிவந்தன. விடுவிடென்று வெளியேறினார் சர்மா. திரையின் திறந்த பக்கம் படபடவென்று அடித்துக் கொண்டது.

* * *

தாதுப் பொருள்களினாலான சர்மாவின் உடலை, விரக்தி என்ற வேகம் ஆஸ்பத்திரிக்கு அடித்துச் சென்றது.

''அப்பாவா...?''

''ஆமாண்டா சாமு!''

''வரமுடியுமோ என்னமோன்னு நெனச்சேன்.''

''குழந்தை சொன்னா. வந்துட்டேன்.''

''அகல்யாவைச் சொல்றேளா? ஹூம்... எவ்வளவு நாளைக்குக் குழந்தையா இருக்க முடியும்?''

''...........''

''அதோ, அந்தக் கட்டிலைப் பாருங்கோ. நாளைக்கு அந்தக் குழந்தைக்கும் 'ஹார்ட்' ஆபரேஷன். அதுமாட்டுக்கும் போறவா வரவாளையெல்லாம் வம்புக்கிழுத்துண்டிருக்கு. அதையே என்னாலே செய்ய முடியறதோ?''

சர்மா மேஜையிலிருந்த சாத்துக்குடியையே பார்த்துக் கொண்டிருந்தார். சாமு பேசிக் கொண்டே போனான்.

''குழந்தையா இருக்கிறது கஷ்டமில்லே. குழந்தையா ஆறதுதான் கஷ்டம். கஷ்டமென்ன, முடியாதுன்னே வெச்சுக்கலாம். அது நேத்தியைப் பத்தி, இன்னிக்கைப் பத்திக் கவலைப்படறதோ என்னவோ, நிச்சயமா நாளையைப் பத்திக் கவலைப்படறதேயில்லே. 'எல்லாம் பகவான் செயல்'ங்கற ஞானத்திலேயே அது நாளையைப் பத்தி நிச்சிந்தையா இருக்கு? அதுதானே இல்லே. பகவானைப் பத்தியே அது நினைக்கிறதில்லே. அதனாலேயே அதுக்கு ஞானம் வந்துடறதோ என்னமோ! நாமதான் நாளைப் பொழுதுக்கு பகவான் நமக்கு என்ன வச்சிருக்காரோன்னு இன்னிக்கிருக்கிற ஒவ்வொரு நிமிஷத்தையும் நாசமாயடிச்சுண்டிருக்கோம். நமக்கு பகவான் கிட்ட பக்தியா இருக்கு? பயம்னு இருக்கு!''

சாமு அடுக்கிக் கொண்டே போனான். எதை நினைத்துக் கொண்டு பேசினானோ. சர்மாவுக்கு எல்லாமே தமக்காகத்தான் கூறுவது போலிருந்தது. அவன் வார்த்தைகளின் பொருளை ஜீரணிக்க முடியாமல் தவித்தார்.

என்னால் வெல்ல முடியாததை என் மகன் வென்றுவிட்டானா? சாவுக்கு ஸ்வாகதம் கூறிக் காத்திருக்கும் யோகியாய் விட்டானா சாமு? ''அழிவதும் நான், அழிப்பதும் நான்'' என்ற

காலத்தை வென்ற நிர் மையத்துடன் ஒன்றி விட் டாளு என் பின்னே?

சாமு! என் கண்ணே! நீ இறக்கப் போவது உனக்குத் தெரிந்து விட்ட தாடா?

வெளிறியிருந்த சாமு வின் முகத்திலும் ஓர் அசாந்தியக் களை அரும்பி யிருந்தது. எதையோ வென்று விட்டாற் போன்ற பெருமிதத்தின் ரேகை படர்ந்து முகம் ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தது.




''என்னப்பா, மௌனத்தில் மூழ்கிவிட்டீர்கள்? என்னைப் பற்றிக் கவலைப்படுகிறீர்களா?'' என்றான் சாமு. அவன் குரலில் ஏளனம் கலந்திருப்பதாகத் தோன்றியது, சர்மாவுக்கு.

இருந்தாலும் விட்டுக் கொடுக்காமல். ''நமக்குக் கவலைப்படறதுக்கு என்னடா அதிகாரமிருக்கு? 'மாகேலரா விசாரமு'ங்கற தியாகப் பிரும்மத்தின் பாட்டு உனக்கு மறந்து போச்சா? நல்ல யாரையும் பகவான் கைவிட மாட்டார்...'' என்றார்.

''அப்படிச் சொல்லுங்கோ! அந்த ஒரு நம்பிக்கை, நிச்சயமா — இடமா — போலி யில்லாம இருந்ததுன்னு, நமக்கு எவ்வளிக் குமே கவலை கிடையாது. ஆனு, ஆத்துலே ஒரு கால், சேத்துலே ஒரு கால் இங்கறமாதிரி பாதி பகவான், பாதி நான் என்று நினைக்கிற போதுதான் எல்லா அவஸ்தையும் வரது... அது போகட்டும், ராத்திரி அவ வரும்போது நல்ல ரஸமா, கொத்தமல்லியைக் கிள்ளிப் போட்டுக் கொண்டு வரச் சொல்லுங்கோ...''

''ஏண்டா, நாளைக்கு ஆபரேஷன். இன்னிக்குச் சாப்பிடலாமா?''

''பரவாயில்லே. ஆபரேஷன் நாளன்னிக்குத்தான்னு டாக்டர் சொல்லிட்டார்.''

''அப்பாடி!'' என்று ஒரு புது ஜன்மத்தையே பையனுக்கு விலைக்கு வாங்கிக் கொடுத்துவிட்டாற்போல் நிம்மதியான பெருமூச்சுடன் வெளியேறினார் சர்மா.

ஃ ஃ ஃ

மறுநாள் —

மொட்டை மாடியில் மாமனாரின் நிஷ்டையைக் கலைக்காமல், பாலுவை விட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, ஆஸ்பத்திரியை அடைந்த அகல்யா கணவனுடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தாள். சரியாகப் பதினொரு மணிக்கு அவன் ஊட்டிய சாதத்தை அணு அணுவாக ரசித்துச் சாப்பிட்டுவிட்டு, தூங்கப் போகும் குழந்தையைப் போல் அவள் மடியில் தலை வைத்து, அந்த ஸ்பர்ச சுகத்திலேயே மீளாத் துயிலில் ஆழ்ந்தான் சாமு.

ஒத்திப் போடாமல் இருந்திருந்தால் ஆபரேஷன் இந்த நேரத்துக்குத்தான் முடிந்திருக்க வேண்டும்.

மூர்ச்சித்து விழுந்த அகல்யாவையும், சாமுவையும் ஒரே காரில் வீட்டுக்கு எடுத்து வந்தார்கள். உறவினர்களெல்லாம் குழுமி, வீடு இரண்டு பட்டது.

மொட்டை மாடியில் நிஷ்டையிலிருந்த சர்மாவுக்கு விழிப்பு வந்தது. விஷயத்தையும் ஊகித்துக் கொண்டார். ''இது என்னைப் பாதிக்காது'' என்ற அலட்சியம் அவர் விழி வீச்சில் தெறித்தது. நிதானம் இழக்காமல் கம்பீரத்துடன் அவர் பாதம் ஒவ்வொரு படியாக மிதித்து அவரைக் கூடத்துக்குக் கொண்டு வந்தது. அப்பொழுதுதான் நினைவு திரும்பிய அகல்யா இவரைக் கண்டவுடன் 'ஓ'வென்று அலறிக் காலில் விழுந்தபோதும் அவர் கம்பீரமாகவே நின்று ''கவலைப்பட்டு அழறதுக்கு நமக்கு அதிகாரமில்லேம்மா''- என்று சொல்லிவிட்டு மேலே நடந்தார். ஒவ்வொருவர் ஒவ்வொன்றைச் சொல்லித் துக்கம் விசாரித்தும் இவர் எதையுமே லட்சியம் செய்யாமல் நகர்ந்துகொண்டே யிருந்தார். ஓரத்தில் நின்று கொண்டிருந்த ஜோசியரின் மீது இவர் பார்வை விழுந்ததும் சாரைப் பாம்பு போல் அவரை நோக்கி விரைந்து அவர் தோள்களைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கி, ''ஓய் ஜோஸியரே! நீர் சொன்னது பலிச்சுடுத்துன்னு நெனச்சுண்டு கர்வம் பிடிக்க அலையாதேயும். ஜெயிச்சது யார் தெரியுமா? நான்தான்யா, இந்த சர்மாதான். என் கண்ணைப் பாரும். அதிலே ஒரு சொட்டுக் கண்ணீர் இருக்கா? ஜெயிச்சது யார் ஓய்? செத்துப் போயிருக்கிறது என் புள்ளையாண்டான்யா... நான் அழறேனு பார்த்தீரா? அதுக்கு ஞானம் வேணும்யா, ஜோஸியரே, அதுக்கு ஞானம் வேணும்னேன்! புரிஞ்சுதா? முக்காலத்தையும் உணர்ந்த நீர் உம்பிள்ளை இறந்து போனால் இப்படி இருப்பீரா? நீர் வெறும் ஜோஸியன், நான் ஞானி — தெரிஞ்சுக்கும்!'' என்று கூறி அவர் தோள்களை இன்னொரு முறை உலுக்கி விட்டு, நேரே சாமுவைக் கிடத்தியிருந்த இடத்துக்குப் போகும் போது—

பேரன் பாலு இவர் கையில் ஒரு காகிதத் துண்டைத் திணித்தான். சர்மா ஓர் அலட்சியப் புன்னகையுடன் அதைப் படித்தார்

''அப்பா!

அகல்யா எப்படியோ சமாளித்துக்கொண்டு விடுவாள். ஏனெனில் அவள் பெண். சாதாரண சஞ்சலங்களுக்கே அழுகை என்ற உயர்ந்த —கைகண்ட—மருந்து அவர்களிடம் எப்பொழுதும் உண்டு. தாங்க முடியாத கவலையென்றால் அவர்களுக்குச் சீக்கிரம் பைத்தியம் பிடித்துவிடும். பிறகு கவலை ஏது? எல்லாவற்றையும் விட, போலிக் கலப்பில்லாத, உறுதியான தெய்வ நம்பிக்கையும் அவர்களுக்கு உண்டு.

நாம் — ஆண்களைச் சொல்கிறேன் அப்படியில்லை. நீங்கள் ஜோஸியரைத் தேடி ஓடியதையும், கீதையைக் கட்டிக்கொண்டு அலறியதையும், உங்கள் துக்கத்தைப் பிறருக்குக் காட்டிக் கொள்ளாமல் நீங்கள் தவித்த தவிப்பையும் பற்றி அகல்யா என்னிடம் சொன்னாள். நீங்கள் அவசரப்பட்டுவிட்டீர்கள். கொஞ்சம் பொறுத்திருக்கலாம்... உங்கள் செய்கை எனக்குப் பழைய சம்பவமொன்றை ஞாபகமூட்டியது. நான் பி.ஏ. பரீட்சை எழுதிய பிறகு ரிஸல்ட்டை முன் கூட்டியே தெரிந்து கொள்ள வேண்டுமென்று மெனக்கெட்டு, பெயில் என்று தெரிந்து ஒரு வாரம் முன்னதாகவே அழ ஆரம்பித்து, பிறகு ரிஸல்ட் முறைப்படி வெளியானவுடன் இன்னொரு முறை அழுத கதையைத்தான் சொல்கிறேன்!

இப்பொழுது — மரணத்தின் வாஞ்சை மிகுந்த நெருக்கத்தின் கதகதப்பில் — எனக்குச் சில விஷயங்கள் மிகத் தெளிவாகத் தெரிகின்றன. அதை நீங்கள் ஞானம் என்று சொன்னாலும் சரி, வேறு எப்படிச் சொன்னாலும் சரி.

கல்ப காலம் வாழ்ந்தாலும், மரணம் கண நேரத்தில் நேர்ந்துவிடும் ஒரு சிறிய விபத்துத்தான். மேலும், உலகத்தில் நாம் காணும் விஷயங்கள் யாவும் திரும்பத் திரும்பப் பழைய விஷயங்களேயாகும். ஒரே விஷயத்தை ஒரு நாள் பார்த்தாலென்ன? நூறு ஆண்டுகள் பார்த்தாலென்ன? பிரபஞ்சத்தின் அமைப்பில் ஒவ்வொன்றுக்கும் ஒரு பக்குவ காலம் என்று இருக்கிறது. காலந் தாழ்த்தோ, காலத்துக்கு முன்னோ நடப்பது எதுவுமே கிடையாது...

நீங்கள் என் மரணத்தை எப்படித் தாங்கப் போகிறீர்களோ, தெரியாது. உங்கள் வார்த்தைகளையே சொல்லுகிறேன்: ''அதைப் பற்றிக் கவலைப்பட எனக்கு அதிகாரம் ஏது?'' இருந்தாலும் உங்களுக்கு ரகசியமாக ஒரு யுக்தி சொல்கிறேன்.

நிம்மதி வேண்டுமென்றால், நன்றாக வாய் விட்டுக் கதறி அழுங்கள்! நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களுக்கு — ஆயுள் முழுவதும் ஞானத்தைத் தேடி அலைந்து ஒரு புத்தகம் விடாமல் படித்துவிட்டு, கடைசியாக எதையுமே சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் தடுமாறும் நம்மைப் போன்ற மனிதர்களுக்கு—அழ வேண்டிய சமயத்தில் ஊரறிய அழுதும், சிரிக்க வேண்டிய சமயத்தில் வாய் விட்டுச் சிரித்துக் கொண்டும் இருந்தால்தான் மனம் கலகலவென்றிருக்கும். அது ஒன்றுதான் நம் கைக்கு எட்டக்கூடிய ஞானம்! நாம் மனிதர்களாகவே வாழ்வோம், மனிதர்களாகவே மடிவோம். மனிதனும் இல்லாமல், தேவனுமில்லாமல், அந்த இரண்டுங்கெட்டான் நிலை இருக்கிறதே, அது மிக மிகக் கொடிது.

உங்களுக்கு ஒன்றுமே புரியவில்லையென்றால் அகல்யாவைப் பார்த்துக் கொள்ளுங்கள்.

நமஸ்காரம்.

தங்களன்புள்ள, சாரு.''

சர்மா கடிதத்தைக் கண்களில் ஒற்றியபடியே 'ஓ'வென்று கதறிக் கதறி, குமுறிக் குமுறி, வாய்விட்டு வீடே அதிரும்படி குலுங்கிக் குலுங்கி அழுது தீர்த்தார். ''நான் நாஸ்திகன். தெய்வத்தை நம்பாத நாஸ்திகன். எதிலுமே பிடிப்பில்லாத பாவி. இந்தப் பாவி வயிற்றிலா பிறந்தது இந்தத் தெய்வம்?'' என்று சொல்லிச் சொல்லித் தரை விழும் விழுந்து புரண்டார்.

# Zam-Buk

## ஜாம்-பக்
## சிறந்த
## மூலிகைக்
## களிம்பு




ஜாம்-பக், பாரதத்தின் உன்னதமான
மூலிகைக் களிம்பு; விரைவாகவும் பத்திரமாகவும்
பூரணமாக குணப்படுத்த உதவுகிறது.

Bensons/1-FZ-12 TAM












# ஆந்திர வரையும் தமிழ் வாரியாரும்

ஆகஸ்ட் மாதம் 20ந் தேதி திருமுருக வாரியார் அவர்கள் ஸ்ரீ சைலம் வருகிறார்கள் என்று கேள்விப்பட்டோம். தமிழகத்தில் எத்தனையோ கோபுரங்களை, தனது கோலத் தமிழ்க் குரலால் நிதி திரட்டிப் பழுது பார்த்த சிவனருட் செல்வர் ஆந்திரத்தி லுள்ள ஸ்ரீ சைலநாதர் கோயிலையும் புனருத்தாரணம் செய்ய இந்தப் பயணமோ என்று தோன்றிற்று.

அதற்குப்பிறகுதான் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களது அறுபதாவது ஆண்டு நிறைவு ஸ்ரீசைலத்தில் அடக்கமாக நடை பெறுகிறது என்ற செய்தி வந்தது. நாள் தோறும் சமயப் பணி புரிந்து வரும் அவரது வளமை மிக்க தமிழ்க் குரலைக் கேட்ட பல்லாயிரக்கணக்கான ரஸிகர்களுக்கு அவர் என்றும் இளமை மிக்கவர்தான்! எனவே, அவர்கள் 'அறுபதா?' என்று ஆச்சரியப்பட்டால் வியப்பில்லை.

கங்கையின் பெருக்கும், காவிரியின் வளமும், தாமிரபரணியின் தண்மையும் போன்ற வாக்குவன்மை படைத்த அருள் மொழி வாரியார் அவர்களது மணிவிழா கிருஷ்ணா நதிக்கருகே நடைபெறுவதும் பொருத்தம்தானே! குணமென்னும் குன் றேறிய இவரது சஷ்டியப்த பூர்த்தியை நடத்த உயர்ந்த ஸ்ரீசைலபர்வதத்தைத் தேர்ந் தெடுத்தார்கள். ஸ்ரீ வாரியாரது தந்தையார் பெயர் ஸ்ரீ மல்லையாதாஸ் (ஸ்ரீ சைல மல்லிகார்ஜுன ஸ்வாமியின் மற்றொரு பெயர்) தாயார் ஆந்திரத்தில் பிறந்து வளர்ந்தவர்கள். எனவே, சிவநெறிச் செல்வ ரது மணிவிழா பன்னிரண்டு ஜோதிர்லிங்கத் தலங்களுள் ஒன்றான மல்லிகேசுவரர் சந்நிதியில் ஆகஸ்ட் 21ந் தேதி ஜாம் ஜாம் என்று நடைபெற்றது.

வாரியார் என்னவோ ஒருவருக்கும் அதிக மாகச் சொல்லாமல் காதோடு காதாக ஒருசில நண்பர் உறவினர்களுடன் மட்டும் சென்று வரலாம் என்றுதான் சென்னையிலிருந்து புறப் பட்டார். ஆனால் அவர் ஸ்ரீசைலம் அடைந்த சில மணி நேரங்களுக்குள் ஹைதராபாத், மலாயா, சிங்கப்பூர், மதுரை, திருநெல்வேலி என்று பலப் பல இடங்களிலிருந்து நண்பர் களும் அபிமானிகளும், பக்தர்களும், கார்களி லும், பஸ்களிலும், ரயிலிலும் குடும்பத்தோடு வந்திருந்தனர். பல ஊர்களிலிருந்து திருப் புகழ் பஜனை சபைப் பிரதிநிதிகள் விஜயம் செய்தனர்.

ஸ்ரீசைலநாதர் — பிரமராம்பிகை சந்நிதி யில் ஞாயிறு காலை சிவ ஆகம விதிப்படி ஹோமம் வளர்த்து, மறையவன் நாமம் புகழ்ந்து, பூசிக்கப் பெற்ற பூரண கும்பத்தி லிருந்த புனித நீரை அவரது தாயாரும் சுற்றத்தாரும் வாரியார் சுவாமிகளுக்கும், அவரது துணைவி அமிர்தலட்சுமியாருக்கும் அபிஷேகம் செய்த காட்சி நிறைவு மிக்கது.





அதன்பின்னர் நாயன்மார்கள் மூவராலும் போற்றிப் பாடப்பெற்ற ஸ்ரீ மல்லிகார்ஜுன ஸ்வாமி லிங்கத்துக்குத் தானே அபிஷேகம் செய்து மகிழ்ந்தார் திரு வாரியார்.

அன்று மாலை இறைவன் சந்நிதியில் ஸ்ரீ வாரியார் அவர்களது சுருக்கமான சொற்பொழிவில் இறைவனிடம் பக்தி செலுத்த வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தினார்கள்.

''கடவுள் ஒன்று உண்டு என்று நினைக்க வேண்டும். ஒருவர் செய்த உபகாரத்தை மறக்கக் கூடாது. மக்கள் இனம் ஒன்றுபட்டிருக்க வேண்டும்'' என்பதே அறுபதாவது ஆண்டுப் பூர்த்திவிழாவின்போது ஸ்ரீவாரியார் பக்தர்களுக்கு விடுத்த அன்புச் செய்தி.

ஸ்ரீ கல்கி அவர்கள் கூறியது போல், ''ஸ்ரீ வாரியார் தனிமனிதரல்ல; ஒரு ஸ்தாபனம்'' என்ற பொன்மொழியைத்தான் இப்பொழுதும் நினைவுபடுத்தத் தோன்றுகிறது.

# படித்துப் பாருங்கள்

## புதிய அகராதி

ஆங்கிலத்தில் எழுத நினைக்கும்போது ஓர் எண்ணத்துக்குச் சரியாக உருவம் கொடுக்க முயன்று முடியாமல் போகத் திண்டாடும் சந்தர்ப்பங்கள் நம்மில் பலருக்கு ஏற்படுவது இயல்பு. தமிழ் வார்த்தை நமக்குத் தெரிந்திருக்கும். அதற்கேற்ற சரியான, பொருத்தமான ஆங்கிலச் சொல் அகப்படாது சிரமப்படுவோம். அத்தருணங்களில் **லிப்கோவின் தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி** பெரிதும் பயன்படும். ஏற்கனவே பலவித அகராதிகளின் பல பதிப்புக்களை வெளியிட்ட அநுபவங்கள் இந்த அகராதி தயாரிக்கையில் அவர்களுக்குத் துணை நின்றுள்ளன என்பதை நன்கு காண முடிகிறது. சில கடுமையான பழந்தமிழ்ச் சொற்களுக்கு இலக்கிய ரீதியில் மேற்கோள்கள் காட்டியிருப்பதும், ஐம்பத்தொரு தலைப்புகளின் கீழ் கொடுக்கப்பட்டுள்ள பலவித பிற்சேர்க்கைகளும் இந்த அகராதியின் பயனைப் பன்மடங்காக உயர்த்துகின்றன.

கிடைக்குமிடம்: தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை—17; விலை: ரூ. 6.40.

## பல்லவி ரத்ன மாலா

இசைத் துறையில் தற்போது பல நூல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. அவை பெரும்பாலும் கீர்த்தனங்களையும், அவை போன்ற பிறவற்றையுமே தாங்கி வெளிவருகின்றன. இசையரங்குகளில் முக்கியமாக விளங்கும் பல்லவிகளை முழுதும் தாங்கிய நூல் இதுவரை வெளிவந்ததில்லை. அத்துறையில் ஒரு நூல் வெளிவர வேண்டியது மிக மிக அவசியம் என்று கருதி அந்தப் பணியைச் செய்துள்ள ஸ்ரீ தின்னியம் வேங்கடராம ஐயர் அவர்களைப் பாராட்டுகிறோம்.

ஸ்ரீ ஐயர் அவர்கள் மிருதங்க வாத்தியத்தில் ஐம்பது ஆண்டுகளாக உழைத்து வருபவர். பல பெரிய பிரபல முன்தலைமுறை வித்வான்களுக்குப் பக்கவாத்தியம் வாசித்து அனுபவம் பெற்றவர். எனவே, லயத் துறையில் தேர்ந்த அவர் லயத்தை முக்கியமாகக் கொண்ட இந்த ரத்னமாலாவை இயற்றி உலகுக்கு அளிப்பது பொருத்தமே.

இந்த நூலில் 35 தாளங்களுக்குரிய பல்லவிகளும், வேறு சில அபூர்வ நடைப் பல்லவிகளுமாக மொத்தம் 41 பல்லவிகள் உள்ளன. அந்தப் பல்லவிகளுக்கேற்ற மிருதங்கச் சொற்களும், ஒவ்வொரு பல்லவிக்கும் அடியில் தத்தகார முறையில் காட்டப் பெற்றுள்ளன. இதில் காணப்படும் பல்லவிகள் வழிகாட்டிகளே. இவற்றை அடிப்படையாகக் கொண்டு கற்பனையால் விஸ்தரித்துக் கொள்ளலாம் என்பது ஆசிரியரின் கருத்து.

சுலபமாகத் தெரிந்து கொள்ளும் வண்ணமும், முயற்சியுடன் சாதனை செய்தால் கைகூடி வரும்படியும் இந்த நூலிலுள்ள பல்லவிகள் உள்ளன. சரபநந்தனப் பல்லவி-மறைந்து போகாத நிலையைத் தற்போது இந்த நூல் அளித்திருக்கிறது.

சங்கீத வித்வான்கள் தமது அறிவைப் பெருக்கிக் கொள்ளவும் சங்கீத மாணவர்கள் பல இசை நுட்பங்களை அறிந்து பயிற்சி பெறவும் தமிழ் நாடு சங்கீத நாடக சங்கத்தின் உதவியுடன் வெளிவந்துள்ள இந்த நூல் துணை புரியுமென்பதில் ஐயமில்லை.

கிடைக்குமிடம்: தின்னியம் வேங்கடராமய்யர், 27, முத்துக்காளத்தி செட்டித் தெரு, சென்னை - 5. விலை: ரூ. 6.00.

## மோகன அமுதம்

நூலாசிரியை ஸ்ரீமதி ஹா. இ. வாலம் திருச்சி தேசபக்தரும், வழக்கறிஞருமான என். ஹாலாஸ்யமய்யர் அவர்களின் புதல்வி; சின்னஞ் சிறு பிராயத்திலேயே தமிழ், சம்ஸ்கிருதம் இரு மொழிகளிலும் தேர்ச்சி பெற்று வீட்டில் இருந்தபடியே பிரத்தியேகமாகப் படித்து, பி. ஏ. பட்டதாரியானார். ஹிந்தி மொழியிலும் தேர்ச்சி பெற்றார். இவ்விதம் புலமை பெற்ற ஸ்ரீமதி வாலம் பரம பாகவத சிரோமணியான லீலாசுகரின் கிருஷ்ண கர்ணாமிருதத்தைத் தமிழ்ச் செய்யுளாக்கி, அத்துடன் கண்ணன் மீது தாம் இயற்றியுள்ள கவிதைகளையும் சேர்த்து ''மோகன அமுதம்'' என்னும் இந்நூலை வெளியிட்டிருக்கிறார்.

ஸ்ரீமதி வாலம் அவர்களின் இனிய தமிழ்ப் பாடலுக்கு ஓர் உதாரணம் பார்ப்போம்:

''மோகன முறுவல் பூக்க
முகத்தினில் கருணை பூக்க
ஆகத்தி லணிந்த மாலை
அங்கையில் சங்கு பூக்க
வேகத்து விசையினாலே
வேணுவில் கானம் பூக்க
யோகத்து விதியே ஆக்கம்
நீங்கியே ஓடிவாராய்''

கிடைக்குமிடம்: ஸ்ரீமதி ஹா. இ. வாலம், 11, கொலாபா சேம்பர்ஸ், கொலாபா, பம்பாய்—5; விலை ரூ. 4.00.



## கேளாத சிறு தராத விடை

கேள்வி: ஆகாயத்தைவிட உயர்ந்தது எது ?
பதில்: அமெரிக்காவிடமிருந்து எதிர்பார்ப்பது !
கேள்வி: புல்கட்டுப் போல் வளர்வது எது ?
பதில்: லஞ்சம்.
கேள்வி: பிறந்தும் பிறவாதது எது ?
பதில்: தேர்தல் பிரகடனத்தின் காரிய அமுல்.
கேள்வி: வேகமாகப் பரவுவது எது ?
பதில்: நடிகை ராணியின் நவீன ஒய்யாரம்.
கேள்வி: கண்டுபிடிக்க முடியாதது எது ?
பதில்: நட்சத்திரங்களின் பிறந்த தேதி.
கேள்வி: வீட்டோடு இருப்பவனுக்குத் தோழன் யார் ?
பதில்: அடுத்த வீட்டு நாய் - இரவல் வாங்கிய டிரான்ஸிஸ்டர்.
கேள்வி: அமிர்தம் என்பது என்ன ?
பதில்: எங்கள் காலேஜில் இடமிருக்கிறது என்ற சொல் !
கேள்வி: தன்னந் தனியாகச் சஞ்சரிப்பவன் யார் ?
பதில்: நடிகையின் கணவன்.
கேள்வி: நட்புக்கழகு......?
பதில்: ஹோட்டல் பில்லை வசூலில் தாமே தீர்க்க வருவது.

ஆதாரம் : தர்மபுத்திரனின் கேள்விகள் — யயாதி

## கேசரி - சர்க்கரை + உப்பு = ?

நேருஜி ஒரு சமயம் தமிழகத்துக்கு விஜயம் செய்தபொழுது ஒரு விருந்து நடைபெற்றது. அதில் அவருக்கு 'உப்புமா' பரிமாறப் பட்டது. அதைக் கண்டு நேருஜி வியப்பாக ''என்ன இது?'' என்றார். அருகிலிருந்த திரு பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் ''உப்புமா'' என்றார். இது நேரு அவர்களுக்கு விளங்கவில்லை. உடனே திரு பாஸ்கரத் தொண்டைமான் ''கேசரி — சர்க்கரை + உப்பு = உப்புமா'' என்று ஆங்கிலத்தில் விளக்கினார்!

- ஓமலூர் மு. சண்முகம்.



## யார் சாமர்த்தியசாலி ?

இரவு எட்டு மணி இருக்கும். சீனு 'பர்மா பஜார்' பக்கம் நடந்து கொண்டிருந்தான். ''பனியன் வேணுங்களா?!'' என்று ஒரு குரல் கேட்டது. சீனு தலை நிமிர்ந்து பார்த்தான். அட்டைப்பெட்டியும் கையுமாக ஒருவன் நின்று கொண்டிருந்தான். 'என்னப்பா விலை?' சட்டைக்குள்ளே மானத்துக்கு அஞ்சி ஒளிந்து கொண்டிருந்த கிழிசல் பனியனை ஓரக் கண்ணால் பார்த்த வண்ணம் கேட்டான் சீனு. ''எல்லாம் விற்றுவிட்டது, ஸார்! ஒரு பெட்டிதான் பாக்கி யிருக்கு. அரை டஜன் ஸார்! அசல் பர்மா சரக்கு. வேணும்னு எடுத்துக்கிட்டுப் பத்து ரூபாய் கொடுங்க'' என்றான் பனியன்வாலா.

அட்டைப் பெட்டியைத் திறந்து மேலோட்டமாக எண்ணிப் பார்த்தான் சீனு. ஏழு இருந்தது! ஆறு இருப்பதாக அல்லவோ சொன்னான். 'அட ஏமாளி! இப்படியா வியாபாரம் செய்வது? உருப்பட்ட மாதிரிதான்!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். சீனு யோசிப்பதைக் கண்டு, ''என்ன ஸார், அரை டஜன் பனியனுக்குப் பத்து ரூபாய் கொடுக்கக் கஷ்டப் படறீங்களே; பெரிய கடைகளுக்குள்ளே போய்க் கேட்டால் ஒவ்வொன்றும் மூன்று ரூபாய் கேட்பாங்களே! சரி, போனால் போவுது, ஒன்பது ரூபாயாவது கொடுங்கள்'' என்றான். மறு நிமிடம் பணமும் பனியன் பெட்டியும் கைமாறின.

மறுநாள் காலை பனியன்களில் ஒன்றைப் பிரித்துப் பார்த்ததும் திகைத்தான் சீனு. பழைய சரக்கு. ஒரு தடவை தோய்த்தால் நூல் விட்டு விடும். பர்மா சரக்கு என்று பனியன்வாலா ஏமாற்றி விட்டது தெரிந்தது. சீனுவின் மூளை வேலை செய்தது. அடுத்த தெருவில் வசிக்கும் நண்பன் ராமநாதனிடம் பனியன் பெட்டியையும் ஒரு கடிதத்தையும் தன் மகனிடம் கொடுத்தனுப்பினான். கடிதத்தில் கீழ்க்கண்டவாறு எழுதியனுப்பினான்: ''ராமநாதனுக்கு! பனியன் வாங்க வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தாயே: இத்துடன் அனுப்பப்பட்டுள்ள பெட்டியில் அரை டஜன் இருக்கிறது. விலை பன்னிரண்டு ரூபாய் தான் -- சீனு''

போன வேகத்தில் ராமநாதனின் பதிலைக் கொண்டு வந்தான் சீனுவின் மகன்: ''சீனுவுக்கு! நேற்றுத்தான் நானும் அரை டஜன் பனியன் வாங்கினேன். ஆகவே இத்துடன் பெட்டியைத் திருப்பி யனுப்பி யிருக்கிறேன். ராமநாதன் அனுப்பியபெட்டியைத் திறந்து பார்த்தான் சீனு. ஏழுக்குப் பதிலாக ஆறு பனியன்கள் தான் இருந்தன! — 'மயார்'

## ஆனால்



''ஒரு மனிதனை முதலில் புகழ்ந்து பேசிவிட்டு, பின்னர் 'ஆனால்' என்று கூறத் தொடங்கினால், அந்தப் புகழ்ச்சியைப் போல் இழிவானதும், வெறுக்கத் தக்கதும் வேறில்லை.'' — பீச்சர்.

''ஆனால்'' என்ற வெறுக்கத் தக்க சொல் வந்து விட்டால் முன்னால் சொன்னதெல்லாம் வீணாகி விடும்; இல்லை என்று மறுப்பதோ, அவமானப் படுத்துவதோ மேலாகும்.'' - டேனியல்.

''ஆனால்'' என்ற வார்த்தை இரக்கத்தின் துடிப்புக்களை நிறுத்திவிடும்; அன்பு ததும்பும் சிந்தனைகளை அடைத்துவிடும்; சகோதரப்பான்மையுடன்செய்யும்வேலைகளை அடியோடு நசுக்கிவிடும். - புல்வர்.

தகவல் : எம். எஸ். ஆர்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

### சிந்தனைக்கு

'' அதிகாரமும் உரிமையும்,  
வெப்பமும் குளிரையும்  
போன்றவை;  
இரண்டும் அளவாகக்  
கலந்திருந்தால்  
அனைத்தும்  
தழைத்தோங்குகின்றன.  
இரண்டில்  
ஒன்றுமட்டும்  
தனித்திருக்கும்போது  
அவை அழிக்கும் தன்மையானவை.''

ஜே. எஃப். சாவில். - தகவல்: ஏ. கே. கந்தசாமி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



## திமிங்கில மேக்-அப்!

நவநாகரிக நாரீமணிகள் மேக்-அப் செய்து கொள்ளாமல் வெளியே கிளம்புவதில்லை. இந்த மேக் அப் சாதனங்களைத் தயாரிக்கத் திமிங்கிலங்கள் பயன்படுகின்றனவாம்!

சோவியத் யூனியனில் திமிங்கிலங்கள் இன்னும் பலவிதமாகவும் பயன்படுத்தப்படுகின்றன. அங்கு கடையில் பூச்சிக்கொல்லி மருந்தை வாங்கும்பொழுது, அது வெள்ளைத் திமிங்கிலக் கொழுப்பிலிருந்து செய்யப்பட்டதென்பதை யாரும் ஊகிக்க மாட்டார்கள்.

நோஞ்சானாக இருக்கும் குழந்தைக்கு டாக்டர்கள் விசேட மாத்திரைகளைச் சிபாரிசு செய்கின்றனர்; இவை வெள்ளைத் திமிங்கிலத்தின் மண்டை ஓட்டிலிருந்து தயாரிக்கப் படுகின்றன. ஒருவரது உடலில் முக்கால் பாகம் வெந்துவிட்டால், அவர் மீது விசேட கிருமிநாசினி கொழுப்புத் தடவப்படுகிறது. இந்தக் கொழுப்பு திமிங்கிலத்திலிருந்து எடுக்கப்படுகிறது.

ஸ்டீயரின், ஜெலாடின் என்ற கொழுப்புக்களை உற்பத்தி செய்யவும், பூட்பாலிஷ், ஃபேஸ்கிரீம், மேக் அப் சாயங்கள்; இன்சுலின், ஏ.பி. வைட்டமின்கள், டென்னிஸ் மட்டைக் கயிறுகள், பித்தான்கள், சினிமா பிலிம்கள், விசிறிகள் ஆகியவற்றைத் தயாரிக்கவும் திமிங்கிலங்கள் பயன்படுகின்றன. -ஏ.பி.என்.

## பெற்றோருக்கு ஒரு வார்த்தை

குழந்தைகள் எதைச் செய்யக்கூடாது என்பதை மட்டும் வற்புறுத்துவதுடன் நின்றுவிடக் கூடாது. எதைச் செய்யலாம் என்பதையும் வற்புறுத்தியாக வேண்டும். குழந்தை ஏதாவது காரியங்கள் செய்து கொண்டுதான் இருக்கும். சுவாசிக்கும் காற்று போல, சுறுசுறுப்பான செயல்களும் குழந்தைக்கு அவசியமாகும். தக்க வேலைகளில் குழந்தை ஈடுபடுவதற்கு வசதி செய்து கொடுத்தாக வேண்டும். - சோவியத் நாடு.



சக்திக்கும், வலிமைக்கும்!
Bournvita
சத்துப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுலபமாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்.




பால்
கோகோ
மால்ட்
சர்க்கரை
காட்பரீஸ் போர்ன்-விடா

# 20. அன்பு வலையில் வீழ்ந்த வேடர்

"அன்பே சிவமா யமர்ந்திருப் பாரே" என்பது திருமந்திரம். அன்பே சிவம். ஆதலின் சிவபரம்பொருளை அன்பினாலேயே அடைய முடியும். இறைவர் அன்பு வலையில் அகப்படுவார். அவர் அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை; அன்பெனும் குடில் புகும் அரசு; அன்பெனும் கரத்தமர் அமுது; அன்பெனுங் குடத்துள் அடங்கிடும் கடல். ஆகவே, அன்பு நெறி ஒன்றே நம்மை இறைவன்பால் எளிதில் சேர்க்கும். இறைவனை அடையச் செய்யப்படும் தவம், தானம், கருமம், ஜபம் சமாதி, ஞானம் முதலியவை அன்பு வழிக்குப் பிறகே. "ஆரேனும் அன்பு செயின் அங்கே தலைப்படுங் காண் ஆரேனுங் காணா அரன்" என்பது திருக்களிற்றுப்படியார் திருவாக்கு.

இத்தகைய சிறந்த அன்பில் எவரும் தமக்குச் சமானமின்றித் திகழ்ந்தவர் கண்ணப்ப நாயனார். அன்பு நெறியில் தலைசிறந்து நின்றவரும், செழுமலர்க் குருந்தின் கீழ் அன்புக் கடலைப் பருகியவரும், அன்புடன் அழுதழுது என்புருகி மணிவாசகம் புகன்றவரும் ஆகிய மாணிக்கவாசக சுவாமிகள், கண்ணப்ப நாயனாரைப் பற்றிக் கூறும் திறம் கூர்ந்து நோக்கத் தக்கது.

**கண்ணப்ப னொப்பதோர் அன்பின்மை**
**கண்டபின்**
**என்னப்பன் என்னொப்பில் என்னையு**
**மாட் கொண்டருளி**
**வண்ணப் பணித்தென்னை வாவென்ற**
**வான்கருணைச்**
**சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூ**
**தாய் கோத்தும்பி**

பத்தி என்பதும் அன்பு என்பதும் ஒரு பொருளையே குறிக்கும் சொற்கள்.

**ஆனபய பத்திவழி பாடுபெறுமுத்தியது**
**வாகநிகழ் பத்தசன வாரக்காரனும்**

என்ற அருணகிரிப் பெருந்தகையின் திருவாக்கின் ஆழத்தையும், அருமையையும் நன்று அநுபவிக்க வேண்டும்.

அன்பின் திருவுருவமாக விளங்கிய கண்ணப்பர் முற்பிறப்பில் அர்ச்சுனன் என்பதை முதலில் அறிந்து கொள்ள வேண்டும். அர்ச்சுனன் பெரிய சிவனடியார். சிவத்தல யாத்திரை புரிந்து, சிவபெருமானைக் குறித்து மாதவம் புரிந்தவர் அவர். பாரதப் போரின் பதின்மூன்றாவது நாளில் அபிமன்யு மாண்டதால் அருச்சுனன் வருந்தினார்.



திருமுருக கிருபானந்தவாரியார்

அபிமன்யுவைக் கொன்ற சயத்திரதனைக் கொல்வதாகச் சபதம் செய்து, கண்ணபிரானுடன் கைலாயம் போகத் துணிந்தார் அருச்சுனன். அவ்வாறு செல்லும் போது, "சிவபூசை செய்யாமல் உணவு கொள்ள மாட்டேன்" என்று கூறியது இதற்குத் தக்க சான்றாகும்.

அர்ச்சுனன் சிவபெருமானை நோக்கிப் பெருந் தவம் புரிந்து பாசுபதமும் திருவருளும் பெற்றார். அர்ச்சுனனுக்கும் சிவபெருமானுக்கும் ஒரு பன்றியின் காரணமாகப் போர் மூண்டது. வேடர் வடிவில் வந்த பரமன் திருவுருவங் காட்டியருளி, "யாது வரம் வேண்டும்?" என்று வினவினார். அர்ச்சுனன் பாசுபதக் கணையை வேண்டியே தவம் புரிந்தாராயினும், இறைவரை நேரில் கண்டதும் போருக்குரிய கணையை வேண்டவில்லை. இடையறாத அன்பைத் தருமாறு வேண்டினார்.

''தனஞ்செயனே! நீ முன்னர் விரும்பிய பாசுபதத்தை இப்போது பெறுவாய். இப்போது விரும்பிய அன்பினையும் அதனுலாய முத்தியையும் மறுபிறப்பிலே தருவோம். வேடன் என்று குலங் குறித்து இன்று நம்மை இகழ்ந்தபடியால் நீ வேடனுகப் பிறப்பாய். பன்றி காரணமாக இன்று போர் நடந்தது. அன்று பன்றி காரணமாக நீ வந்து காளத்தியில் என்னைக் கண்டு அருள் பெறுவாய்'' என்று நல் வரம் நல்கி அருள் புரிந்தார் என்று விரித்துரைக்கிறது காளத்திப் புராணம். காளத்திப் புராணமேயன்றி நக்கீர தேவரும் பதினோராவது திருமுறையில் கூறுகின்றனர்.

**வாமான்றேர் வல்ல வயப்போர்**
**விசயனைப்போல்**
**தாமாருலகில் தவமுடையார் —**
**தாமார்க்கும்**
**காண்டற்கரி யராய்க் காளத்தி**
**யாள்வாரைத்**
**தீண்டத்தாம் பெற்றமையாற் சென்று.**

ஃ ஃ ஃ

**ஏட்டி, விசையன் விசையளப்பன்**
**வேடுருவ மாகி**
**அசைய வுடல் திரியா நின்று —**
**விசையினுற்**
**பேசுபதப் பான பிழைபொறுத்து**
**மற்றவர்க்குப்**
**பாசுபத மீந்த பதம்போற்றி —**
**நேசத்தால்**
**வாயினீர் கொண்டு மகுடத் துமிழ்ந்**
**திறைச்சி**
**ஆயர்சிர்ப் போனகமா அங்கமைத்துத்**
**தூயசிர்க்**
**கண்ணிடந்த கண்ணப்பர் தம்மை**
**மிகக் காதலித்து**
**விண்ணுலக மீந்த விறல் போற்றி —**
**மண்ணின் மேல்**
**காளத்தி போற்றி கயிலைமலை**
**போற்றி**

திருக்காளத்தி தென் கயிலாயமாகும். அதனுல் நக்கீர தேவர் கைலைபாதி— காளத்திபாதி யந்தாதி பாடியருளினர். ஆதலின் கைலையிலே தவம் செய்த அர்ச்சுனன் கண்ணப்பராக இச்சூழலில் அவதரித்தார். கண்ணப்பர் முற்பிறப்பில் அர்ச்சுனன் என்பதைச் சேக்கிழார் பெருமான் குறிப்பினுல் உணர்த்துகின்ருர். ''முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்ருன்'' என்று திருநாவுக்கரசுநாயனுர் புராணத்தில் வருகிறது.

கண்ணப்பர் காலம் மிக மிக முற்பட்டது. அவருடைய அன்பும் செயலும் அவ்வண்ணமே எல்லா அடியார்களினும் முற்பட்டன. திருஞானசம்பந்த சுவாமிகளும், நக்கீரரும், கல்லாடதேவ நாயனுரும் கண்ணப்பரைப் போற்றி வழிபட்டவர் எனின் அவர் பெருமையை யாரே அளக்கவல்லார்? கண்ணப்பரது பெருமையைக் காளத்தியப்பரே அறிவார்.

ஆதிசங்கராச்சாரியாரும் கண்ணப்பரை மிக மிக அழகாகப் போற்றிப் புகழ்கின்ருர்:

**மார்க்காவர்த்தித பாதுகா பசுபதேரங்—**
**கஸ்ய கூர்சாயதே**
**கண்டூஷாம்பு நிஷேசனப் புரரிபோர்**
**திவ்யா பிஷேகாயதே**
**கிஞ்சித் பக்ஷித மாம்ஸ சேஷ கபளம்**
**நவ்யோப ஹாராயதே**
**பக்தி: கிம் நகரோத்யஹோ வனசரோ**
**பக்தாவதம்ஸாயதே**

வழிகளில் நடந்து தேய்ந்த பழஞ் செருப்பு ஈசனுடைய புருவங்களின் நடுவிடம் போலாகின்றது; புரமெரித்த புண்ணியராகிய அவருக்குக் கொப்பளித்து உமிழ்ந்த நீரினுல் நனைத்தலாவது கங்கைநீர் அபிஷேகம்போல் ஆகின்றது; சிறிது கடித்து உண்ட மாமிசத்தின் மிகுதியான கவளமானது புதிதான நிவேதனம் போலாகின்றது; வேடன் உயர்ந்த பக்தனுகின்ருன். ஆதலால், பக்தியானது எதைத்தான் செய்யாது?'' என்பது ஆதிசங்கரரது சுலோகப் பொருள்.

காலத்தால் முற்பட்ட கண்ணப்ப நாயனுர் அவதரித்த நாடு போத்தப்பி நாடு. புலவர்களும் புகழ்ந்து போற்றுவதற்குரிய நல்ல வளம் செறிந்த அந்நாட்டின் தலைநகர் உடுப்பூர். முத்துக்களைக் கொழிக்கும் அருவிகளுடன்கூடிய நீண்ட மலைகளுக்கு இடையில் உள்ள அவ்வூரைச் சுற்றி யானைத் தந்தங்களை வரிசையாக நட்டு வேலி அமைத்திருக்கிருர்கள். ஆங்கு வேடுவர்கள் வாழ்கின்றனர். அவர்களுடைய வீடுகளுக்குமுன் நாய்களைக் கட்டி வைத்துள்ள விளாமரங்களில் வார் வலைகள் தொங்கும். பன்றி, கரடி புலி, கடமை முதலிய இனங்களின் பார்வை விலங்குகள் கட்டி வைக்கப்பட்டிருக்கும். பார்வை விலங்கு என்ருல் பிற மிருகங்களைப் பிடிக்க உதவும் விலங்கு என்று பொருள். பாறையில் மலை நெல் உலரும். புலிக்குட்டிகளோடும், யானைக் கன்றுகளோடும்

# ஸ்ரீ விசாலம் சிட் பண்டு லிமிடெட்

(நிறுவியது 1947)




பதிவு செய்யப்பட்ட அலுவலகம் :
திருநெல்வேலி - 6

மத்திய அலுவலகம் :
61 - B, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை - 17
போன் : 42916

**சுருக்கப்பட்ட வருடாந்திர நிதி நிலைமை**
(தணிக்கை செய்யப்பட்ட பாலன்ஸ் ஷீட்டில் இருந்து எடுக்கப்பட்டது)
31 - 3 - 1966

| | | | |
|---|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் | ... | ரூ. | 5,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனமும், ரிசர்வும் | | ரூ. | 1,20,123 |
| நடைமுதல் நிதி | ... | ரூ. | 1,63,00,000 |
| மொத்த ஆஸ்திகள் | ... | ரூ. | 85 லட்சங்கள் |

| 31-3-65 | ஆஸ்திகள் | 31-3-66 |
|---|---|---|
| ரூ. | | ரூ. |
| 4,956 | கையிருப்பில் உள்ள ரொக்கமும் ஸ்டாம்புகளும் | 3,524 |
| 5,17,985 | ஷெடியூல்டு பாங்குகளிலும் தபால் அலுவலகங்களிலும் உள்ள ரொக்கம் | 8,73,589 |
| 6,228 | கவர்ன்மெண்டு செக்யூரட்டி களிலும் ஷேர்களிலும் உள்ள முதலீடு | 15,413 |
| 1,46,879 | இதர ஆஸ்திகள் | 1,87,142 |
| 42,66,528 | சீட்டுதாரர்கள் மற்றும் கடன் முன் பணங்கள் | 73,92,935 |
| 49,42,576 | | 84,72,603 |

| 31-3-65 | பொறுப்புகள் | 31-3-66 |
|---|---|---|
| ரூ. | | ரூ. |
| 44,60,120 | சீட்டு மீற இனங்கள் வரவு | 77,03,928 |
| 3,20,421 | டெபாசிட்டுகளும் கொடுபட வேண்டியவைகளும் | 5,86,914 |
| 1,17,600 | மூலதனம் செலுத்தப் பட்டதும் ரிசர்வும் | 1,20,123 |
| 44,435 | இதர பொறுப்புகள் | 61,638 |
| 49,42,576 | | 84,72,603 |

சீட்டுகளுக்கும் பிக்ஸட் டெபாசிட்டுகளுக்கும் நம்பகமான ஸ்தாபனம்

தென்னிந்தியா முழுவதும் 19 கிளை அலுவலகங்கள்

## பிக்ஸட் டெபாசிட்டுகளுக்கு $9\frac{1}{2}\%$ வரை வட்டி வழங்கப்படுகிறது

தணிக்கை செய்யப்பட்ட பாலன்ஸ் ஷீட்டுகள் சேர விரும்புகிறவர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்

K. A. ராம், B.A., B.L., — மத்திய அலுவலக மானேஜர்
A. R. ராமசாமி — ஜெனரல் மானேஜர்
K.M.K. முத்தையா செட்டியார் — மானேஜிங் டைரக்டர்

Paramount





வேட்டுவச் சிறுவர்கள் விளையாடுவார்கள். வழிபறித் துண்ணும் வேடர்கள் அயல் இடங்களில் கவர்ந்து வந்த பசுக் கூட்டங்களும், மதம் பொழியும் யானைக்கூட்டங்களும் அங்குவாழும். இருண்டு திரண்ட உடம்புடைய வேடர்கள் கொடுந்தொழிலே புரிபவர்கள்; அச்சமும் அருளும் அவர்கள்பால் அணுவளவும் இல்லாமற்போயின. அவர்கள் தோலுடை தரித்திருப்பார்கள்; ஊனை வேக வைத்துத் தேனுடன் உண்பார்கள். அவ்வேடர் கூட்டங்களில், ''அடி'', ''உதை'', ''குத்து'', ''கொல்'' என்ற சொற்களே நிறைந்திருக்கும். உடுக்கை, பம்பை, சிறுபறை முதலிய வாத்தியங்கள் ஒலிக்கும்; அருவிகளின் ஓசை ஒருபுறம் முழங்கும்.

இத்தகைய வேடர்களுக்குத் தலைவன் நாகன்; கண்ணப்பரைப் புதல்வராகப் பெறுவதற்குப் பண்டைப் பிறப்பில் தவம் செய்தவன் அவன். ஆயினும், பிறப்பின் தன்மையால் குற்றமே குணமாகக் கொண்டவன்; கொடுமையே புரிபவன்; விற்றொழிலில் வலிமை மிக்கவன்; ஆண் சிங்கம் போன்றவன். அவனுடைய மனைவியின் பெயர் தத்தை. மறவர்களது பழங்குடியில் பிறந்த அவள் பெண் சிங்கம் போன்றவள்; புலிப் பல்லின் தாலி பூண்டவள்.

நாகனும் தத்தையும் வேடர் குலத் தலைமை பூண்டு சிறப்புடன் வாழ்ந்தனர். அவர்கள் மகப்பேறின்றி நெடுங்காலம் வருந்தினர். ''இனி இவர்கட்குப் பின்னைப்பேறு கிடைக்காது'' என்று பலரும் கூறினர். அதனால் மிகவும் வருந்தினான் நாகன். மலைக்கு நாயகராகிய முருகவேள் திருக்கோயிலிற் சென்று சுற்றம் பரிசனம் சூழ வழிபட்டான். சேவலும் மயிலும் அங்கேகொண்டு போய் விட்டான்; தோரணங்கள் பூமாலைத் தொங்கல்கள் நாட்டினான்; குரவைக் கூத்து ஆடினான்; வெறியாடி விழா புரிந்தான். மயில்மேல் வரும் அயில்வேல் அண்ணலின் திருவருளால் தத்தை கருவுற்றாள். அதனை அறிந்த கானவர் களித்தனர். ஐயிரண்டு திங்கள் சென்றதும், உவர்க் கடலில் திங்கள் உதித்தது போல், வானவர் போற்ற புத்திரனைப் பெற்றாள் தத்தை. கானவர் முத்து மழை பொழிந்தனர். வானவர் மலர் மழை பொழிந்தனர். தேவதுந்துபி முழங்கியது. வேடர் பல்வகை ஒலிகளை முழக்கி மகிழ்ந்தனர்.

தங்கள் தலைவனுக்கு அருமை மகன் பிறந்தது குறித்துப் பெருவிழா செய்தனர் வேடர்கள். கருவரை கானமேகத்தை ஏந்தியது போல் நாகன் தன் புதல்வனை எடுத்து மகிழ்ந்தான். அண்ணலை அவன் ஏந்தியபோது திண்மையாக இருந்தபடியால் திண்ணன் என்று பெயரிட்டான். கரிய ஒளி வீசும் அழகிய குழந்தையாகிய புண்ணியப் பொருக்குக் கண்ணிணுக்கு அணியாகப் பலகறை, யானைக் கொம்பு, புலிப் பல் முதலியவைகளால் செய்த அணிகலன்களை அணிந்து அழகு செய்தனர். குழந்தையைப் பல



விதமாக ஒப்பனை புரிந்து வளர்த்தான் நாகன். சந்ததியின்றி வருந்திய அவன் தனக்கு மகன் பிறந்ததைக் குறித்துப் பருவந்தோறும் மலையில் வாழும் தெய்வங்கட்குப் பூசையிட்டு மகிழ்ந்தான்.

திண்ணனாருடைய சிறிய தலைமயிரைப் பின்னி முடிந்து, புலியின் நகத்தினைச் சுட்டியாக அணிந்தனர்; முள்ளம் பன்றியின் முள்ளை அரிந்து இடையிடையே கோத்த புலிப் பல் மாலை தரித்தனர். திண்ணனார் தளர் நடையிட்டு வளர்ந்து வருவராயினர். தாய் தந்தையர் மகிழ மழலை மொழி பேசி விளையாடுவார்; பார்வைப் புலியின் வாயை முழையென்று கையை விடுவார். அதுகண்டு நாகன் தழையை எடுத்து அடிப்பான் போல் ஓங்க, திண்ணனார் கண்ணீர் மல்கி அழுவார். தந்தை எடுத்து அணைத்து ஆறுதல் கூறுவான். உடுக்கை போல் செய்த கட்டையை உருட்டுவார் திண்ணனார். நாய்களைப் பிடித்து ஆடுவார்; பெண் பிள்ளைகள் கட்டிய மணல் வீட்டை அழிப்பார். இவ்வாறாக, பிள்ளைக் குறும்புகள் பல புரிந்து ஐந்தாண்டுகள் நிரம்பப் பெற்றார் திண்ணனார்.

ஆறுவது ஆண்டில் யானைக் கொம்புகளால் செய்த வேலியைக் கடந்து சிறுகாட்டில் சென்று முயற்குட்டி, காட்டுப் பன்றியின் குட்டி, புலிக்குட்டி, செந்நாய்க் குட்டி முதலியவைகளை மிக்க வேகத்துடன் சென்று பற்றித் தமது வாயிலில் உள்ள மரங்களில் கட்டி வளர்ப்பார். மாலைப் பொழுதில் குற முதுமகள் கடுகுப் புகையாட்டி, உணவூட்டித் தூங்க வைப்பாள். விடிந்ததும் உணவு தந்து விளையாட விடுவாள். இவ்வாறு வளர்ந்த திண்ணனார் விற்பயிற்சி செய்யும் பருவத்தை எய்தினார்.

திண்ணனாரைத் தழுவி மகிழ்ந்த நாகன், விற்பயிற்சி செய்து வைக்க ஒரு நாளை நிச்சயித்தான். திண்ணனாருக்கு விற்பயிற்சித் தொடங்கும் விழா ஏழு நாட்கள் கொண்டாடப்பட்டது. ஏழாவது நாள் உச்சிப் பொழுதில் மங்கல வாழ்த்தும், பல்லியங்களும் முழங்க ஆசிரியன் திண்ணனார் கரத்தில் வில்லைக் கொடுத்து விற்பயிற்சி தொடங்கினான். கானவர்க்கு அரிய சிங்கமாகிய கண்ணப்பர் அன்று முதல் வில் வித்தையை இனிது பயின்று தேர்வு பெற்றார். சந்திரன் பதினாறு கலைகள் நிரம்பியதுபோல் திண்ணனார் பதினாறாண்டுப் பருவம் அடைந்தார்.

வேடர் தலைவனாகிய நாகனுக்குத் தளர்ந்த மூப்பு எய்தியது; வில்லுழவின் முயற்சி மெலிவு பெற்றான். மலைச் சாரல்களில் விளையும் பயிர்களையும், ஏனைய உயிர்களையும் விலங்குகள் அழிக்கத் தொடங்கின. அதனால் வேடர்கள் மிகவும் வருந்தினர். நாகனிடம் வந்து விலங்குகளின் கொடுமை பற்றி முறையிட்டார்கள். ''நான் முதுமைப் பருவமடைந்து விட்டேன். இனி வேட்டையாட என்னால் முடியாது. ஆதலால், எனது அருமைமகனை உங்கட்குத் தலைவனாக்குவேன். நீங்கள் அவனது தலைமையின்கீழ் வாழுங்கள்'' என்று நாகன் கூறினான். அதனைக் கேட்ட வேடர்கள் சிறிது வருந்தினர். பின்னர் மகிழ்ந்து அவனை வணங்கினர். ''ஐயனே! இத்தனை காலமாக நாங்கள் உனது சிலையாட்சியின் கீழ் உண்டு தீங்கின்றி வாழ்ந்தோம். தங்கள் கட்டளைப்படி இனி இளவரசரது ஆட்சியின்கீழ் வாழ்வோம். அவரை அழைத்து வரையாட்சியை வழங்குங்கள்'' என்று அவர்கள் கூறினார்கள். வேடர்கள் கூறியதை ஏற்றுக் கொண்ட நாகன், திண்ணனாரை அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பினான்.

மகனைக் கன்னி வேட்டைக்கு அனுப்பும் பொருட்டு, காடு பலியூட்டக் கருதி, தேவராட்டியை அழைப்பித்தான் நாகன். அந்நரை மூதாட்டி மிக்க மகிழ்ச்சியுடன் வந்து, அட்சதை தந்து போற்றினாள்.

''யான் வரும் போது நல்ல சகுனங்கள் வந்தன; அதனால் உன் மகன் உன்னிலும் மேம்படுவான்'' என்று கூறி வாழ்த்திய தேவராட்டி, பூசைக்கு வேண்டுவன யாவும் குறைவின்றிப் பெற்றுச் சென்றாள்.

நீல மணிமலை வில்லேந்தி வருவது போல், திண்ணனார் வேடர்சூழ வந்து தந்தையைப் பணிந்தார். தாதை நாகன் ஆராக் காதலுடன் தழுவி, தன்னுடன் புலித்தோல் ஆசனத்தில் இருத்தினான். ''மகனே! எனக்கு மூப்பு வந்துவிட்டது. இனி என்னால் வேட்டையாட முடியாது. அதனால் வரையாட்சியை நீ மேற்கொண்டு என்னிலும் மேலாக வேட்டையாடி உனது மரபுரிமையைத் தாங்குவாய். செல்'' என்று கூறி, அரசாங்க அடையாளமாகத் தோல் உடையையும் சுரிகையையும் தந்தான்.

தந்தையைப் பணிந்து விடை பெற்றார் திண்ணனார். சுனைநீரில் மூழ்கி அன்றிரவைக் கழித்தார்.

# குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ

# ஃபாஸ்ஃபோமின்®

ஃபாஸ்ஃபோமின் பழரஸ மணம் கமழும் பச்சை நிற வைட்டமின் டானிக். இதில் வைட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் மற்றும் பலவகை கிளிஸரோ ஃபாஸ்பேட்டுகள் கலந்துள்ளது. இதுவே குடும்பத்தினர் அனைவரும் வலிவுடனும், சந்தோஷத்துடனும், ஆரோக்கியமாயும் வாழ உதவுவது. ஃபாஸ்ஃபோமின் வீட்டில் வையுங்கள். இதை அருந்தி வந்தால் களைப்பும் சோர்வும் உங்களை அணுகாது. இழந்த சக்தியை மீண்டும் பெற உதவுகிறது. பசியைத் தூண்டும். வலிவைப் பெருக்கும். நோய்களை எதிர்க்கும் சக்தியை அளிக்கும். குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ— ஃபாஸ்ஃபோமின்.




SQUIBB® TTT®

SARABHAI CHEMICALS

Shilpi SC 281 A Tam



"உங்களுக்கு இமர்று பத்தாயிரம் ரூபா அதிர்ஷ்டம் அடிக்கிறாப் போல ஒரு காரியம் பண்ணி இருக்கேன் சார்;"

"பலே! என்ன செய்தே?"

"இன்ஷ்யூர் செய்த உங்க கார் நொறுங்கி நெருப்பும் பிடிக்கட்டும்!"

---

திண்ணனார் விடியற்காலையில் நன்கு வேட்டைக் கோலம் புனைந்தார்; வில்லெடுத்துப் புறப்பட்டார். வேடர்கள் அவரைச் சூழ்ந்து சென்றனர். தேவராட்டி எதிரில் வந்து, பிரசாதம் தந்தாள். அவளுக்குச் சிறப்புச் செய்து அனுப்பி விட்டுக் கார்மேகம் மழை போன்று சென்றார் திண்ணனார். வில்லும், வாளும் ஏந்திய வேடர் கூட்டம் அவருடன் தொடர்ந்து சென்றது; வேட்டை நாய்கள் விரைந்து சென்றன; வார்வலைகளும், பார்வை விலங்குகளும் கொண்டு, வாத்தியங்களை முழங்கிய வண்ணமாய் வேடர் சூழ்ந்து சென்றனர். வாத்தியங்களின் முழக்கத்தைக் கேட்டுக் காட்டுப் பன்றிகள், மான்கள், கரடிகள், காட்டெருமைகள், யானை, புலி முதலிய விலங்குகள் வெருண்டு எழுந்து பாய்ந்தன. அவைகளை வேடர்கள் அம்புகளால் கொன்றனர். யானைக் கன்றுகளையும், கருவுற்ற விலங்குகளையும், ஏனைய விலங்குக் குட்டிகளையும் கொல்லாது தருமநெறி தவறாமல் வேட்டையாடினர்.

திண்ணனார் இவ்வாறு வேட்டையாடும் போது, ஒரு சிறந்த வலிமையுடைய பன்றி, யானைகளும் அஞ்சுமாறு இடி போன்ற குரலுடன், கண்களில் தீப்பொறி சிதறி வலைகளை அறுத்துக் கொண்டு மிக்க வேகத்துடன் ஓடியது. அதனைக் கண்ட திண்ணனார் மிக மிக வேகமாகத் தொடர்ந்து சென்றார். வன்மையுடன் மிகுந்த தொலை ஓடிய அப்பன்றி ஒரு மலைச்சாரலை அடைந்தது. மேலும், செல்ல வலியின்றி மரங்களுக்கு இடையில் நின்றது. திண்ணனார் அந்தப் பன்றியைக் கணை விட்டுக் கொல்லாமல் வீரத்துடன் எதிர்ந்து, உடைவாளை உருவிக் குத்தி உடம்பைப் பிளந்தார்.

திண்ணனாரைத் தொடர்ந்து சென்ற நாணனும் காடனும் அவரது வீரச் செயலைக் கண்டு மகிழ்ந்தனர். அவ்விருவரும் திண்ணனாரது பாதத்தில் வீழ்ந்து வணங்கினர். "ஐயனே! நெடுந்தூரம் வந்தபடியால் எங்களுக்கு மிகுந்த பசி ஏற்பட்டுள்ளது. இப்பன்றியைச் சுட்டு நீயும் சிறிது சாப்பிடு; பின்னர் நாங்களும் தின்று தண்ணீர் குடித்து, வேட்டைக் காட்டுக்கு மெல்லப் போவோம்" என்றனர். "இவ்வனத்தில் தண்ணீர் எங்கே இருக்கிறது?" என்று கேட்டார்; திண்ணனார். "இப்பெரிய தேக்கமரச் சோலையைக் கடந்து சென்றால் நீண்ட மலைக்கருகில் பொன் முகலியாறு ஓடுகின்றது" என்றான் நாணன். "இப்பன்றியை எடுத்து வாருங்கள். அங்கே போகலாம்" என்றார் வேடர் தலைவராகிய திண்ணனார். நாணனும் காடனும் பின்தொடர்ந்து வர அரைக்காத தூரம் சென்ற திண்ணனார் கண்ணுதற் பெருமான் வாழ்கின்ற காளத்திமலைச் சாரல் சோலையைக் கண்ணுற்றார்.

"நாணனே; தோன்றும் குன்றில்
நண்ணுவோம்" என்ன நாணன்
"காண நீ போதின் நல்ல
காட்சியே காணும் இந்தச்
சேணுயர் திருக்காளத்தி
மலைமிசை எழுந்து செவ்வே
கோணமில் குடுமித் தேவர்
இருப்பர்' கும் பிடலாம்" என்றான்.

"அவ்வாறே செல்லலாம்; அங்கு நல்ல காட்சியைக் காணலாம்; விண்வரை உயர்ந்துள்ள இத்திருக்காளத்தி மலையின் மீது செம்மையாகக் கோணத்தை நீக்கும் குடுமித் தேவர் இருக்கிறார்; கும்பிடலாம்" என்றான் நாணன்.

"நாணா! இம்மலையை அணுகிச் செல்லுந்தோறும் என் மேல் உள்ள பாரம் குறைகிறது; விருப்பம் மென் மேலும் பொங்கி, உள்ளமும் வேறு ஒரு விருப்பங்கொண்டதாக விரைகின்றது. தேவர் எங்கே இருக்கின்றார்? அவர் இருக்கும் இடத்தைக் காட்டுதற்குப் போவாய்" என்றார் திண்ணனார். (தொடரும்)

# வெற்றித் திருநகர்

### அத்தியாயம் இருபத்தாறு

## இரகசிய ஆயுதம்

தாமிரவருணியாற்றின் மறு கரையில் ஆயிரக்கணக்கான படை வீடுகள் எழுப்பப்பட்டிருந்தன. உதய மார்த்தாண்டனுடைய லட்சக்கணக்கான வீரர்களும் கலந்து காணப்பட்டனர். காட்டு மரங்கள் தோறும் சேர நாட்டு யானைகளும் அரபு நாட்டுக் குதிரைகளும் கட்டப்பட்டு, பிளிறலும் கனைத்தலுமாக அந்தக் கானகத்தையே அதிரச் செய்து கொண்டிருந்தன. இரவு நேரமாதலால் எங்கும் தீப்பந்தங்களைக் கொளுத்தி, அந்தக் சுற்றுப்புறத்தையே தீப்பட்ட கானகமென மாற்றியிருந்தார்கள்.

சாளுவ நரசிம்மர் உதயமார்த்தாண்டனின் படை வீட்டுக்குள் அமர்ந்து, அவனோடு போர்த் திட்டங்கள் வகுத்துக் கொண்டிருந்தார். ஒற்றர்கள் வாயிலாக அவருக்குக் கிடைத்த செய்திகளிலிருந்து, விஜயநகரத்துப் படைகள் அச்சுதராயரின் தலைமையில் தெற்கே புறப்பட்டு விட்டன என்றும், ஆனால் இன்னும் பாண்டிய நாட்டுக்கு வந்து சேரவில்லை என்றும் தெரிய வந்தது.

"விஜயநகரத்து உதவிப் படைகள் வந்து சேருவதற்குள் நாம் விசுவநாதனையும் அவனுடைய வீரர்களையும் நிர்மூலமாக்கிவிட வேண்டும்" என்றார் சாளுவர்.

"அதையும் நாம் செய்துவிடலாம். விசுவநாதனிடம் உள்ளதைப் போல் மூன்று

மடங்கு நம்மிடம் வீரர்கள் இருக்கிறார்கள். ஆனால், மறுபடியும் நாம் உடனடியாக விஜய நகரத்துப் படைகளோடு போரிட வேண்டியிருக்குமே?'' என்றான் உதயமார்த்தாண்டன்.

''விசுவநாதனை முறியடித்த பிறகு, என்றாவது ஒரு நாள் நாம் விஜயநகரத்துப் படைகளோடு நேரடியாகப் போரிடத்தான் வேண்டும். அதையும் இப்போதே செய்து முடிப்பதற்கு நமக்கொரு வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது'' என்றார் சாளுவர்.

உதயமார்த்தாண்டனுக்கு இது ஓரளவு திகைப்பையே தந்தது. விசுவநாதன் விஜய நகரத்திலிருந்து முன்னேற்பாடாகப் படை உதவி கோரியிருப்பான் என்று அவன் நினைக்கவில்லை.

அவனுடைய தயக்கத்தைக் கண்டு நகைத்தார் சாளுவநரசிம்மர். அவனை அருகில் வைத்துக் கொண்டு, ''உங்களுடைய படை பலத்தை மட்டும் நான் நம்பியிருக்கவில்லை; வேறு சில ரகசிய ஏற்பாடுகளும் செய்து வைத்திருக்கிறேன்'' என்றார்.

''இரகசிய ஏற்பாடுகளா ?''

''ஆமாம்; விசுவநாதனும் ராமபத்திர நாயக்கரும்தான் படைகளோடு வந்து இப்போது எதிர்க்கரையில் இறங்கியிருக்கிறார்கள். அரியநாத முதலியார் படை நடத்தி வரவில்லை என்று எனக்குச் செய்தி வந்திருக்கிறது. ராமபத்திர நாயக்கர் இருக்கிறாரே, அவர் முன்பு என்னுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான ஊழியராக இருந்தவர். அவரைப் பற்றி ஓரளவு எனக்குத் தெரியும். நாடாள வேண்டுமென்றும், பொருள் சேர்க்க வேண்டுமென்றும், அதிகாரம் செலுத்த வேண்டுமென்றும் பேராசைப்படும் குணம் அவருக்கு உண்டு. அவருடைய சபல சித்தத்தில் நம்பிக்கை வைத்து நான் ஓர் ஏற்பாடு செய்திருக்கிறேன்.''

அவர் செய்துள்ள இரகசிய ஏற்பாட்டையும் அவரே கூறினார்: ''போர் தொடங்கித் தீவிரமாக நடைபெறும்போது, அவர் தம் வீரர்களோடு நம்முடைய பக்கத்துக்கு வந்து விட வேண்டும். விசுவநாதனுக்கு எதிராகத் திரும்புவதோடு, பிறகு அச்சுதராயருக்கு எதிராகவும் நம்மோடு சேர்ந்து அவர் போரிட வேண்டும். அவர் நமக்குச் செய்யும் உதவிக்குப் பதிலாக, நம் சாம்ராஜ்யத்தில் அவரை நாம் பாண்டிய நாட்டுக்குப் பிரதானியாக்கி விடுவோம்! — இதற்கு அவரிடமிருந்து மறுமொழியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.''

சூழ்ச்சியில் வல்லவரான சாளுவரின் திட்டத்தைக் கேட்டு வியப்பும் திகைப்பும் அடைந்த உதயமார்த்தாண்டன், ''ராமபத்திரநாயக்கர் இதற்கு உடன்படுவாரா?'' என்று சந்தேகத்தோடு கேட்டான்.

''நம்முடைய படைபலத்தையும் நாம் கட்டாயம் வெற்றி பெறப் போகிறோம் என்பதையும் அவருக்கு அறிவித்திருக்கிறேன். யார் வெற்றி பெறுகிறார்களோ அவர்கள் பக்கம் சாய்ந்துவிடுவதுதான் அரசியலில் புத்திசாலித்தனம். அவருடைய முடிவு அரசியல் தந்திரமுள்ள முடிவாகத்தான் இருக்கும்!''

உதயமார்த்தாண்டனுக்கு இது சுருக்கெனத் தைத்தது. லட்சுமியை அவனுக்குத் திருமணம் செய்து கொடுப்பதாக வாக்களிக்காமல், 'வெற்றி பெற்றால் மட்டுமே திருமணம் செய்து கொள்ளலாம்' என்று கட்டுப்பாடு விதித்தவரல்லவா அவர்? அந்த நினைவு அவனுக்கு வந்து விட்டது.

''அதனாலதான் வெற்றி பெறுபவர்களுக்கே தங்கள் குமாரத்தியைக் கொடுப்பதென்று முடிவு செய்திருக்கிறீர்கள் போலிருக்கிறது!'' என்றான்.

''அதில் என்ன தவறு? அது நியாயந்தானே? வெற்றி பெறுவோர் சார்பில்தானே லட்சுமி இருப்பாள்?'' என்று நகைத்துக் கொண்டே கூறினார் சாளுவர்.

லட்சுமி அப்போது அவர்களுடைய பாதுகாப்பில் இல்லை என்பது அவர்கள் இருவருக்குமே தெரியாது. சேர நாட்டுத் தலைநகரான கொல்லத்தில் அவள் இருப்பதாகவே அவர்கள் நம்பிக் கொண்டிருந்தனர். உதயமார்த்தாண்டன் தன்னுடைய வெற்றியில் முழு நம்பிக்கை வைத்திருந்தானென்றாலும், ஒரு வேளை தோல்வியுற்றாலும் லட்சுமியையே மணப்பது என்ற பிடிவாதத்தில் இருந்தான். அவள் அவனுடைய பாதுகாப்புக்கு வந்து விட்டதால், சாளுவநரசிம்மரால் கூட அவளை அங்கிருந்து அகற்ற முடியாமல் செய்துவிட வேண்டுமென்பது அவன் திட்டம். ஒருவரையொருவர் நம்பாமலே அவர்கள் விசுவநாதனுக்கு எதிராக ஒன்று சேர்ந்து நின்றார்கள்.

லட்சுமியைப் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்த அதே வேளையில் அவர்களுக்கு அவளைப் பற்றிய அந்தப் பயங்கரமான செய்தி கிடைத்தது. காவல் வீரர்களில் ஒருவன் பதற்றத்தோடும் நடுக்கத்தோடும் ஓடி வந்து உதயமார்த்தாண்டனின் கால்களில் விழுந்தான். செய்தியை வாய்விட்டுச் சொல்லக்கூட அவனால் இயலவில்லை.

''அரசே! தங்களுடைய ஓலையோடு சோழ நாட்டு வீரர்கள் வந்து, இளவரசியாரை இங்கு அழைத்து வருமாறு தாங்கள் கட்டளையிட்டதாகக் கூறினார்கள். இளவரசியாரின் தந்தையாரும் இங்கு காத்திருப்பதாகத் தெரிவித்தார்கள். அதனால்....''

''அதனால்....?'' என்று பதறிக் கொண்டு கேட்டார் சாளுவர்.

''நான் ஓலையோ ஆட்களோ அனுப்பவில்லையே !'' என்றான் உதயமார்த்தாண்டன். ''நீங்கள் அவர்களோடு இளவரசியை அனுப்பி விட்டீர்களா ?''

''இல்லை; அவர்களோடு அனுப்பவில்லை. அவர்கள் அப்படி அனுப்பும்படி கூறியிருந்தால் காவலர் தலைவர் சந்தேகப்பட்டிருப்பார். எங்களையே இங்கு வரும்படி கூறிவிட்டு, அவர்களும் எங்களோடு வந்தார்கள். இளவரசியாரை அழைத்துக் கொண்டு நாங்களே இங்கே புறப்பட்டு வந்தோம்.....''

''அப்படியானால் எங்கே லட்சுமி?'' என்று கத்தினார் சாளுவர்.

''சேர நாட்டைக் கடந்து நாங்கள் திருக்குற்றாலத்துக்கு அருகில் வரும்போது, இரவு

# இளமேனியருக்கு இணங்கிய உறவு பியர்ஸ்...















இப்போது, புதிய புள்ளிக்கோல மேலுறையோடு உமக்கே!

## மென்மை கொஞ்சும் தூய கிளிசரின் சோப்

பச்சிள மேனிக்கும் இணங்கிய மென்மையுள்ளது பியர்ஸ். வறளவிடாமல் உங்கள் சருமத்தை இளங்கொழுந்து போல் புதுமையோடு போற்றுவது பியர்ஸ் சோப்பிலுள்ள கிளிசரின். தூய்மையானது பியர்ஸ்...மாணிக்கம் போல் படிகத் தன்மை படைத்தது. உங்கள் மேனிமீது இளமை கொஞ்சிடவே : பியர்ஸ்

**தன் தூய்மையைக் கண்கூடாக உணர்த்துவது பியர்ஸ்**

*இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு*

லின்டாஸ்-PS, 158-140 TM

நேரத்தில், நூற்றுக்கணக்கான பகைவர்கள் எங்கள் மீது பாய்ந்து பலரைக் கொன்று விட்டார்கள். நம்மில் ஒருவர் கூட மிஞ்சவில்லை. ரதத்தோடு அவர்கள் இளவரசியாரையும் அவர் அன்னையாரையும் எங்கோ அழைத்துச் சென்று விட்டார்கள். செய்தி அறிவிப்பதற்காக நான் மட்டிலும் தப்பிப் பிழைத்தோடி வந்தேன்!"

"இதைச் சொல்வதற்காகவா நீ உயிரோடு வந்தாய்?" என்று கேட்டுக் கொண்டே தம்முடைய உடைவாளை இறுகப் பற்றினார் சாளுவ நரசிம்மர். ஒரே வீச்சில் அவனுடைய தலை தரையில் உருண்டது. துடித்து வீழ்ந்து தரையெங்கும் இரத்த வெள்ளம் பாய்ந்தோட உயிர் துறந்தான் அந்தக் காவலன். உதயமார்த்தாண்டனுக்கே சாளுவ நரசிம்மரின் செய்கை வெறுப்பைத் தந்ததென்றாலும், அவன் மனம் அப்போது லட்சுமியின் பிரிவை நினைத்துக் கொதிப்படைந்திருந்ததால், அவன் ஏதும் கூறவில்லை.

"மார்த்தாண்டவர்மரே! ஏதோ பயங்கரமான சூது நடந்திருக்கிறது: நாம் இருவரும் ஒரே சமயத்தில் பழி வாங்கப்பட்டு விட்டோம்!" என்று துடித்த சாளுவர், விசுவநாதனை மிகவும் இழிவாய்ப் பேசிவிட்டு, "இனியும் லட்சுமியைக் கவர்ந்து சென்ற விசுவநாதனை உங்களால் பழிவாங்க முடியவில்லையென்றால், உங்களை நானும் ஒரு துரும்புக்குச் சமமாக மதிக்க மாட்டேன்; என் குமாரத்தியும் மதிக்க மாட்டாள்!" என்றார்.

உதய மார்த்தாண்டனின் பொறுப்பில் அவர் லட்சுமியை விட்டிருந்ததால், அவன் எப்படியாவது அவளை மீட்டுத் தரவேண்டுமென்றார். அவனுடைய கவனக்குறைவான ஏற்பாடுகளுக்காக அவனை மிகவும் கடிந்து கொண்டார்.

பெரும் படைகளைத் திரட்டிக் கொண்டு வந்து போருக்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்த அவர்கள் இருவருக்குமே இந்தச் செய்தி பேரதிர்ச்சியைத் தந்தது. உதய மார்த்தாண்டன் ஒரு வழியாகச் சாளுவ நரசிம்மரின் கோபத்தைத் தணித்து, அவருடைய சிந்தனையைப் போர்த் திட்டத்துக்குத் திருப்பினான். "எல்லாம் நம்முடைய போரின் வெற்றியில் இருக்கிறது; இளவரசியாரை எப்படியும் நான் மீட்டு வருகிறேன்" என்று அவருக்கு உறுதி அளித்தான்.

மற்றோர் உறுதி மொழியும் சாளுவருக்கு அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்த இடத்திலிருந்து கிடைத்தது. ராமபத்திர நாயக்கர் அவருடைய ஓலைக்கு மறுமொழி அனுப்பியிருந்தார்.

"ஆலோசனை செய்து பார்த்ததில் தங்களுடைய யோசனையே ஏற்றதாக எனக்குத் தோன்றுகிறது. அவ்வாறே நான் என் வீரர்களிடம் கூறி, போர் நடந்து கொண்டிருக்கும் போது ஆற்றைக் கடந்து வந்து தங்கள் பக்கம் சேர்ந்து கொள்ளுகிறேன். தங்களுடைய வீரர்களிடமும் இதைத் தெரிவித்து விடுங்கள். ஆற்றைக் கடக்கும்போது, விவரம் தெரியாது அவர்கள் என் வீரர்கள் மீது பாய்ந்துவிடப் போகிறார்கள். நானும் தடுத்து வைக்கிறேன்; தாங்களும் தடுத்து வையுங்கள்."

ராமபத்திரநாயக்கரின் ஓலையைக் கண்டவுடன் அவர்கள் இருவரும் சிறிது நேரத்துக்கு லட்சுமியைக்கூட மறந்து விட்டார்கள்.

படைத் தலைவர்களிடம் இந்த இரகசியச் செய்தி வெகு வேகமாகப் பரப்பப்பட்டது.

எதிர்க்கரையில் ராமபத்திரநாயக்கரும் தம் படைவீரர்களிடம் இரகசியமாக ஒரு செய்தியைப் பரப்பிக் கொண்டிருந்தார். வாள் முனை, வேல் முனை, வீரம், தியாகம் முதலியவைகளுக்கு இடமான போர்க்களங்களில் சூழ்ச்சி என்ற வலிமையான ஆயுதமும் புகுந்து கொண்டது.

## அத்தியாயம் இருபத்தேழு

# திலகமிட்ட தேவி

திருநெல்வேலி மாளிகையில் விசுவநாதனின் வரவை எதிர்நோக்கி ஒவ்வொரு கணத்தையும் ஒரு யுகமாகக் கழித்தபடியே காத்திருந்தாள் லட்சுமி. இன்பமும் துன்பமும் பேரலைகளாக எழும்பி அவள் இதயத்தில் முட்டி மோதி ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தன. அவளால் அவற்றின் போராட்டங்களைத் தாங்கவே முடியவில்லை.

விசுவநாதனை அழைத்து வராமல் அரியநாதமுதலியார் மட்டிலும் திரும்பி வந்ததைக் கண்டு அவள் திகைத்துப் போனாள். "எங்கே இளவரசர்?" என்ற அவளுடைய கேள்விக்கு, உடனடியாக அரியநாத முதலியாரால் மறுமொழி கூற முடியவில்லை.

"தாங்கள் வந்திருக்கும் செய்தி கேட்டு அவர் மகிழ்ச்சியடைந்தார். ஆனால் போரைத் தொடங்குவதற்கான ஆயத்தங்கள் நடைபெற்று வருவதால், அவருக்குக் கணத்தை விட்டு இங்கு வருவதற்குப் பொழுதில்லை. போர் முடிந்த பிறகு முதலில் தங்களை வந்து காணுவார்."

லட்சுமிக்கு இது எல்லையற்ற ஏமாற்றத்தைத் தந்தது.

"முதலியார் அவர்களே! இதை நான் நம்ப முடியாது; நம்பவே முடியாது!" என்று கதறினாள்; "இளவரசருக்கு என் மீது கோபம்; அந்தக் கோபத்தோடு அவர் போர்க்களத்துக்குச் செல்ல நான் அனுமதிக்க மாட்டேன். என்னைச் சந்தித்து அவர் எனக்கு என்ன தண்டனையளித்தாலும் நான் ஏற்றுக் கொள்ளுகிறேன். தயவுசெய்து அவரை இங்கு அழைத்து வாருங்கள்!"

அரியநாத முதலியார் தமது இயலாமையை அவளிடம் வற்புறுத்தி அவளுக்கு என்



''என் மனைவிக்கு 'ஜீப்'புடன் ஒரே பிரசவத்தில் மூன்று குழந்தைகள் பிறந்திருக்கு சார்!''
''அவைகளுக்கு பர்மிட், லைசென்ஸ், கோட்டா என்று பெயர் வைத்து விடுங்கள்!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

வளவோ ஆறுதல் கூறிப் பார்த்தார். அவருக்கும் களத்தில் கடமைகள் காத்திருந்தன. அதே சமயம், களத்தில் குதிப்பதற்கு முன்பாக விசுவநாதனை அவள் காணத் துடித்த துடிப்பு அவர் உள்ளத்தையும் உருக்கத் தொடங்கியது.

''ஒன்று செய்யுங்கள்; நான் இப்போது தங்களோடு புறப்பட்டு வருகிறேன்; தயை செய்து என்னை அவரிடம் அழைத்துச் செல்லுங்கள்'' என்று மன்றாடினாள்.

இந்த வேண்டுகோளை முதலியாரால் மறுக்க முடியவில்லை. மாளிகையிலிருந்து ரதங்களும் குதிரைகளும் களத்தை நோக்கிப் புறப்பட்டன. முன்னதாகவே சென்று செய்தியை அறிவிக்கும்படியாக விசுவநாதனுக்கு ஆள் அனுப்பிவிட்டு, லட்சுமியோடு படை முகாமுக்குள் புகுந்தார் அரியநாத முதலியார்.

விசுவநாதன் கோபத்தால் அவளைக் காண மறுத்து விட்டானென்றாலும், அதன் பிறகு ஒவ்வொரு கணமும் அவள் நினைவு அவனை வாட்டிக் கொண்டுதான் இருந்தது. தன் கூடாரத்துக்குத் திரும்பி வந்து, பரபரப்போடு அதற்குள் உலாவத் தொடங்கினான்.

ஓடோடியும் வந்து, ''இளவரசே!'' என்று கதறிக் கொண்டே அவன் கால்களைப் பற்றிக் கொண்டாள் லட்சுமி. தன் துன்பமெல்லாம் கண்ணீராய்க் கொட்டித் தீர்த்தாள். ''என்னை மன்னித்து விடுங்கள் இளவரசே, மன்னித்து விடுங்கள்!''

''மன்னிப்பதற்கு ஒன்றுமில்லை, லட்சுமி! எழுந்திரு!''

''இல்லை; என் அப்பாவின் கொடுமையையும் துரோகத்தையும் நான் புரிந்து கொள்ளாமல் தங்கள் மனத்தை மிகவும் புண்படுத்தி விட்டேன். தங்களை மணந்து கொள்ளத் துடிக்கும் நான் தங்களுடைய இலட்சியத்தைப் புறக்கணித்து விட்டேன். தாங்கள் தஞ்சைக்கு வந்த போது நானாகவே அப்பாவைத் துறந்து விட்டுத் தங்களோடு புறப்பட்டிருக்க வேண்டும். தாங்களே கேட்டபோதும் நான் இசைவுகூறாமல் இருந்தது தவறுதான். தயவுசெய்து என்னை மன்னித்து ஏற்றுக் கொள்ளுங்கள்; இப்போதே என்னை மாலையிட்டு மணந்து கொண்டு போருக்குப் புறப்படுங்கள்!'' உணர்ச்சிவயப்பட்டு ஏதேதோ கூறினாள் லட்சுமி.

அளவுக்கு மீறிய துயரத்தோடு சிரித்தான் விசுவநாதன்.

''லட்சுமி! இப்போது காலம் கடந்து விட்டது: முன்னதாகவே நீ என்னுடைய நோக்கத்தைப் புரிந்து கொண்டு எனக்குத் துணையாக இருந்திருந்தால், இந்தப் போரையே நாம் இருவரும் சேர்ந்து தவிர்த்திருக்கலாம். இது போர்க்களம்; இங்கு நாம் அழவும் முடியாது; மாலையிட்டு மணந்து கொள்ளவும் முடியாது. எனக்கு உன் மீது கோபமில்லை; நீ பெண் பிள்ளை; உன் அப்பாவுக்கும் எனக்கும் இடையில் அகப்பட்டு நீ தவிக்கும் தவிப்புக்காக நான் இரக்கப்படுகிறேன்.''

''இல்லை; நான் இப்போது அப்பாவுக்காக வருந்தவில்லை'' என்றாள் லட்சுமி; ''ஆசை, பாசம், அன்பு, இரக்கம் எதுவுமே இல்லாத அதிகார வெறி அவரைப் பிடித்து ஆட்டுகிறது; என்னைப் பொறுத்தவரையில் அவர் இறந்து விட்டார்!''

விசுவநாதனின் உள்ளத்தில் ஏனோ எல்லையற்ற துயரம் அலைமோதியது. அவளுக்காகவும் தனக்காகவும் அவன் கண் கலங்கினான். போரின் வெற்றியில் யாராவது இருவரில் ஒருவரை லட்சுமி இழந்துதான் ஆகவேண்டும். சேரநாட்டுப் பெரும் படையும் சாளுவ நரசிம்மரின் சோழ நாட்டுப் படையும் எதிரில் குவிந்திருந்தன. களத்துக்கு வந்த பிறகுதான் சேரன் மிகப் பெரிய முன்னேற்பாடுகளுடன் வந்திருப்பது விசுவநாதனுக்கே தெரிந்தது. இந்த நிலையில் விஜயநகரத்துப் படைகளும் விசுவநாதனின் உதவிக்கு வந்து சேரவில்லை.

'போரில் நான் உயிர் துறக்க நேர்ந்தாலும் நேரலாம்; வெற்றி தோல்வியை நிச்சயம் செய்வதற்கில்லை. சாளுவநரசிம்மர் தீவிரமாக என்னைப் பழி வாங்க முனைந்து விட்டார்' என்ற நினைவு அவனுக்கு வந்தது.

போரில் உயிர் துறக்கக்கூடும் என்ற நினைவு வந்தவுடனேயே, விசுவநாதன் தன் உயிருக்குயிரானவளைச் சில விநாடிகள் கண்ணிமைக்காமல் உற்றுப் பார்த்தான். அவளை அருகில் அழைத்து இருக்கையில் அமரச் செய்த போது, அவள் வாடிப் போய்த் துவண்டு கிடந்த ரோஜா மாலை என அவனுக்குத் தோற்றமளித்தாள். அந்த மாலையிலிருந்து மெல்லிய நறுமணம் கமழ்ந்து வந்து அந்தக்





# பார்கோ

கேஸ் மான்டில்கள்

சிறந்த ஒளிக்கும்,
நீடித்த சேவைக்கும்

தயாரிப்பவர்கள் :

பார்கோ மான்டில் ப்ராடக்ஸ்
38/40, சர்வோதய பவன்
மார்ஸ் ரோடு, பம்பாய் - 64 N. B.

# ரண சிகிச்சையின்றிப் புதுமுறையில் வலிமயமான மூலத்தைச் சுருக்குகிறது, நமைச்சலை நிறுத்துகிறது, வலிதணிக்கிறது

**நியூயார்க்— தீவிரப் பிணிகளில் தவிர மற்றபடி ரண சிகிச்சை என்பதே தேவையில்லாமல் மூலத்தைச் சுருக்கி, நமைச்சலை நிறுத்தி, வலி தணிக்கும் அற்புத வல்லமையுள்ள புதுவித மருந்துப் பொருளை முதன்முறையாகக் கண்டுபிடித்துள்ளது விஞ்ஞானம்.**

டாக்டர்களின் கண்காணிப்பில் நிகழ்த்தப்பட்ட பரிசோதனைகளே இதற்கு அத்தாட்சி— வலியும் நமைச்சலும் உடனடியாகத் தணிக்கப்பட்டன. இதமுடன் மெல்ல வலியாற்றிய அதேசமயம் உள்ளபடி சுருக்கமே ஏற்பட்டது.

அனைத்திலும் ஆச்சரியம் என்னவெனில், பத்து இருபது ஆண்டுகள் நீடித்திருந்த பிணிகளிலும் இந்த அபிவிருத்தி நிலைபெற்றதுதான்.

உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிக் கழகம் ஒன்றின் கண்டுபிடிப்பாகிய பயோடைன்* என்ற புதிய மருந்துப் பொருளே இதன் இரகசியம். இப் புதிய மருந்துப் பொருள் தற்போது ப்ரிப்பரேஷன் ஹெச் என்ற பெயருடன், களிம்பு வடிவிலே அளிக்கப்படுகிறது. மூலத்தைச் சுருங்க வைப்பதோடன்றி, மலப் பாதைக்கு மழமழப்பூட்டி, மலப்போக்கினை வலி அற்றதாக்குகிறது. ப்ரிப்பரேஷன் ஹெச், 30கி. மற்றும் 50கி. டியூப்களாக இடுகுழாயுடன், எல்லா உயர்தர மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

மூல நோய் பற்றி விளக்கும் சிறு நூலை (ஆங்கிலம் அல்லது தமிழ்) இலவசமாகப் பெற இன்றே எழுதுக: டிபார்ட்மெண்ட்: 33, ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட்., போஸ்ட் பாக்ஸ் 976, பம்பாய் 1 பிஆர்.

*டிரேட் மார்க்

CHPH-3 TAM



''படம் எடுத்திங்களோ! கதை என்ன?''
''டேயட் லாங் வித் லவ் சீன், கவர்ச்சி நடனம். கார்; பஸ்; ரயிலில் சண்டை, கோர்ட் சீன், குரூப் டான்ஸ், சஸ்பென்ஸ் சீன், டெம்போ சீன், என்று எடுத்தாகி விட்டது. இனிமேல் தான் கதை பண்ண வேண்டும்.''

---

கூடாரம் முழுவதிலும் சூழ்வதுபோல் அவனுக்கோர் உணர்வு ஏற்பட்டது.

அவளுடைய அடர்ந்த கூந்தல், நீண்ட விழிகள், எடுப்பான நாசி, துடிக்கும் செவ்விதழ்கள், விம்மி வடியும் மார்பகம், குழையக்கூடிய பொன்னுல் உருக்கிவார்த்தது போன்ற மேனி இவற்றை ஒவ்வொன்ருகப் பார்த்துத் தனக்குள்ளே சித்திரம், தீட்டிக் கொண்டிருந்தான் அவன். இனம் புரியாத பிரிவின் வேதனை அவன் விழிகளில் படரத் தொடங்கி விட்டது. 'மீண்டுமொரு முறை இந்தப் பேரழகைக் காண முடியாமல் போனுலும் போகலாமல்லவா?' என்ற நினைவு அவன் நெஞ்சைக் கசக்கிப் பிழிந்தது.

''ஏன், அப்படிப் பார்க்கிறீர்கள்? நான் தான் தங்கள் அருகில் வந்துவிட்டேனே?'' என்ருள் லட்சுமி.

''நீயாகவா வந்திருக்கிருய்? நானல்லவா உன்னைக் கொண்டு வந்திருக்கிறேன்?''

''நானுந்தான் இறைவனிடம் முறை விட்டுக் கதறினேன். அதனுல்தான் நாம் மீண்டும் சந்திக்க முடிந்தது.''

''அதுவும் நல்லதுதான்'' என்று எங்கோ நினைவாகக் கூறியவன், ''போர் முடிந்த பிறகு ஒரு வேளை நாம் சந்திக்க முடியாமற் போனுலும் போகலாம்; களத்திலேயே நான் உயிரிழக்கும்படி நேர்ந்தாலும் நேரலாம்'' என்ருன்.

''தயவுசெய்து இந்த அவச் சொல்லைக் கூருதீர்கள்!'' என்று நடுங்கியவாறே அவன் வாயைப் பொத்தினுள் லட்சுமி. முன்னமேயே அப்படி ஓர் அச்சம் அவள் இதயத்தை மென்று தின்று கொண்டுதான் இருந்தது.

''ஒருகாலும் தாங்கள் தோல்வியுற மாட்டீர்கள்; தங்களுக்கு ஓர் ஆபத்தும் நேராது. இது வரையில் தங்களை நான் புரிந்து கொள்ளாதவளாக இருந்தாலும் இப்போது அடியோடு மாறிவிட்டேன். தங்களுடைய வெற்றிக்காகவும் தாங்கள் உயிரோடு திரும்ப வேண்டும் என்பதற்காகவும் நான் ஒவ்வொரு கணமும் இறைவனிடம் வேண்டிக் கொண்டிருக்கிறேன். என் முறையீடு வீண் போகாது. நீங்கள் கட்டாயம் வெற்றியுடன் திரும்புவீர்கள்!'' என்ருள்.

லட்சுமியின் விழிகளில் அப்போது புத்தொளி சுடர் விடுவதைக் கண்டான் விசுவநாதன்.

''நான் தங்களைப் புரிந்து கொள்ளத் தவறி விட்டது உண்மைதான். ஆனல் என் அன்பு பரிசுத்தமானது; களங்கமற்றது. சில நாட்களாகவே நான் என்னை இறைவனின் திருவடிகளுக்கு ஆட்படுத்திவிட்டுத் தங்களின் வெற்றிக்காக மட்டும் முறையிட்டு வருகிறேன். என்னுடைய அன்பில் தூய்மையிருந்தால் கட்டாயம் என் முறையீட்டுக்கு இறைவன் செவிசாய்த்தே தீருவான். நான் அவனிடம் வேண்டுவதெல்லாம் தங்களுடைய வெற்றிதான்; தங்கள் இலட்சியத்தின் வெற்றிதான்; எனக்கென்று நான் எதையுமே கேட்கவில்லை!''

''லட்சுமி!'' எனப் பதறினுன் விசுவநாதன்.

''நான் வருகிறேன்!'' என்று எழுந்தாள் லட்சுமி; ''தாமிரவருணித் தண்ணீரில் மூழ்கி விட்டுத் தங்களின் வெற்றிக்காக நான் மீண்டும் இறைவனிடம் மன்ருடப் போகிறேன். தர்மம் வெல்லும் என்று தாங்கள் அடிக்கடி கூறுவதன் பொருள் எனக்கு இப்போதுதான் விளங்குகிறது. போர்க்களத்தில் இந்த உடலோடு தங்களுக்கருகில் இல்லாவிட்டாலும் தங்கள் உயிர் மூச்சாய்த் தங்களோடு கலந்திருப்பேன்!''

சரேலென்று விசுவநாதனின் உடைவாளைப் பற்றி இழுத்து, தன் விரல் நுனியைக் கீறி, அதில் பவளம் போல் திரண்டெழுந்த உதிரத்தை அவன் நெற்றியில் இட்டாள். 'வென்று வாருங்கள்!' என்று ஆவேசம் வந்தவள்போல் கூறினுள்.

ஏனே விசுவநாதனுக்கு அப்போது லட்சுமி ஒரு மானிடப் பிறவியாகவே தோற்றமளிக்கவில்லை. அமானுஷ்யமான தோற்றம் அது. காலமெல்லாம் துறவுக் கோலம் பூண்ட ஒரு கன்னிகையைக் காண்பது போன்ற ஒரு பிரமை. தன்னை மறந்து அவன் அவளுக்குக் கைகூப்பினுன். அவளும் அவன் பாதங்களில் விழுந்து வணங்கி எழுந்தாள்.

அவளை நகரத்து மாளிகையில் விட்டுவரச் சென்ற அரியநாத முதலியார், ''இளவரசியார் தாமிரவருணியில் மூழ்கிவிட்டு இறைவனின் ஆலயத்தைத் திறக்கச் செய்து அதற்குள் நுழைந்து விட்டார்கள்!'' என்ருர். காவலுக்கு ஏற்பாடு செய்திருப்பதாகவும், லட்சுமி ஆலயத்திலிருந்து வெளியே வந்தவுடன் மாளிகைக்கு அழைத்துச் செல்லுமாறு கட்டளையிட்டிருப்பதாகவும் அறிவித்தார்.

பொழுதும் புலரத் தொடங்கியது: போர்முரசுகளும் சங்குகளும் விசுவநாதனைக் களத்துக்குக் கூவி அழைத்தன.

— அடுத்த இதழில் முடியும் —

TONE TUNE

தோற்றத்தைப் போலவே
மதிப்பிலும் மகத்தானது

# புதிய
# ஐந்து
# பாண்டு

## போர்ட்டபிள் டிரான்சிஸ்டர்...
## புஷ் ஈடிஆர். 117

(தனிச்சிறப்பிலே புஷ் என்றும் இதுதான்)

நீங்கள் எங்கிருப்பினும் சரி...தெளிவான ஒலியைக் காதாரக் கேட்க உறுதிதரும் அலைவரிசை 5 பாண்டுகளைக் கொண்டுள்ளது. எடுத்துச் செல்வதற்கு மகத்தான இப் புதிய புஷ் டிரான்ஸிஸ்டர். இன்டர்நேஷனல் டைம் கேல்குலேட்டர் இதில் இணைபொருத்தியுள்ளதனால், உலகின் எப்பகுதியிலும் நேரமென்ன என்பதை அறிந்துகொண்டு, உங்களுக்குப் பிடித்தமான நிகழ்ச்சிகளைத் தப்பாமல் கேட்கலாம். தவிர, 8 டிரான்ஸிஸ்டர்கள், ஒரு டயோடு, பெரிதான 7" x 4" ஹெவி-டியூட்டி ஒலிபெருக்கி எல்லாமாக இணைந்து, கச்சிதமான ஊழியத்தை அளிக்கின்றது. அருகிலுள்ள விற்பனையாளரைக் கண்டு, புதிய புஷ் ஈ டி ஆர்.117...மற்றும் எழில்வாய்ந்த பிறவகை புஷ் மாடல்கள் யாவற்றையும் காண்பிக்கச் சொல்லுங்கள்.

# புஷ்

டிரான்ஸிஸ்டர்ஸ்

# யமன்களுக்கு மெஸ்மெரிஸம்

ராஜேந்திர குமார்



யமன்களுக்கு, கொடைக்கானல் மலை எவ்வளவு உயரமென்று தெரிந்திருந்தது. 'பில்லர் ராக்ஸ்' உச்சியிலிருந்து தவறிப் பள்ளத்தில் விழுந்து விட்டால் கனிசமாக எவ்வளவு எலும்புகள் தேறும் என்பதும் புரிந்திருந்தது. வானவெளி ஆராய்ச்சிக் கூடத்திலிருந்த ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்தைந்தாம் ஆண்டு வரவிருக்கும் வால் நட்சத்திரத்தின் புகைப் படத்திலிருந்து அதன் கனபரிமாணங்களைக்கூட ஊகிக்க முடிந்திருந்தது. ஆனால் அவர்களாலேயே புரிந்து கொள்ள முடியாமல் போனது ஒன்று உண்டென்றால் அதுதான் மனோகரனின் உள்ளம். அடுத்த நிமிஷம் அவன் என்ன செய்யப் போகிறான்? என்ன செய்யக் காத்திருக்கிறான் என்பது யாருக்குமே தெரியாத பரம ரகசியமாகும்.

இடது கையிலிருந்த பையைத் தொங்கவிட்டுக் கொண்டும், வலது கையிலிருந்த நாகரிகக் குடையைத் தோளில் சாத்திக் கொண்டும், விஸிலில் சினிமாப் பாட்டைப் பாடியவாறு வந்து கொண்டிருந்த மனோகரன் நின்றான்; கவனித்தான்.

சற்றுத் தொலைவில் கூடியிருந்த கும்பலைப் போலீசார் விரட்டப் புகைப்படக்காரர்களும், நிருபர்களும் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தார்கள். கீழே விழுந்து கிடந்த ஒருவன் உதறலுடன் எதையோ விளக்கிக் கொண்டிருந்தான். விஷயம் புரிந்துவிட்டது மனோகரனுக்கு. இன்றைக்கும் யாரோ பேயைப் பார்த்து மயங்கியிருக்கிறார்கள் போலும்!

இவன் நெருங்கிப் போனபோது அந்த ஆள் விளக்கிக் கொண்டிருந்தான். "காலையிலே நாலு நாலரை மணியிருக்குமுங்க. கன்னுக்குட்டி கயிற்றை அறுத்துக்கிட்டு ஓடிப்போச்சு. அதைத் துரத்திக்கிட்டு நானும் இவனும் இங்கே ஓடி வந்தோம். இவன்தான் முதல்லே அதைப் பார்த்து அலறினான். நானும் அப்புறமாக் கவனிச்சேன். அம்மாடி" என்றவன் நடுங்கினான். "எம்மாம் உசரம்? அப்படியே ஜோதியா மின்னுச்சு... கீழுக்கும் மேலுக்குமா அல்லாடிச்சு...நானும் பயந்து போய் மயங்கி விட்டேன்!"

மனோகரன் புறப்பட்டான். போகிற போக்கில் கீழே மயங்கிக் கிடந்த இன்னொர் ஆளைக் கவனித்தான். நாக்கைக் கடித்துக் கொண்டு பல்லெல்லாம் தெரிய மகா கோரமாகக் காட்சியளித்தான் அவன். அருவருப்புடன் உதடுகளும், முகமும் கோணிக்கொள்ள அப்பால் நடந்தான் மனோகரன்.





"அடா!" கூடாரத்தை விட்டு வெளியே வந்த தினன், எதையோ பார்த்து வியந்தான். அவனைத் தொடர்ந்து வெளியே வந்த மற்ற யமன்களும் 'அடேடே' என்று வியந்தார்கள். அப்படி என்ன விசேஷமிருந்தது அங்கே?

சென்னை ஹாஸ்டல் பியூன் 'அல்சேஷன்' எனப் பெறும் ஆதிசேஷன் அங்கே வந்து கொண்டிருந்தான்.

வயதில் கிழவனானாலும் கூட அவன் என்ன வேகமாய் நடக்கிறான் என்று வியந்தனர் யமன்கள். "கண்ணுகளா! புள்ளைங்களா! சௌக்கியமா யிருக்கீங்களா?" என்று கொஞ்சியவாறு வந்து சேர்ந்தான் ஆதிசேஷன்.

"ஓ!" என்ற சந்துரு கேட்டான்: "ஐயா அல்சேஷன்! நீ எங்கே இந்த ஊருக்கு வந்தே? நீயும் என். வி. வி.யிலே சேர்ந்துட்டியா?"

"ஓஹோ...ஹோ..." என்று வாய் விட்டுப் பயங்கரமாகச் சிரித்தான் ஆதிசேஷன். "வெளையாட்டுப் புள்ளைங்க. இந்த வயசிலே எனக்கு எதுக்குத் தம்பி என்னும் வியும். அதெல்லாம் உன்னைப் போல இளரத்தம் ஓடறவங்களுக்குத்தான் சரி."



"பின்னே என்ன?" சுரேஷ் குமார் கேட்டான்: "ஸீஸன் அனுபவிப்பதற்காக இங்கே வந்தாயா?"

அல்சேஷன் மீண்டும் சிரிக்கவே, "தயவு செய்து நீ சிரிக்காதே. பயமாயிருக்கு" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான் சுரேஷ்குமார்.

"வார்டன் ஐயாவும் அவர் ஸிநேகிதரும் வந்திருக்காங்க. அவங்களுக்குத் துணையாக நானும் வந்தேன்." அவர்கள் 'ஐயோ!' என்று அலறுவதையும், "போச்சுடா" என்று சலித்துக் கொள்ளுவதையும் சட்டை பண்ணாமல் பேசிக் கொண்டே போனான் அல்சேஷன்: "அவர் ஸிநேகிதரு இருக்காரே அவர் பெரிய ஆளு. மந்திரக்காரரு. பெரிய பெரிய ஜால வித்தையெல்லாம் பண்ணுவாரு. இப்பொழுது கூட ஒரு ஆராய்ச்சிக்காக வந்திருக்கார்! அதோ அந்தப் பக்கமா போனா ஒரு சுடுகாடு இருக்கு. அதிலே என்னமோ 'காத்துக் கறுப்பு' இருக்காம். அதைப் பற்றி யெல்லாம் ஆராய்ச்சி செய்வதற்காக வந்திருக்காரு."

"என்ன விஷயத்தைப் பற்றி ஆராய்ச்சி!" என்று கேட்ட சுரேஷ்குமாரின் நாவு மேலண்ணத்திலே ஒட்டிக் கொண்டு விட்டது.

"அதான்... இந்தக் காத்துக் கறுப்பு... பேய் பிசாசு..." என்ற ஆதிசேஷன், சுரேஷ்குமார் போட்ட கூச்சலைக் கேட்டு நடுநடுங்கிப் போனான். "இன்னு சாமி உனக்கு என்ன ஏற்பட்டுப் போச்சு?"

"அதை மறுபடியும் சொல்லாதே!"- என்று சுரேஷ் தடுக்க, "எதை? பேய் பிசாசன்னு?" என்று ஆதிசேஷன் விளக்கம் கேட்டான்.

சுரேஷ் அலறித் துடிக்க ஒரே அமளியாகிவிட்டது. அந்த நேரம் பார்த்துத்தான் மனோகரன் நுழைந்தான். "மூட்டாள்தனம். வெறும் மூட்டாள்தனம்" என்ற முணுமுணுப்புடன் கையிலிருந்த பைகளை மேஜை மீது வைத்துவிட்டுச் சொன்னான்: "இன்னைக்கு மறுபடியும் இரண்டு பேர் பயந்திருக்காங்க. வருகிற வழியிலே பார்த்தேன். பத்திரிகைக்காரங்களும், போலீஸ்காரங்களும் ஏறே விழுந்து கிடக்கிற இரண்டு பேருக்கு மேப்பிலே அடித்துக் கொண்டிருந்தாங்க. என்ன மனுஷர்களோ? இப்படியா தொடை நடுங்கிகளாக இருக்கிறது?"

"நீ மட்டும் பெரிய தைரியசாலியாக்கும்! பேசாதேடா மடையா!" என்று சுரேஷ்குமார் சீறி விழுந்தான். உடனே மனோகரன் அவனுடன் சண்டைக்குப் போனான். மற்றவர்களில் சிலர் அவர்களைத் தடுக்க, பலர் கைகளைப் பிசைந்து நிற்கக் கொஞ்ச நேரம் நடந்த அமளியின் இறுதியில் வீரத்துடன் சபதம் செய்தான் மனோகரன். "பிடி என் சவாலை! அமாவாசையல்லவா இன்று. பார் சரியாக இரவு பன்னிரண்டு மணிக்கு அதே கடு காட்டின் உள்ளே போய் அங்கிருக்கிற பெரிய ஆலமரத்தில் ஆணியடித்து விட்டு என் ஆண்மையை, வீரத்தை நிரூபிக்கிறேன். பந்தயம்! இது பந்தயம்!"

"டேய், கனி!" — வார்டன் வேடியப்பன் அழைத்தார். "என்னத்தைடா அப்படி விழுந்து எழுந்து தேடுகிறாய்?"

"என் உயிர் நிலையையே காணோம்டா." சரிகைக் குஞ்சம் வைத்து கறுப்புத் தொப்பி யணிந்திருந்த மெஸ்மெரிச மேதை கனிலால் சொன்னார். "உன் பேச்சைக் கேட்டு நான் குட்டிச்சுவராகப் போனேன்."

உருவத்திலும், அந்தஸ்திலும் வளர்ச்சி பெற்றிருந்தாலும், உள்ளத்தளவில் அவர்கள் இருவரும் பழைய கல்லூரி மாணவர்களாக, தோழர்களாகவே இருந்தார்கள். ஆகையால் அவர்களுக்குள் 'அடா...டேய்' எல்லாம் சகஜமாயிருந்தன. "உயிர் நிலையா?" என்ற வேடியப்பன் சிரித்தார். "அந்தக் காலத்துப் பாட்டி கதைகளில் வரும் மந்திரவாதிகளைப் போல, நீயும் உன் உயிர்நிலையை ஏழு கடலுக்கு அப்பால், மாயக் குகையில் மோதிரத்திலோ, புறவிலோ வைத்திருந்தாயா? அதை இப்போது காணோமா?"

"அறைவேன் உன்னை" என்று செல்லமாகக் கோபித்துக் கொண்டார் கனிலால். "என்னடா விளையாடா பண்ணுறே? 'மெஸ்மெரிஸமும், அதன் ஆராய்ச்சிகளும்' என்ற என்னுடைய புஸ்தகத்தைக் காணோம். பார்க்கிலே விட்டு விட்டேனா?"

"அதெப்படி?" என்று வியப்புடன் கேட்டார் வேடியப்பன். "வானவெளி ஆராய்ச்சி நிலையத்துக்குப் போகும்போது அது உன் கையிலிருந்ததே! அப்புறம் மார்க்கெட்டில் கூடப் பார்த்தேன் போலிருக்கிறதே!"

"அப்போது மட்டுமா? இப்பவும்தான் என் கையிலிருக்கிறது" என்ற கனிலால், செய்தித்தாளால் அட்டை போட்ட ஒரு புஸ்தகத்தை எடுத்துக் காட்டினார்.

"அடே...டே...!" வியந்து அயர்ந்து போனார் வேடியப்பன். "ஒப்புக்கொள்ளுகிறேனடா. நீ பெரிய மெஸ்மெரிச மேதைதான். காணாமல் போனதை அதற்குள் வரவழைத்து விட்டாயே பலே...பலே..."

"மண்ணாங்கட்டி" என்று அலுத்துக் கொண்டார் கனிலால். "இது வேறு ஏதோ ஸர்ம நாவல். பேப்பர் அட்டையைப் பார்த்து ஏமாந்து விட்டேன். வெறும் புத்தகம் மட்டும் தொலைந்திருந்தால் கவலையில்லை. அதற்குள்ளேதான்.." என்றவர் கப்பென்று அடங்கினார். பிறகு புலம்பத் தொடங்கினார். "என் உயிருக்குயிரான புத்தகம் எங்கே போச்சோ!... என்ன ஆச்சோ...?" என்று தலையைப் பிய்த்துக் கொண்டிருந்தார்.

அதே நேரத்தில் என். ஸி. ஸி. கூடாரத்தின் ஆண்கள் பகுதியில் ஒரு மூலையில் ஜாலவித்தை செய்து காட்டிக் கொண்டிருந்தான் மனோகரன்.

"என் கண்களையே பார்." மனோகரன் சொன்னான் தினேஷை நோக்கி. "உற்றுப் பார். இமை மூடாமல் பார்" என்றவன் சட்டென்று உள்ளங் கைகளைத் தன் கண்ணங்களின் அருகிலே பிரித்துக் காட்டினான். அந்த உள்ளங் கைகளிலும் இரண்டு கண்களை வரைந்திருந்தான். "என்ன பார்க்கிறாய் இப்போது ?"

"கண்கள்.. இரண்டு ஜோடிக் கண்கள்" என்று போதையுண்டவனைப் போல் சொன்னான் தினேஷ். "அதாவது நான்கு கண்கள். கண்களைத் தவிர வேறில்லை!"

"சபாஷ்!" என்ற மனோகரன் வில்லன் சிரிப்புச் சிரித்தான். "நீ இப்போது மெஸ்மெரிசத் தூக்கத்தில் இருக்கிறாயா?"

"ஆமாம்!" பதுமை போலச் சொன்னான் தினேஷ். "நான் மெஸ்மெரிசத் தூக்கத்திலிருக்கிறேன்."

"பேஷ்... பேஷ்!" என்று துள்ளி எழுந்த மனோகரன், "எழுந்திரு" என்று ஆணையிட்டதும், தினேஷும் துள்ளி எழுந்தான். "அருகில் வா" என்றதும் அருகில் வந்தான். "இப்பொழுது நீ என்வசத்திலே இருக்கிறாய். நான் என்ன சொல்கிறேனோ அதையே செய்வாய்!" என்ற மனோகரன் உத்தரவிட்டான். "போ. மெஸ்ஸுக்குப் போய்ச் சூடாக ஒரு கப் காப்பி கொண்டு வா!"

வெடுக்கென்று திரும்பிய தினேஷ் மனோகரனின் தலையிலே ஒரு குட்டிக் குட்டிக் காதைப் பிடித்து அவன் அலற அலறத் திருகினான். "மடையா, என்னடா இது பேத்தல்! மெஸ்மெரிஸமாவது மண்ணாங்கட்டியாவது!"

"இந்த புஸ்தகத்தைப் பாரேன்." அவனிடமிருந்து கஷ்டப்பட்டுக் காதை விடு




# ஸிக்னல்

## கிருமிகளைத் தாக்கும் செவ் வரிகள் தரித்தது!*

## துலக்கிய வாய் முழுதும் தூய்மை நிலவும்!

**❶ உங்கள் பற்களைத் துலக்கும் ❷ துலக்கிய வாய் மணக்கும்.**

* அந்தச் சிவப்பு வரிகளிலே இருப்பது ஹெக்ஸாக்ளோரபீன்.

பற்களின் துப்புரவுக்கு ஒரு புதிய உதவி: கிருமிகளைத் தாக்கும் செவ் வரிகள் கூடிய ஸிக்னல்: வாய் நிரம்பும் தூய்மைக்கென்றே வாய்த்த ஒரு பற்பசை. பற்களைத் துலக்கும்போதே, உங்கள் மூச்சையும் மணமுடன் தூய்மைப்படுத்துகிறது அவ் வரிகளிலுள்ள ஹெக்ஸாக்ளோரபீன். காரணமா? நாற்றமுண்டாக்கும் கிருமிகளை உடனடியாக ஒழிக்கவல்ல பாதுகாப்புப் பொருளே ஹெக்ஸாக்ளோரபீன். எனவே, ஸிக்னல் தேய்த்த வாய் முழுதும் தூய்மையின் ஆட்சி. கோலச் செவ்வரிகள், கொப்பளிக்கும் நுரைவளம், குளுகுளு பெப்பர்மின்ட்டுப்போன்ற சுவை... ஆஹாஹா! குடும்பத்திலுள்ள எவரைத்தான் கொள்ளை கொள்ளாது? வாய் முழுமையும் தூய்மையோ தூய்மை, யாவரும் உணரலாம். இன்றே பெறுங்கள் ஸிக்னல்.




...உங்கள் பற்களைத் துலக்கும்,
துலக்கிய வாய் மணக்கும்.

லின்டாஸ்-SG.

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமானதொரு தயாரிப்பு

வித்துக் கொண்ட மனோகரன் ஒரு புஸ்தகத்தை எடுத்து நீட்டினான். "இதிலே நல்ல மெஸ்மெரிஸக் குறிப்புகள் இருக்கின்றன."

"உருப்பட்டாற்போலத்தான். ஏற்கனவே மார்க் வாங்குகிறதிலே புலி. இந்த லட்சணத்தில் இதை வேறு படிக்க உன் மூளையைக் குழப்பிக்கிறாயா?"

"மெஸ்மெரிஸத்திலே பெரிய புலியாக ஆகிவிட்டால் உட்கார்ந்த இடத்திலிருந்தே பேப்பர் திருத்துகிற பேராசிரியரை வசியப் படுத்தி, அவரை நிறைய மார்க் கொடுக்கும்படி செய்யலாமே!"

விழுந்து எழுந்து சிரித்த தினேஷ் கேட்டான்: "எதுடா இது?"

"பொட்டானிகல் கார்டனில் 'கத்திமுனை ரத்தம்' என்கிற என் நாவலுக்குப் பதிலாக இதைத் தூக்கிக் கொண்டு வந்துவிட்டேன். யாருடைய புஸ்தகமோ மாறிப் போச்சு."

புத்தகத்தைப் பிரித்தான் மனோகரன். லொட்டென்று எதுவோ மார்பில் விழவே துள்ளி எழுந்து அதைக் கையில் எடுத்துப் பார்த்தான். அது ஒரு கடிதம்.

பிரித்துப் படித்தவனின் கண்கள் வியப்பால் பாதாம் கொட்டையளவுக்கு விரிந்தன.

அறையினுள்ளே நுழைந்த வார்டன் வேடியப்பன், "ஏய்.....ய்....." என்று அலறினார்; பாய்ந்தோடினார். ஆனால் அதற்குள் காரியம் மிஞ்சி விட்டது.

"மாமா.... மாமா...." என்று அந்தச் சின்னஞ்சிறு பெண் கீச்சுக் குரலில் கத்தினாள். "டேபிளிலே இங்க் கொட்டிப் போச்சு. துடைக்க விட்டேன்."

அவள் கையிலிருந்த தன்னுடைய வெள்ளை நிற 'ஷார்ட்ஸ்கின்' கோட்டைப் பிடுங்கிப் பார்த்தவருக்கு அழுகை அழுகையாக வந்தது. இட்டுத் திட்டாக மசிக்கறை படிந்து கசங்கிப் போயிருந்தது. ஆத்திரத்துடன் அறைய ஓங்கிய கை அப்படியே நின்றது. பின்னிருந்த கனிவா பற்றி இழுத்துத் தடுத்தார். "ஏண்டா, வேடி? ஏண்டா, அந்தக் குழந்தையை அடிக்கப் போறே! பாவம்! என்ன பண்ணிற்று அது?"

"என்ன பண்ணிற்று? கேள்வியா கேட்கிறாய்? இதோ பார்!" என்று கசங்கிப் போன 'கோட்'டை அவர் மேல் விட்டெறிந்தார் வேடியப்பன். "காலையில் ஷேவிங் பண்ணும்போது திடீரென்று இது 'கிச்சுகிச்சு' மூட்டப் போய் என் கன்னத்தில் அறுப்பு விழுந்தது. மாடி ஏறும்போது வழியிலே பொம்மைக் கார் வைத்து என்னை வாரிவிட்டு விட்டது. அந்தமட்டும் கால் சுளுக்கோடு போயிற்று. எல்லாத்துக்கும் மேலாக என் மூக்குக் கண்ணாடியை எடுத்து ஒளித்து வைத்துவிட்டது. பன்னிரண்டு மணி வரை பேந்தப் பேந்த விழித்து அவதிப்பட்டேன். எனக்கு வருகிற ஆத்திரத்தில் இதை ஒரு சுற்றுச் சுற்றி மலையிலிருந்து தூக்கி எறியவேணும் போலிருக்கு. சனியன்.... சனியன்" என்று வேடியப்பன் கறுவினார்.

கனிவாவின் முகத்தில் மர்மமாக ஒரு புன்னகை பூத்தது. "அப்பா ! அம்மா இல்லாத குழந்தை என்றுதானே உன்னைக் கார்டியனாக்கி விட்டார்கள். அதுவும் சாதாரணக் குழந்தையா? பதினைந்து லட்சம் ரூபாய்க்கு வாரிசு. கொஞ்சம் செல்லமாக வளர்ந்தது. அப்படித்தான் குறும்பு செய்யும். இதற்கெல்லாம் கோபித்துக் கொண்டால் எப்படி! 'யாருமில்லாத அனாதை நான்' என்ற ஏக்கம் அதன் மனத்தில் ஏற்பட்டு விட்டால் அப்புறம் ஆபத்து. சும்மாயிரு !" என்றவர், "அடி அபிதா, கண்ணு! வா.... வா....!" என்று செல்லமாகக் கொஞ்சி அதைத் தூக்கிக் கொண்டார். தமது கறுப்புத் தொப்பி (குஞ்சம் வைத்தது)யை எடுத்து அதன் தலையில் வைத்துச் செல்லம் கொஞ்சுவது கண்டு நறநறவென்று பல்லைக் கடித்தார் வேடியப்பன்.

குடும்பத் தொல்லையே வேண்டாம் என்பதற்காகக் கல்யாணம்கூடச் செய்து கொள்ளாமலிருப்பவர் வேடியப்பன். பணக்கார உறவினர் ஒருவர் சாகும்போது, குழந்தையை அவரிடம் ஒப்படைத்து இவரைக் கார்டியனாக நியமித்து உயிலெழுதி விட்டார். வேடியப்பன் குழந்தைகளிடம் பழகியறியாதவர். அதன் குறும்புத்தனங்களை உணராதவர். எதற்கெடுத்தாலும் முன்கோபம் கொள்ளும் சுபாவமுடைய அவருக்கு அந்த நாலு வயதுக் குழந்தை ஒரு பெரிய சோதனையாக இருந்தாள். எதிர்பாராதவிதமாகச் சந்தித்த பழைய நண்பனை கனிவால் ஏதோ பேய் ஆராய்ச்சிக்காகக் கொடைக்கானல் போவது அறிந்து அவரும் புறப்பட்டார். அவரைத் தொடர்ந்து அந்தக் குழந்தையும் வந்தது.

'செண்ட்ரி' போட்டுக் காவல் காத்து நின்ற பையனை ஏமாற்றி விட்டுப் போவது சுலபமாயிருந்தது யமன்களுக்கு. தூங்கிக் கொண்டிருந்த தளபதி திருவாளர் பீட்டரை ஏய்த்து விட்டுப் போவதும் சிரமமாயிருக்கவில்லை. கஷ்டப்பட்டு ரோட்டுக்கு ஏறிவந்து விட்ட பதினாறு பேர்களுக்கும், "கண்ணுங்களா ! எங்கே, புறப்பட்டீங்க, இந்த அர்த்த ராத்திரியிலே!" என்று கேட்டவாறு எதிர்ப்பட்டுவிட்ட அல்சேஷனைச் சமாளிப்பதுதான் சிரமமாகி விட்டது.

"நீ எங்கேய்யா இங்கே வந்தே ?" என்று கேட்டான் சந்துரு சங்கடத்துடன்.

"நான் சினிமாப் பார்த்து ரொம்ப நாள் ஆச்சு ! வார்டனய்யா நண்பர் இருக்காரே, அந்த மந்திரக்காரரு, அவருதான் பணம் கொடுத்துப் படம் பார்த்துட்டு வாடான்னார். போயிட்டு வரேன். அந்தண்டைப் பக்கமாப் போகாதீங்க. அங்கே சுடுகாடு இருக்கு. அதிலே பேய் இருக்கு" என்று கூறியவாறே அகன்றான் அல்சேஷன்.

" ஏண்டா, 'உம்'முனுயிருக்கே ?"—"ஏண்டா, என்னமோ மாதிரியிருக்கே ?" என்று சுரேஷ்குமாரைக் கேட்டுக் கொண்டேயிருந்தனர் யமன்கள். அவன் முகம் ஒரு முழம் தொங்கிப் போயிருந்ததற்குக் காரணம் மனோகரன்தான். 'பெரிய வீரனும், புறப்பட்டு விட்டானும் ஆணியடிக்க. அங்கே என்ன என்ன கோரம் நடக்கப் போகிறதோ ! ஆண்டவா!' என்று புலம்பிக் கொண்டான் சுரேஷ் மனத்துக்குள்.

நடு இரவும், மயான அமைதியும் அவனை உலுக்கி நடுக்கி எடுத்தன.





ஹெட்மாஸ்டர்: உங்க ஸ்கூலிலே மாணவர்கள் பெஞ்சிலேயே உட்கார்ந்து ஒரு நாள்கூட நான் பார்த்ததே இல்லையே!

''வேளை நெருங்குகிறது'' என்று அந்த மெஸ்மெரிஸ மேதை கனிலால் அடிக்கடி புலம்பியதாலும், சுடுகாட்டின் சூழ்நிலையாலும் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தார் வேடியப்பன். கனிலால் சட்டென்று தொடவே, அலறிக் கொண்டு அப்பால் போய் ஒரு சமாதியின் மேல் விழுந்தார். ''மடையா! இடம் பொருள் ஏவல் தெரியாமல் ஏன்டா திடீரென்று கையைப் போடுகிறாய்? நான் பயந்தே போனேன்'' என்றார் வேடியப்பன்.

கனிலால் பயங்கரமாகச் சிரித்தார். அந்தச் சிரிப்பில் கொலை வெறியிருந்தது.

''சரி.... சரி.... போதும், உன் அர்த்த ராத்திரி ஆராய்ச்சி'' என்று வேடியப்பன் அலுத்துக் கொண்டார்.

அவரது வேண்டுகோளை அலட்சியம் செய்து கனிலால் முன்னேறி நடக்கவே, சுடுகாட்டினூடே தனியே திரும்பிச் செல்லும் தைரியமில்லாததினால் கனிலாலையே பின் தொடர்ந்தார் வேடியப்பன்.

கொஞ்ச தூரம் நடந்ததும் 'ஸ்ஸ்' என்றார் கனிலால். தட்டிவிடப்பட்ட தொப்பியைச் சரிப்படுத்திக் கொண்டு நடந்தார். இன்னமும் கொஞ்ச தூரம் நடந்ததும், ''சும்மாயிருக்க மாட்டாய்?'' என்று அதட்டிய வேடியப்பன், நிமிர்த்திவிடப்பட்ட சட்டைக் காலரை சரிப்படுத்திக் கொண்டு நடந்தார். சற்றுப் பொறுத்து இரண்டு பேர்களுமே 'ஸ்ஸ்' என்று திரும்பி ஒருவரையொருவர் பார்த்து விழித்தார்கள்.

''தொப்பியைத் தட்டி விட்டாயா?'' என்று கனிலால் கேட்க, ''இல்லையே'' என்று மறுத்த வேடியப்பன், ''என் காலரைநிமிர்த்தி விட்டாயா?'' என்று கேட்க, ''இல்லையே'' என்று கனிலால் கூற, இருவருமாக, ''என்ன இது?'' என்று விழித்தார்கள். ''நிச்சயம் இது பேயின் வேலைதான்'' என்று கனிலால் கூறிய போது, உடம்பு முழுதும் மயிர்க்கூச் செறிந்தது வேடியப்பனுக்கு. ''போகலாமா திரும்பி?'' என்றார் மெதுவாக.

''அதற்குள்ளேயா? வந்த காரியம் முடியாமலா?...என் ஆராய்ச்சியைச் சொன்னேன். பேய் வரவேண்டாமா?''

''நான் நினைக்கிறேன் கனி, நம்ம ஹால்டன் பசங்கள் என்னைப் பார்த்ததும் ஓடி ஒளிவாங்க. அதைப் போல இந்தப் பேயும் ஒரு ஹால்டன் மாணவனாயிருக்கும். என்னைப் பார்த்ததுமே பயந்து ஓடியிருக்குமோ, என்னமோ!''

''யார் சொன்னது?'' என்ற கனிலால் சுட்டிக் காட்டினார். ''அதோ! அங்கே வெளிச்சத்திலே பார்!''

''எங்கே?'' மயிர்க்கூச்செறிந்தது வேடியப்பனுக்கு. உற்றுப் பார்த்தார். அங்கே குழந்தை அபிதா நின்றிருந்தாள் விழி இமைக்காமல். ''அடேடே! இது அந்த இரட்டைவாலல்லவா? சனியன்! சுடுகாட்டுக்குப் போனாலும் என்னை விடாது போலிருக்கு.''

''மடையன் மாதிரி பேசுகிறாயே!'' கனிலால் அதட்டினார். ''குழந்தையைத்தான் தூங்கப்பண்ணி விட்டு வந்திருக்கிறோமே! அதெப்படி இங்கே வரும்? பேயின் தன்மையே அதுதான். நமக்குப் பிடித்தமானவங்க உருவத்திலே வந்து நிற்கும். நாம் ஏமாந்து அருகிலே போனால் சுயரூபத்தைக் காட்டும். இந்தா இதைப் பிடி!'' — இப்படிக் கூறிய கனிலால்'' முழநீள மிருந்த ஒரு கத்தியை நீட்டியதும் வேடியப்பன் அலறினார். ''முட்டாள்! கூச்சல் போடாதே. இதனால் அந்தப் பிசாசைக் குத்திவிட்டு வா! பயப்படாதே! நான் அதை மெஸ்மெரிஸத் தாக்கத்தில் ஆழ்த்தி யிருக்கிறேன். தைரியமாய்ப் போ!'' என்றார் கனிலால்.

வேடியப்பன் மறுத்தார். ''அது உண்மையிலேயே அபிதாவாக இருந்தால்...? ஐயோ! நான் மாட்டேன்:''

''சொன்னால் கேள். இது உண்மையிலேயே பேய்தான்'' என்று கனிலால் வற்புறுத்தினார். ''அந்த அபிதாவை ஒவ்வொரு நாளும் நூறுதரம் 'குத்துவேன், கொல்லுவேன்' என்கிறாயல்லவா? அந்த ஆத்திரத்தை இந்தப் பேயைக் குத்தித் தீர்த்துக்கொள்.''

சிலிர்த்துக் கொண்டு புறப்பட்டார் வேடியப்பன். கத்தியும் கையுமாய் நாலடி நடந்தவரின் கால்களுக்குக் குறுக்கே சட்டென்று நீண்டது ஒரு கட்டை. 'ஏய்...ய்..' என்ற அலறலுடன் கவிழ்ந்து விழுந்த வேடியப்பனின் மூக்குக் கண்ணாடி சற்றுத் தொலைவில் போய் விழுந்தது. மூக்குக் கண்ணாடிக்காக இவர் துழாவிக் கொண்டு

'சிகப்பு' ''கார்டினல் பாலிஷ்''
உங்கள் வீட்டுத் தரையைப் பளபளக்கும்
ஒளிவீசச் செய்கிறது.

ரெட்

# கார்டினல்

பாலிஷ்




கார்டினல் (பாலிஷை) சிறிதளவைப் பயன்படுத்தினால் போதும், தரைகள் நல்ல சிவப்பு நிறமேறிப் பிரகாசிக்கத் தொடங்கி விடும். அந்தப் பளபளப்பு நெடுநாள், நிலைத்து, நீடிக்கக்கூடிய தாகும்! 'சிகப்பு' கார்டினல் பாலிஷை உபயோகித்ததும், சாதாரணச் சிமிட்டித் தரையும்கூட, கண்ணைக் கவரும் செவ்வண்ணம் பெற்றுப் பளபளக்கும். உங்கள் வசிக்கும் வீடு உற்சாகமூட்டும் சூழ்நிலையை உருவாக்குகிறது.

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது.)

AICCI TAM






# Nital

MEDICATED PIMPLE CREAM

(நிடால் முகப்பரு க்ரீம்)

விலை
ரூ. 1/90

## 7 நாட்களில்

**கிருமிநாசினி கலந்த நிடால் உங்களுடைய சருமத்தை சிரமமின்றி சுத்தப்படுத்துகிறது. டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுகிறது. இனிமையான மணம் நிறைந்தது.**

மருந்து கலந்த நிடால் முகப்பரு க்ரீம் உங்கள் சருமத்தில் தோன்றும் பருக்களை ஒருவித அபாயமுமில்லாமல் அகற்றி விடுகிறது. சருமத்துக்கும் பாதுகாப்பளிக்கிறது சருமத்தின் அடித்தளம்வரையில் இறங்கி கிருமிகளை நாசம் செய்து விடுகிறது. பருக்கள் உலர்ந்து உதிர்ந்து விடுகின்றன. சொட்டையோ தடமோ பின்பு எதுவும் இருக்காது.

யௌவனத்தின் பொலிவை மிகைப் படுத்துவதாலும். சருமத்தின் சுகாதாரத்தை அபிவிருத்தி செய்து பிரகாசப் படுத்துவதாலும் நிடால் முகப்பரு க்ரீம் ஆண்களோ. பெண்களோ. யாவருக்கும் மிகவும் ஏற்றது.




தயாரிப்போருக்கு எழுதி விவரங்கள் அடங்கிய சிறிய புத்தகமொன்றை இலவசமாக பெறுங்கள்.

தயாரிப்போர்:
**கொச்சின் பாம் பிரைவேட் லிட்**
நவரத்ன ஹவுஸ், மந்த்ரா ரோடு
கொச்சி - 2

*சென்னை, மைசூர் மற்றும் ஆந்திர பிரதேசத்திற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்*

**M/s. கணபதி & கோ., 103-104, லிங்கி செட்டித் தெரு, த.பெ.கெ. 1986, சென்னை-1**

இருக்கும் போது, மர்மமாக நீண்ட ஒரு கை மூக்குக் கண்ணாடியை எடுத்துக் கொண்டு 'விலுக்'கென்று மறைந்தது.

"டேய்! வேடி! எழுந்து போ! குத்திக் கொல்லு அதை!" என்று அதட்டிய கனிலால், வேடியப்பன் சட்டை பண்ணாமலிருப்பது கண்டு, "வேறு வழியில்லை. உன்னையும் மெஸ்மெரிஸத் தூக்கத்தில் ஆழ்த்தித்தான் காரியத்தைச் சாதிக்க வேண்டும். பார்! என் கண்களையே பார்! உற்றுப் பார்" என்றார். கைகளால் துழாவியவாறு அப்பாலும் இப்பாலும் அல்லாடினார் வேடியப்பன். கண்ணாடியில்லாத அவருக்கு எல்லாமே மசமசவென்று தெரிந்தது. அவர் எங்கே கனிலாலின் கண்களையே உற்றுப் பார்ப்பது?

"மடையா! இங்கே பார் என்றால் எங்கே பார்க்கிறாய்?" என்று அதட்டிய கனிலாலின் முதுகில் பளாரென்று விழுந்தது ஓர் அறை. திடுக்கிட்டுத் திரும்பியவர் கம்பீரமாக நின்ற உருவத்தைப் பார்த்துப் பல்லைக் கடித்தார். "அற்பப் பயலே! என்னைத் தொட்டு அடிக்க என்ன கர்வம் உனக்கு? இப்போதே உன்னை மெஸ்மெரிஸத்தால் வசப்படுத்துகிறேன், பார். என் கண்களையே பார்! உற்றுப் பார்" என்றவாறு நெருங்கினார்.

ஆனால் அருகில் நின்றிருந்த மனோகரன் சட்டென்று விறைத்து நின்று முறைத்தான். அதற்குக் காரணம் உண்டு. அந்தப் புத்தகத்தில் படித்திருந்தான், மெஸ்மெரிஸம் பண்ணும் எண்ணத்துடன் யாராவது நெருங்கினால் மனத்தை அந்தக் கண்களில் ஈடுபடுத்தாமல் வேறு எங்காவது அலைய விட்டால் மெஸ்மெரிஸம் தீண்டாது என்று.

பத்து நிமிடங்களுக்கும் மேலாகக் கனிலால் செய்த முயற்சி வீணாயிற்று. மெஸ்மெரிஸத் தூக்கம் வராத அந்த உருவத்தைப் பார்த்து வியந்தார் கனிலால். "என்ன ஆச்சரியம்? ஏய், பேயே! யார் நீ?"

"நான் பேய் இல்லை ஸார். யமன்!" மனோகரன் உரக்கக் கத்தினான். "நான் நினைத்தால் இங்கே சமாதியில் தூங்கும் அத்தனை பேரையும் எழுப்பி, உங்களை உற்றுப் பார்க்க வைப்பேன்."

"என்னது?" என்ற கனிலால், பல ஜோடிக் கண்கள் தன் முதுகையே உற்றுப் பார்ப்பது போன்ற உணர்வு ஏற்பட, மெல்லத் திரும்பிப் பார்த்தார். ஆங்காங்கு, மரங்களின் பின்னாலிருந்தும் சமாதிகளின் மறைவிலிருந்தும் பல உருவங்கள் கண்கள்வரை எட்டி நோக்கித் தன்னையே உற்றுப் பார்ப்பதையறிந்து சிணுங்கினார். பிறகு நடுங்கினார். பிறகு "ஏன் அப்படிப் பார்க்கிறீங்க? ஏன்...ஏன்?" என்று அலறவே ஆரம்பித்து விட்டார்.

"சொல்கிறேன், பொறு" என்ற மனோகரன், வேடியப்பனின் கண்களில் மூக்குக் கண்ணாடியைப் பொருத்தி விட்டுச் சொன்னான். "நான்தான் ஸார், உங்க ஹாஸ்டல் மனோகரன். நல்ல வேளை இந்த மனிதரின் மெஸ்மெரிஸப் புஸ்தகம் என் கையில் கிடைத்தது. பெரிய மர்மமே இருந்தது அதில் ஒரு கடிதாக ரூபத்திலே. சொல்கிறேன், கேளுங்க. பல லட்சம் ரூபாய்க்கு வாரிசுதானே இந்தக் குழந்தை. இது செத்துத் தொலைந்தால் அத்தனை சொத்தையும் பங்கு போட்டுக் கொள்ளலாம் என்று ஆசைப்பட்ட பங்காளிகள் கூட்டம் இந்த மனுஷனைத் தயார் செய்து அனுப்பியிருக்கிறது. அதுவும் உங்கள் மூலமாகவே கொல்ல வைத்து, அத்தனை சொத்துக்கும் கார்டியனை உங்களை ஜெயிலிலே தள்ளிவிடத் திட்டம் போட்டிருக்காங்க. ஒரே கல்லில் இரண்டு மாங்காய் அடிக்கப் பார்த்தாங்க. அயோக்கியங்க. ஹூம்! நான் இருக்கிற மட்டும் அது நடக்குமா?"

"அயோக்கியப் பயலே!" வேடியப்பன் பாய்ந்தார் கனிலாலின் மீது. "நீ நல்லா இருப்பாயாடா!" கனிலாலின் கவனம் மாறுபட்டதால், மெஸ்மெரிஸத் தூக்கம் கலைந்து போன குழந்தை அபிதா, 'ஓ'வென்று அழுதவாறு ஓடிவந்து வேடியப்பனின் காலைக் கட்டிக் கொண்டது. அதைப் பாசத்துடன் தூக்கிக் கொண்டார் வேடியப்பன்.

"நில்லுங்க மிஸ்டர்!" நழுவப் பார்த்த கனிலாலைப் பிடித்து நிறுத்தினான் மனோகரன். "உங்கள் ஆராய்ச்சியின் முடிவையும் தெரிந்து கொண்டு போங்க. அதோ பாருங்க பேய்!" என்று சுட்டிக்காட்டினான். தலைவிரிகோலமாகப் பேய் ஒன்று நெடிதுயர்ந்து நின்று ஆடி மின்னியது கண்டு எல்லோரும் 'பே' என்றலறினார்கள். விழுந்து விழுந்து சிரித்தான் மனோகரன். "முட்டாள்களா! அது ஒரு 'பைன்'மரம்டா. காற்றிலே ஆடறது. அதன் கிளையும் உருவமும் அசல் மனுஷன் மாதிரியேயிருக்கு. ரோட்டிலே வரும் கார் வெளிச்சம் பட்டால் பெரிய பேய் உருவம் மாதிரி தெரியறது. அவ்வளவுதான். அதைப் பார்த்து விட்டுப் பேய் பேய் என்று பயப்படுறாங்க இந்த ஊரிலே!" இப்படி அவன் புதிரை விடுவித்ததைக் கேட்டு, மனோகரன் "தைரியசாலிதான், பெரிய மெஸ்மெரிஸ மேதைதான்" என்று ஒப்புக் கொண்டனர் யமன்கள். "புள்ளைங்களா. கண்ணுங்களா!" என்ற குரல் கேட்டு வெலவெலத்துப் போய்த் திரும்பிப் பார்த்தார்கள்.

போலீஸ் புடைசூழ, அல்சேஷன் நின்றிருந்தான். "இந்த மந்திரக்காரனைப் பார்த்ததிலேயிருந்தே எனக்குச் சந்தேகமிருந்தது. உங்களை அனுப்பிட்டுத் தூங்கப் போனப்பதான் குழந்தையைக் காணோமென்னு திகைக்கப் போயிட்டேன். இந்த ஆள் என்னமோ செய்யப் போறான்னு சந்தேகம் வந்துடுச்சு. உடனே போலீசுக்குப் போய்ச் சொல்லி அவங்களையும் கூடவே கூட்டிக்கிட்டு வந்துட்டேன். கொஞ்சம் நகருங்க, மந்திரக்காரருக்குக் காப்புப் போடட்டும்" என்று போலீஸ்காரர்களுக்கு வழி வகுத்துக் கொடுத்தான். "கண்ணு, மனோகரா! ஐயா மானத்தைக் காப்பாற்றிட்டே. அதோட, ஊரார் பயந்த பேய் ரகசியத்தையும் சர்வ சாதாரணமா கண்டு பிடிச்சுட்டே. நாளைக்குப் பாரேன், ஊரே உன்னைக் கொண்டாடப் போகுது" என்று அல்சேஷன் பாராட்டிப் பேசினான். மனோகரனுக்கு நன்றி கூறவும் முடியாதவாறு வேடியப்பனுக்குத் தொண்டை அடைத்தது.

காலரைத் தூக்கி விட்டுக் கொண்டு மிதப்புடன் வெற்றி நடை போட்டான் மனோகரன். அவனை மற்ற யமன்களும் பின்தொடர்ந்தனர்.



# வட்டமேஜை

- ஆசிரியர்கள் ஊதிய உயர்வு
- ஒரிஸ்ஸா பிரச்னை
- பெங்களூர் தமிழ்ச் சங்கம்
- வியட்நாம் பற்றி

**ப**ள்ளி ஆசிரியர்களுக்கும், எழுத்தர்களுக்கும் 90–4–110–3–140 என்று ஊதியம் வரையறை செய்துள்ளார்கள். முதலில் ரூ. 4 ஆக உயரும் ஊதியம் 5 ஆண்டுகளுக்குப் பிறகு ரூ. 3 ஆக உயருகிறது. என்ன விசித்திரம்! அதிசயமான உயர்வு. அனுபவம் பெறப் பெற ஊதிய உயர்வு குறைந்தா போக வேண்டும்? இதுதான் எங்கள் தலையெழுத்துப் போலும். அரசாங்கம் ஊழியர்களை வாழ வைக்கும் பண்பு எத்துணை சிறந்து விளங்குகிறது! பின்னர் ஆசிரியர்களைக் குடும்பக் கட்டுப்பாட்டுக்கும் ஆள் தேடச் சொல்லுகிறார்கள். ஆசிரியர்களுக்குக் கல்விப் பணியா இல்லை, குடும்பக் கட்டுப்பாடு சேவையா? எதுவென்றே புரியவில்லை.

பாபநாசம்
9–9–66 ''பாதிக்கப்பட்டவர்''

**த**மிழ்நாடு 10–9–66 இதழில் கீழ்க்கண்ட வாசகங்கள் காணப்படுகின்றன. காமராஜுக்கு ஒரிஸ்ஸா முதலமைச்சர் திரு திரிபாதி எழுதிய கடிதத்தில் ஒரு பகுதி: ''பொதுத் தேர்தல் மிக மிக நெருங்கி வரும் சமயத்தில் நிர்வாக ஒழுங்கு, அரசியல் நேர்மை பற்றிச் சற்றுப் பழங்காலக் கருத்துக்கள் கொண்டிருக்கும் என்னால் காங்கிரஸ் கட்சிக்குச் சிறிதும் உதவி இருக்காது என்று கட்சியில் செல்வாக்குள்ளவர்கள் உண்மையாகவே எண்ணுகின்றனர்'' — இந்த வாசகங்களின் உட்கருத்தை மக்கள் நன்கு யோசித்து உணர வேண்டும்.

தூத்துக்குடி
10–9–66 கா. கணபதி

**க**ன்னட மாநிலத்தின் தலைநகராகிய பெங்களூரில் பல லட்சம் தமிழர்கள் வாழ்கிறார்கள். தமிழ் மொழி, கலை, பண்பாடு ஆகியவற்றைப் போற்றி மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்னும் நோக்கத்துடன் எத்தகைய சாதி, சமய கட்சி வேறுபாடுகளும் இன்றிப் பெங்களூரில் 1950 முதல் தொடங்கப்பட்ட இச்சங்கம் பணியாற்றி வருகிறது. சொற்பொழிவுகள், மொழி வகுப்புக்கள், இலக்கிய வகுப்புக்கள், நூலகம் முதலியவற்றை நடத்தி வருகிறது. இன்னும் பல துறைகளிலும் எங்கள் நடவடிக்கைகளை விஸ்தரிக்க விரும்புகிறோம்.

தமிழ்ச் சங்கத்துக்கு ஒரு நல்ல கட்டடம் தேவைப்படுகிறது. நமது சங்கப் பணிகளைப் பாராட்டி ஊக்கப்படுத்தும் வகையில் தமிழக அரசு, ரூ. 50,000 நன்கொடை வழங்க முன்வந்துள்ளது. மைசூர் அரசினரும் உதவுவதாக உறுதி கூறியுள்ளனர். மைசூர் மாநில முதலமைச்சர் திரு எஸ். நிஜலிங்கப்பாவைத் தலைவராகக் கொண்ட கட்டட நிதிக் குழு ஒன்றை அமைத்து நிதி திரட்டும் பணியில் சங்கம் இறங்கியுள்ளது. தெலுங்கு மொழி பேசும் திரு காடி செல்வராய செட்டி என்னும் அன்பர் நம் சங்கத்துக்கு இரண்டரை ஏக்கர் நிலம் வழங்கியுள்ளார். இது மிகவும் போற்றி மகிழத் தக்கது. பெங்களூர் நகரசபையும் தக்க இடத்தில் ஒரு 'மனை' வழங்க முடிவு செய்துள்ளது.

இதனைக் கண்ணுறும் அனைவரும் சிறந்ததும் பெரியதுமானதோர் அறத்துக்கு உதவுகிறோம் என்ற மகிழ்ச்சியுடனும் பேருள்ளத்துடனும் இயன்றளவு பெருந்தொகையினை நன்கொடையாக அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

105, வீரப்பிள்ளைத் தெரு, பெங்களூர் 1 — வித்வான் இராச. இராசமாணிக்கம், பொருளாளர்,
1–9–66 பெங்களூர் தமிழ்ச் சங்கம்

**தெ**ன் கிழக்கு ஆசிய அரசியல் அரங்கத்தில் ஜனநாயகத்துக்கும், சர்வாதிகாரத்துக்கும் நடைபெறுகிற பலப் பரீட்சையாகும், இன்று வியட்நாமில் நடக்கின்ற போர். சீன–பாரத உறவு முன் எப்போதையும் விட இப்போது மிகவும் க்ஷீணமடைந்த நிலையில் இருக்கிறது. சீனாவுடன் உறவு சீரடையத் தற்போது எந்த வழியுமில்லை என்பதை நம் பிரதமரே ஒப்புக் கொள்ளுகிறார்.

'என் எதிரியின் எதிரி எனக்கு நண்பன்' என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. செஞ்சீனா நம் கைமீறிப் போய்விட்ட நிலையில் அதன் ஆணவத்தை அடக்க ஒரு நாடு துணிந்திருக்கும்போது நாம் அனுசரிக்க வேண்டிய கொள்கை என்ன? மேலும் ஐந்தாண்டுத் திட்டங்களுக்காக அமெரிக்காவிடம் பல் நூறுகோடி டாலர் கடன் வாங்கி வைத்திருக்கிறோம். இந்த நிலையில் நாம் அதைக் 'காலை வாரிவிடும்' பாவனையில் காரியத்தில் ஈடுபட்டால் அது அந்நேரத்தில் நமக்கு எவ்வளவு பாதகமான சூழ்நிலையை உண்டாக்கி வைக்கும் என்பதை நமது பாரதப் பிரதமரும் காங்கிரஸ் 'பெருந் தலை'களும் யோசித்துப் பார்க்க வேண்டும்.

விருத்தாசலம் 'பார்த்திபன்'

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

நல்ல
புகையிலை
என்றாலே
நல்ல
சிகரெட்




பனாமா
ஒரு
நல்ல
சிகரெட்

செழுமையிலும் மென்மை
யிலும் உன்னதமாகத்
தேர்ந்தெடுத்த
வர்ஜீனியாப்
புகையிலைகள்! பனாமா
சிகரெட்டிலே நிபுணத்து
வத்துடன் அவை
கலவைபெற்றுள்ள
பயன், பல்லாயிரம்
மக்களுக்குப்
பரவசமூட்டும்
தன்மையான
புகைநயம்!

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது



கோல்டன் டொபாகோ கம்
பிரைவேட் லிமிடெட்.
பம்பாய்-56

Registered as a Newspaper in C